# "என்ன மென்மையான,
# மனோகரமான நறுமணம்!"

என்கிறார்

## ஜமுனா

"லக்ஸ் டாய்லட் சோப்பிலுள்ள புது மலர்போன்ற நறுமணத்தை நான் விரும்புகிறேன்."




உலகத்திலுள்ள அழகிய பெண்மணிகள் செய்வதைப் போல் நீங்களும் செய்யுங்கள் — சுத்தமான, வெண்மையான லக்ஸ் டாய்லட் சோப்பை உங்களுடைய தினசரி அழகு சாதனங்களில் ஒன்றாகச் செய்துகொள்ளுங்கள். மிருதுவான, நறுமணமுள்ள அதன் நுரை உங்களுடைய வதனத்தை சுத்தம் செய்து, மென்மையாக்கி, புத்துணர்ச்சியையளித்து, உங்களுடைய வனப்பை அதிகப்படுத்தட்டும்.

மேனி அழகிற்கு பெரிய சைஸ் சோப்பை உபயோகியுங்கள்.




# லக்ஸ்
# டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

இந்தியாவில் தயாரித்தது

LTS. 432-50 TM

# கல்கி பொருளடக்கம்

1955 நவம்பர் 13



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


நவம்பர் 13உ முதல் சென்னையெங்கும்
மாடர்ன் தியேட்டர்ஸ்
மஹேஸ்வரி
டைரக்ஷன்: T.R.ரகுநாத்
சாவித்திரி * ஜெமினி கணேசன் · தங்கவேலு ·
M.N.ராஜம் . . முத்துலக்ஷ்மி.



மலர் 15 } தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற { மன்மத ௵
இதழ் 15 } தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் { ஐப்பசி 27

# என்றும் இளைஞர் எங்கள் நேரு!

பாரத நாட்டின் சரித்திரத்திலே இவ்வாரத்தை மங்களகரமான ஒரு வாரம் என்று கூறுவது பொருந்தும்.

பாரத அன்னை பெற்றெடுத்த அருந்தவப் புதல்வரான ஜவாஹர்லால் நேரு அவர்களின் ஜயந்தி விழா தீபாவளி வாரமான இவ்வாரத்தில் நாடெங்கும் வைபவமாகக் கொண்டாடப் படுகிறது.

பாரத மக்களின் உள்ளத்தை மாத்திரமல்ல, உலக மக்களின் உள்ளத்தையே கொள்ளை கொண்ட நேருஜிக்கு அறுபத்தாறு வயது பூர்த்தியாகி அறுபத்தேழாவது வயது ஆரம்பமாகிறது.

வயதின் முதிர்ச்சி அவரது அறிவின் ஒளியை அதிகரிக்கிறது. நாட்டின் நலத்திலேயே மனம் கலந்து நிற்பதால் இளமையும் ஆற்றலும் வளர்கின்றன.

கர்ம வீரர்களின் வயதை அவரவர்களது வாக்கு வலிமையைக் கொண்டுதான் நிர்ணயிக்க வேண்டும் என்ற அறிஞரின் வாக்குக்கு நேருஜி இலக்கண புருஷராக விளங்கி வருகிறார்.

கவிச் சக்கரவர்த்தி பாரதியார் கண்ட கனவு ஜவாஹர்லால்ஜியின் மூலம் நிறைவேறி விட்டது என்பதை யார் மறுக்க முடியும்?

ஒளிபடைத்த கண்கள், உறுதிகொண்ட நெஞ்சு, களிபடைத்த மொழி, தெளிவு பெற்ற மதி, சிறுமை கண்டு பொங்கும் தன்மை, எளிமை கண்டு இரங்கும் குணம், இவையெல்லாம் ஒருங்கே அமையப் பெற்றுத் திகழ்கிறார் நமது அருமைத் தலைவர்.

"ஒற்றுமைகள் உய்யவே—நாடெல்லாம் ஒரு பெருஞ் செயல் செய்வாய்"

என்று வருங்கால பாரத இளைஞனை அழைத்தார் பாரதியார்.

நேருஜியோ நாடெங்கும் ஒற்றுமை நிலவும்படி பல அருஞ் செயல்கள் செய்தும், பாரதத்தின் பண்டைப் புகழை உலகெங்குமே நிலைநிறுத்தியுள்ளார்; வருங்காலப் பெருமைக்கு அஸ்திவாரம் அமைத்துள்ளார். பாரத மக்கள் அனைவரின் அன்பையும் ஆதரவையும் பெற்றுள்ள ஜவாஹர்லால்ஜி உலக மக்களின் மதிப்புக்கும் ஏகோபித்த பாராட்டுதலுக்கும் பாத்திரமாகி உலக நாடுகளிடையே பாரதத்தின் செல்வாக்கு ஓங்கும்படி செய்திருக்கிறார்.

அரசியல் அகங்காரத்துக்கும் அணுகுண்டு வெறிக்கும் இலக்காகித் தவிக்கும் உலகத்தை உய்வித்து, அறநெறியில் செலுத்தி அமைதி நிலவும்படி செய்யும் புனித கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ள ஜவாஹர்லால்ஜியை அகில உலகமும் போற்றிக் கொண்டாடுகிறது.

அவருடைய தலைமையிலே பாரத நாடு பல துறைகளிலும் அதி வேகமாக முன்னேறி வருகிறது.

உலகமே பிரமிக்கும்படியான பல்வேறு ஆக்கத் திட்டங்கள் சுதந்திர இந்தியாவில் உருவாகி வருகின்றன.

தொழில் திறமையிலும் ஆயுத பலத்திலும் உலகத்திலே முன்னணியில் இருந்து வரும் வல்லரசுகள் இந்தியாவின் நட்பைப் பெறப் போட்டி போடுகின்றன என்பது உண்மை.

ஜவாஹர்லால்ஜியின் தலைமையில் முன்னேறி வரும் பாரத மக்கள் பாக்கிய சாலிகள் என்பதில் ஐயமில்லை.

பாரத நாட்டின் புகழுக்கும் பெருமைக்கும் காரண புருஷரான நேருஜி நீடூழி வாழ்ந்து பாரதநாட்டின் புகழை மேலும் மேலும் வளர்க்க இறைவன் அருள் புரிய வேண்டும் என்று வாழ்த்தி வணங்குவோமாக!

# புது ஏற்பாடு

ஆந்திர ராஜ்யத்தைப் பிரித்தாய்விட்ட படியால் மதராஸ் ராஜ்யத்தை இன்னும் துண்டு செய்தேதான் தீரவேண்டும் என்று சிலர் வாதாடுகிறார்கள். ஒரு தவறு யாரேனும் செய்து விட்டால், இன்னும் பல தவறுகள் செய்து கொண்டே போகவேண்டும் என்பது கட்டாயமில்லை, நல்லதும் ஆகாது. ஒரு நாள் ஒழுக்கம் தவறிவிட்டால் பிறகு சீலமே வேண்டியதில்லை என்று யாரேனும் சாஸ்திரம் சொல்லுவார்களா! ஒரு நாள் கதவைத் திறந்து போட்டதால் திருடர்கள் புகுந்து விட்டார்கள் என்று பிறகு ஒவ்வொரு இரவும் கதவை மூடாமலே படுக்க வேண்டுமா! சிறுகச் சிறுகக் குட்டி ராஜ்யங்களுக்கு சுதந்திரம் குறையும். இது அரசியல் விதி. இதற்குமேலும் வெட்டுண்டால், இருக்கும் சுதந்திரமும் இழந்து செல்வாக்கின்றி, செல்வமின்றி, மதிப்பின்றி நிற்போம். சுவர்கள் எழுப்பிப் பங்கு போட்டுக் கொள்ளலாம். மேல் கூரை யில்லாத வீடு—குட்டிச் சுவர்கள்தான்—நிற்கும். மொழிக்கு ஒரு ஆபத்தும் இல்லை. மொழியை வளர்க்கவோ அல்லது காப்பாற்றவோ அரசியல் சுவர் வேண்டியதில்லை.

உத்தியோகங்களுக்கு ஆசைப் படுகிறவர்கள் இனிமேல் ஹிந்தி படித்துத்தான் தீரவேண்டும். மதிக்கத்தக்க எந்த ஸ்தானம், எந்த உத்தியோகம் வேண்டுமாயினும் ஹிந்தி படிக்கா விடில் அதோகதிதான். பதினைந்து தலைமுறை ஆங்கிலம் படித்தோம். இருபத்தைந்து வருஷங்களாவது ஹிந்தி படித்து இரண்டு தலைமுறைகள் அதில் கழித்தால்தான் சர்க்கார் உத்தியோக ஏணியில் ஏற முடியும்.

இதுவெல்லாம் வேறு விஷயம். உத்தியோகங்களைப் பற்றிய பேச்சு ஒருபுறம் இருக்க, நாட்டின் நலத்துக்காகவும் மக்களின் சுதந்திரத்தைக் காப்பதற்கும் அரசியலில் போதிய அளவு செல்வாக்கு வேண்டும். அரசியல் செல்வாக்கு வேறு. சம்பளம் பெறும் உத்தியோகங்கள் வேறு. நாடு துண்டுபட்டுப் போவதால் அரசியல் செல்வாக்குக்குப் பெரும் அபாயமே ஆகும் என்பது திண்ணம். காரியம் கெட்டுப் போன பின் அறிவு வரும். ஆனால் அந்தப் பின் புத்தியில் பயனில்லை.

பிறருடைய செல்வாக்கின் காரணமாக, என்ன நடக்கப்போகிறது என்பதல்ல கேள்வி. சோதிடம் பார்ப்பதில் பயனில்லை. எது நல்லது என்பதை அறிந்து அதற்காக நாம் முயற்சி செய்ய வேண்டும். அது நம்முடைய கடமை. நன் முயற்சியில் நஷ்டம் கிடையாது.

# ராஜாஜி எழுதும் புதிய தொடர்

'சக்கரவர்த்தித் திருமகன்' என்னும் அருமையான தொடர் சென்ற வாரம் பூரணமடைந்ததும், நமது அன்பர்களிடமிருந்து கடிதங்கள் வந்த வண்ணமாக இருக்கின்றன. "ராஜாஜியின் அடுத்த தொடரை உடனே எதிர்பார்க்கலாமா!" என்றெல்லாம் நமக்குப் பல தமிழன்பர்கள் மிக்க பக்தியோடு கேட்டு எழுதி யிருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி தரும் ஒரு செய்தியை இங்கே அறிவிப்பதில் நாமும் மகிழ்ச்சி அடைகிறோம்.

காந்திஜியின் பிரார்த்தனைச் சொற்பொழிவுகள் உலகப் பிரசித்தமானவை. சத்திய சோதனையிலே தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் கொண்டு காந்திஜி பக்தியோடு வழங்கிய அந்தச் சொற்பொழிவுகள் நாடெங்கும் விளைந்த புனிதம் சரித்திரப் புகழ் வாய்ந்தாகும். ஏகநாதருடைய உபதேசங்களைப் போலவும், மார்க்க அரேலியரின் ஆத்ம சிந்தனைகளைப் போலவும், புத்த பெருமானின் கருணை மொழிகளைப் போன்றும், தத்துவ தரிசனங்களாகவும் உண்மை விளக்கங்களாகவும் அமைந்துள்ளன அவை.

காந்திஜி அவ்வப்போது எழுதி வந்த பக்தி வசனங்களை ஆங்கிலத்தில் நவஜீவன் ஸ்தாபனத்தார் ஒன்று திரட்டி வெளியிட்டிருக்கிறார்கள். நமது தலைவர் ராஜாஜி இந்த பக்தி வசனங்களையெல்லாம் ஆய்ந்து தொகுத்து மொழிபெயர்த்து வாரந்தோறும் 'கல்கி'யில் தொடர்ந்து எழுதி வருவார்கள் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம். காந்திஜியின் ஆதார மந்திரமாக விளங்கிய 'ரகுபதி ராகவ' என்ற சுருதிச் சொற்களே இந்தப் புதிய தொடரின் தலைப்பாக அமையும். இத் தொடர் அடுத்த வாரம், அதாவது நவம்பர் இருபதாந் தேதி 'கல்கி' இதழிலிருந்து ஆரம்பமாகிறது.

## ஓவியர் சந்திரா நினைவுச் சித்திரப் போட்டி

சந்திரா நினைவுச் சித்திரப் போட்டிக்கு அறுநூற்று அறுபது வர்ணச் சித்திரங்கள் வந்திருந்தன. அவற்றில் ஆறு சித்திரங்கள் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சித்திரம் எழுதிய ஓவியர்கள் ஒவ்வொருவருக்கும் ரூபாய் ஐம்பது அனுப்பி வைக்கப்பட்டது. சித்திரங்கள் தீபாவளி மலரில் பிரசுரமாகின்றன. விவரம் வருமாறு:

"அலங்கார சுந்தரி"
ஆ. கே. உமாபதி,
மானம்பூச் சாவடி, தஞ்சாவூர்

"குறி சொல்லக் கேளம்மே!"
சரஸ்,
அமைந்தகரை, சென்னை-30

"மலரன்னமும் மடவன்னமும்"
என். கோமதிநாதன்,
பழவங்காடி, திருவனந்தபுரம்

"கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ நான்"
ஏ. வி. எஸ். ரமணி,
கே. வி. குப்பம், வட ஆற்காடு

"தலை வாரிப் பூச்சூட்டும் தாய்"
எஸ். ராஜேந்திரன்,
மயிலாப்பூர், சென்னை-4

"சுடர் விளக்கு"
என். நாக வெங்கடாசலம்,
சித்திரகலா வித்தியாசாலை, சென்னை-3

# கல்கி அன்பர்களுக்கு

இந்த ஆண்டு தீபாவளி மலர் அச்சாகி அதைக் கையிலே எடுத்துப் பார்க்கும் போது பேராசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவு மனத்தில் பசுமையாக நிற்கிறது. அவர் மறைந்த பிறகு வெளியாகும் முதலாவது தீபாவளி மலர் இது. அந்தப் பேராசிரியரின் நினைவுக்கு அஞ்சலி செய்து இந்த மலரைத் தமிழன்னையின் பாதங்களில் வைத்து வணங்குகிறோம்.

★

தமிழன்பர்களுக்கு உவகை தரும்முறையில் மலரின் அட்டைச் சித்திரத்திலே நமது ஓவியர் மணியம் வர்ணாலங்காரமாகத் தமிழ் நாட்டின் பண்பாட்டைச் சுடர் வீசச் செய்கிறார். மலரைத் திறந்ததும் பேராசிரியர் கல்கி அவர்களின் அருமையான பாடல் ஒன்று, கண்ணுக்கு இனிய ஓவியத்தில் கண்ணன் திருவுருவத்தோடு காட்சி தருகிறது. நமது தலைவர் ராஜாஜி 'ஆலமரத்தின் அடியிலே' ஞான நிழலில் நம்மை நிறுத்தி, எளிய தமிழில் அரிய மந்திரக் கருத்தை உபதேசிக்கிறார். டி. கே. சி. அவர்களின் 'கபிலர் நாடகம்' முதன் முதலாக இந்த மலரிலே வெளியாகி உல்லாசத்தோடு வானத்துக்கும் பூமிக்குமாகக் கவிதைப் பாலம் அமைக்கிறது. குன்றக்குடி அடிகளார் சமய மறுமலர்ச்சியிலே அறிவு மணம் வீசும்படி அறவுரை நல்கியிருக்கிறார்.

சுரேஷ் ராம் வினோபாஜியின் உயர்ந்த கருத்துக்களை எழிலோடு எடுத்து வழங்குகிறார். இலங்கை மந்திரி நடேச பிள்ளை, லெப்டினன்ட் கவர்னர் க. சந்தானம், பேராசிரியர் ரா பி. சேதுப் பிள்ளை, தில்லி உயர் மன்ற நீதிபதி டி. எல். வெங்கடராமையர், டாக்டர் அருணாசலம், பேராசிரியர் அ. சிதம்பரநாத செட்டியார் ஆகிய அறிஞரின் அரிய கட்டுரைகளும், ஸ்ரீமதி பால ஸரஸ்வதியின் மணியான நாட்டிய நினைவுகளும், டி. கே. ஷண்முகம் அவர்களின் ரசமான நாடக அரங்கக் குறிப்புகளும், ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில், சிறந்து விளங்குகின்றன. கல்கி அவர்களின் அமர சிருஷ்டியான உயர்ந்த சிறுகதை ஒன்றும், காலம் சென்ற 'தீபன்' அவர்களின் உணர்ச்சி மிக்க மனத் தத்துவக் கதை ஒன்றும் மலரின் விசேஷ அம்சங்களாக விளங்குகின்றன. தூரன், அகிலன், பரதன், துறைவன், குகப்ரியை, அழ. வள்ளியப்பா, கவி, மாறன், அநுத்தமா, சங்கர் ஆகியோரின் அழகழகான சிறுகதைகளும், சுந்தா, என். எஸ். சிதம்பரம் ஆகியோரின் சுந்தரப் பாடல்களும், நமது காரியாலயத்தைச் சேர்ந்த எழுத்தாள நண்பர்கள் அனைவரின் சொற் சித்திரங்களுமாக இந்த மலர் இன்றையத் தமிழ் வளர்ச்சிக்குப் பெருமை தரும் அருமையான ஓர் அளவுகோலாக விளங்குகிறது.

ஓவியர் சந்திரா அவர்கள் வரைந்துள்ள மூவர்ண ஓவியம் இதுவரை வெளிவராதது, முகப்புச் சித்திரமாக அமைகிறது.

மணியம் அவர்களின் வர்ணச் சித்திர வரிசைகளும், ஓவியர் ஸ்ரீ கனு தேசாய், ராஜம், ஆகியோரின் சித்திரக் கற்பனைகளும், ராகவன், வர்மா, ரதி, விஜயன் ஆகியோரின் வர்ண ஓவியங்களும், சாமாவின் ஹாஸ்யச் சித்திரங்களும், ரகுவின் அரசியல் காட்சிகளுமாக மலர் கண்ணுக்கும் கருத்துக்கும் ஓரே உவகைக் கோலமாக மிளிர்கிறது. இவற்றுடன், ஓவியர் சந்திரா நினைவுப் போட்டியிலே பரிசு பெற்ற ஆறு சித்திரங்களும் இந்த மலரில் வெளியாகியிருக்கின்றன.

இந்த மலரின் மற்றொரு விசேஷ அம்சமாக, 'மணியம்' அவர்கள் மன்மத மலருக்கு வரைந்துள்ள நான்கு - வர்ணச் சித்திரங்களையும் குறிப்பிட வேண்டும்.

மலரை ஒருதரம் புரட்டிப் பார்க்கும்போது எத்தனை பேருடைய ஏகோபித்த பணி இதை இந்த முறையிலே உருவாக்கியிருக்கிறது என்பதை எண்ணி, இந்தப் பணியில் ஊக்கத்தோடு ஒத்துழைத்த ஒவ்வொருவருக்கும் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அன்பர்களுக்கு ஒரு வார்த்தை: பெரிய அளவில், உயர்ந்த காகிதத்தில், மூன்று ரூபாய் விலையில் இந்த மலரை இவ்வாண்டு வெளியிட்டிருப்பதால் வாரந்தோறும் 'கல்கி' இதழ் படிக்கும் ஒவ்வொரு அன்பருக்கும் அவருடைய சுற்றத்தார் அனைவருக்கும் இந்த மலர் கிட்டுவது சாத்தியமில்லை. எனவே, மலரை வாங்கும் அன்பர்கள் மற்ற அன்பர்களுக்கும் படிக்கக் கொடுத்து மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

மங்களகரமான இந்தப் புனிதப் பண்டிகை தினத்தில் 'கல்கி' அன்பர்கள் அனைவருக்கும் நமது தீபாவளி வாழ்த்துக்கள்.

— ஆசிரியர்

# நான்தான் டீ



**சரியான வழியில் என்னை அனுபவியுங்கள்**

லட்சோப லட்சம் வீடுகளில் நான் விரும்பப்பட்ட போதிலும், எனது உபாஸகர்கள் பலருக்கு என்னிடமிருந்து முழுப்பயனையும் பெறத்தெரியவில்லை.

"5 பொன் விதிகளை" பின்பற்றினால் சோர்வகற்றும் சிறந்த பானமாக நான் பயன்படுவேன் என்று, என்னை வருஷக் கணக்காக, கவனமாகக் கையாண்டவர்களுக்குத் தெரியும்.

ஆகவே வீடு, ஆபீஸ், பாக்டரி, கிளப் அல்லது சிற்றுண்டிச்சாலையில் என்னை நீங்கள் அருந்தும்போது, இந்த "5 பொன் விதிகள்" இருப்பதை சமையலறையில் உள்ளோருக்கு ஞாபகப்படுத்துங்கள்.

## 5 பொன் விதிகள்

1. [illegible]
2. [illegible]
3. [illegible]
4. [illegible]
5. [illegible]

**நான்தான் டீ —5 பொன் விதிகளால் சிறந்த பானம் ஆவேன்**

TEA BOARD INDIA




"சின்னக் குழந்தைகள் போல்விளையாடிச் சிரித்துக் களித்திடுவான்"

என்று பாரதியார் கண்ணனைப் பாடினார். குழந்தை உள்ளத்தோடு சிறுவர்களின் மத்தியில் நேருஜி விளையாடுவதும், சருக்குவதும், அவர்களோடு பேசிக் களிப்பதும், தினந்தோறும் காலையில் தாம் வளர்க்கும் 'பண்டா' என்ற காட்டுப் பூனைக்கு உணவு கொடுத்துக் கொஞ்சுவதும், புலிக்குட்டியைத் தட்டிக் கொடுப்பதுமான காட்சிகளை மேலே உள்ள படங்களில் பார்க்கிறோம். இந்தக் காட்சி ஒவ்வொன்றிலுமே அவருடைய குழந்தைப் பண்பின் ஜயந்தியைக் காணலாம்.

அறுபத்தாறு வயது வாலிபர்



# என்ன சேதி?

## சித்தூர் எல்லை

தமிழாந்திர எல்லையைப் பற்றிய சமாதானக் கூட்டம் கலைந்தது. பேராசைக்காரர்களோடு சமாதானமாக முடிப்பது கஷ்டம். இரண்டு தரப்பு மந்திரிகளும் மிக நல்லவர்கள். 'நமக்கு என்னத்துக்குக் கெட்ட பெயர் ஊருக்குத் திரும்பிப் போய்ச் சமாதானம் சொல்லுவது கடினம், கமிஷன் நியமித்து விட்டு அதிலென்ன முடிந்தாலும் அதன்படி சொல்லிச் சமாதானப் படுத்தலாம், நமக்கு என்னத்துக்கு வம்பு' என்ற நோக்கத்தின் பேரில் கலைந்திருக்கிறார்கள். நம்முடைய வக்கீல் வெகு நேரம் பேசினார் என்று கட்சிக்காரர் சந்தோஷம் அடைவது போல் ஆந்திர மக்கள் தங்கள் மந்திரியைப் போற்றுவார்கள்.

இரண்டு கமிஷன்கள் ஏற்படுத்தி பன்னாரி மைசூருக்குத் தரப்பட்டது. இப்போது அதை மாற்ற வேண்டும் என்று சிபார்சு செய்யப் பட்டிருக்கிறது, புது ஏற்பாட்டில். மாறி மாறி வருவதே உயிருக்கு அடையாளம்!

## அகில இந்திய பாலர் தினம்

பிரதமர் நேருஜியின் பிறந்த தின விழாவை ஒட்டி, அகில இந்திய பாலர் தினத்தைக் கொண்டாடப் போகிறார்கள். சிறு குழந்தைகளிடம் மிகுந்த பிரியமுள்ளவர் நமது நேருஜி என்பது எல்லாரும் அறிந்த விஷயம். அவருடைய பிறந்த தினத்தில் குழந்தைகள் விழாக் கொண்டாடுவது மிகவும் பொருத்தமாகும்.

பாரதீய பால விகாஸ் ஸமிதி என்னும் ஸ்தாபனத்தார் இந்த விழாவுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்த ஸ்தாபனம் ஜினீவாவிலுள்ள அகில உலகச் சிறுவர் நல ஸ்தாபனத்துடன் இணைக்கப் பட்டதாகும்.

நவம்பர் 12-ந் தேதி யன்று அசோக் விஹாரில் குழந்தைக் காட்சி நடைபெறுகிறது. அதில் தேர்ந்தெடுக்கப் பட்ட குழந்தைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

13-ந் தேதி யன்று மாலை பல்வேறு பள்ளிக்கூடக் குழந்தைகளின் தேகப் பயிற்சிக் காட்சிகள் நடைபெறும். இந்தக் கொண்டாட்டம் கார்ப்பரேஷன் 'ஸ்டேடியத்தில்' நடைபெறப் போகிறது.

## காரி திருவிழா

சனி என்றும், சனிசரன் என்றும், சனிச் சரன் என்றும் பல நாமங்களிலே விளங்கும் சனிகிரகத்துக்குப் பழைமையான தமிழில் 'காரி', 'குட்டன்', 'முடவன்', 'கதிர் சேய்','மந்தன்' எனப் பல பெயரிட்டனர், நமது முன்னோர். சோதிட நூலில் 'சனிப் பெயர்ச்சி' என்பதைப் பற்றி மிக மிக விரிவாகப் பலன்கள் கூறுவார்கள். சோதிடம் ஒரு புறம் இருக்க, வான நூல் ஆராய்ச்சியாளரும் சனிக் கிரகத்தின் தன்மைகளைப் பற்றிப் பல நுட்பங்கள் பேசுவார்கள். மொத்தத்தில் சனி என்ற கிரகம் நமது நாட்டு மக்களுடைய மரபில் மிகவும் முக்கியம் பெற்ற மூர்த்தியாகும்.

அப்படிப்பட்ட தெய்வத்துக்குத் திருநள்ளாறு ஒரு புனித ஸ்தலம். இப்பொழுது சென்னை மேற்கு மாம்பலத்தில் வெங்கடாசலமய்யர் தெருவிலும் ஒன்பது மாத காலமாக ஒரு கோயில் ஏற்பட்டிருக்கிறது. திருநள்ளாறு க்ஷேத்திரத்திலுள்ள மூர்த்தியைப் போன்றதோர் மூர்த்தியே இங்கும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. விருச்சிக ராசியில் சனி பிரவேசிக்கும் தினத்தை (நவம்பர் 12-ம் தேதி சனிக்கிழமை விடியற் காலை நான்கு மணி) விசேஷ அபிஷேக அர்ச்சனைகள் செய்து கொண்டாடத் தீர்மானித்திருக்கிறார்கள்.

மேற்கு மாம்பலத்தில் நடக்கும் இந்த ஆராதனையைப் பக்தர்கள் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

### மலாய் நாட்டில் நாகஸ்வர ராஜா

அரைத் தூக்கத்திலும், உலாவும்போதும், வாசிக்கும்போதும் நம்மை யறியாமல் ஏதாவது ஒரு மெட்டை இழுத்துக் கொண்டிருந்தோமென்றால், அது அநேகமாக நாகசுர ராஜா திருவெண்காடு டி. பி. சுப்ரமண்யம் அவர்கள் மெட்டாகத்தான் இருக்க வேண்டும். திருவெண்காடு சுப்பிரமண்யம் அவர்களின் நாகசுரத்தில் எப்படியோ அத்தகைய இன்பம் கலந்து போயிருக்கின்றது. அத்தகைய கலைஞரின் தேனிசையைப் பருகும் வாய்ப்பு இப்பொழுது மலேயாவிலுள்ள மக்களுக்குக் கிடைத்திருக்கிறது. திருவெண்காடு சுப்ரமணியம் அவர்கள் நவம்பர் மாதத்தில் தமது குழுவினருடன் மலேயாவில் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். சிங்கப்பூர், கோலாலம்பூர், பினாங்கு, மலாக்கா மற்றும் அங்குள்ள முக்கிய நகரங்களில் எல்லாம் அவர் நாகசுரக் கச்சேரி நடக்கப் போகிறது. இந்த அருமையான சந்தர்ப்பத்தைப் பரிபூரணமாக மலேயா வாழ் மக்கள் அநுபவித்துப் பயன் பெறுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# தொண்டைமான்-கவர்னர் ஜெனரல் பேச்சு

கொழும்பு, நவம்பர் 5.

இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர் ஜனாப் ஏ. அஸீஸ் சில மாதங்களுக்கு முன்னால் கவர்னர் ஜெனரல் ஸர் ஆலிவர் குணதிலகாவைச் சந்தித்து இலங்கை இந்தியர் நிலைமையைப் பற்றி மனம் விட்டுப் பேசினார். அதே போல இவ்வாரம் ஸ்ரீ எஸ். தொண்டைமானும் ஸர் ஆலிவரைச் சந்தித்துச் சுமார் ஒன்றேகால் மணி நேரம் சம்பாஷணை நடத்தினார். அவர்கள் என்ன பேசினார்களென்பது உத்தியோக பூர்வமாக வெளியாக வில்லை யென்றாலும், இப்பொழுது ஆஸ்திரேலியாவுக்குச் சென்றுள்ள பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலை இலங்கைக்குத் திரும்பியதும் இந்தியர் பிரச்னை முக்கியத்துவம் பெற இருப்பதினால் அதைப் பற்றியே கவர்னர் ஜனரலும் ஸ்ரீ தொண்டைமானும் அபிப்பிராயம் பரிமாறிக் கொண்டிருக்க வேண்டு மென்று ஊகிக்கப்படுகிறது. இலங்கையில் அதிவிரைவில் நடைபெற விருக்கும் பொதுத் தேர்தலில் இந்திய வம்சாவளியினர்களின் நிலைமையைப் பற்றியும் அவர்கள் கலந்து பேசியதாகத் தெரிய வருகிறது.

பாரதப் பிரதமர் நேருவுக்கு இலங்கை அனுப்ப எண்ணியிருந்த கடிதம் இன்னும் அனுப்பப்படவில்லை. பிரதமர் ஸர்ஜான் இலங்கைக்குத் திரும்பியதும் இந்தக் கடிதம் அனுப்பி வைக்கப்படு மென்று உத்தியோக வட்டாரங்களில் கூறப்படுகிறது. இதற்கிடையில் இங்கு இந்தியப் பிரஜைகளாக வாச பர்மிட்டுகளுடன் வசிப்பவர்களை அந்தப் பர்மிட்டுகள் காலாவதி யாகியவுடன் வெளியேற்ற அரசாங்கம் அதி தீவிரமாகவும் கட்டுப்பாடாகவும் நடவடிக்கை யெடுத்து வருகிறது. வாச பர்மிட்டுகளைப் புதுப்பித்துத் தருவது ஆயிரத்தில் ஒருவருக்குத்தான். இந்தியர்களை விலக்கி இலங்கையர்களை ஏன் வேலையில் அமர்த்தக் கூடாதென்று ஒவ்வொரு முதலாளிமார்களையும் இமிக்ரேஷன் இலாகா தனித்தனியாகக் கேட்கிறது. சென்ற ஒரு வருடத்துக்கிடையில் சுமார் இருபதினாயிரம் இந்தியர்கள் இமிக்ரேஷன் சட்ட திட்டங்களுக்குப் பயந்து இலங்கையை விட்டுப் போயிருக்கிறார்கள்.

* * *

இலங்கையைப் போர்ச்சுகீஸியர்கள் ஆண்ட காலத்தில் இங்கு அவர்கள் நடத்திய அட்டூழியங்கள் சரித்திரப் பிரசித்தம். அவர்கள் இடித்துத் தரைமட்டமாக்கிய இந்துக் கோயில்கள் பல. கடலுக்கும் போர்ச்சுகீஸிய வெறியர்களுக்கும் பலியாகிய பாடல் பெற்றதும் சரித்திரப் பிரசித்தி பெற்றதுமான கோணேசர் ஆலயத்தைப் புதிதாகக் கட்டும் வேலைகள் இப்பொழுது நடந்து கொண்டிருக்கையில், பழைய ஆலயம் இருந்த ஸ்தலம் தற்செயலாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து பழைய ஆலயம் இருந்த அதே இடத்தில்தான் புதிய ஆலயமும் நிர்மாணிக்கப்படுகிற தென்பது தெளிவாக ருசுவாகி யிருக்கிறது. அருமையான வேலைப்பாடுகள் அமைந்த கற்களையும் கற் சுவர்களையும் கண்டு பிடித்திருக்கிறார்கள். பழைய ஆலய சிற்ப முறைகளைக் கண்டுபிடிக்க ஸ்தலத்தில் தொடர்ந்து ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

— ரஜனி



# நப்பின்னை

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**கா**வேரிக் கரை கிராமம் ஒன்று. அங்கே ஒரு சுப்பிரமணியர் கோவிலும் கோவிலண்டை ஒரு மரமும் மேடையும். அவ்விடம் முப்பது ஆண்டுகளுக்கு முன் ஒருநாள் ஏதோ காரியமாகப் போயிருந்தேன்.

"ஒரு வேடிக்கை பார்க்கிறீர்களா?" என்றார் என் கூட வந்திருந்த ஜமீன் தார் ரத்தினசபாபதி கவுண்டர்.

"என்ன?" என்று நான் பார்த்துக் கொண்டிருக்கும் போது ஒரு கோலைத் தரையில் அடித்து அங்கே படுத் திருந்த ஒரு கிழ நாயை அதட்டினார்.

உடனே எங்கிருந்தோ ஒரு பெரிய சேவல் கோழி, திடீர் என்று கோபா வேசமாக வந்து கவுண்டரைப் பார்த்த வண்ணம் நாயண்டை நின்றது. அவர் கோலைக் கீழே போட்டு விட்டதும் சும்மா திரும்பிப் போய்விட்டது. ஒரு மூலையில் வழக்கம் போல் தரையைக் கொத்திக் கொண்டு மேய ஆரம்பித் தது. பிறகு நானும் நாயை அதட்டி னேன். மறுபடியும் சீறிக் கொண்டு முன் போலவே ஓடி வந்து என்னை எதிர்த்தது சேவல்.

"இது என்ன, ஆச்சரியம்!" என்று வியந்தேன்.

"இரு வேறு இனங்களான இந்தக் கோழிக்கும் நாய்க்கும் எவ்வளவு அன்பு வளர்ந்திருக்கிறது, பாருங்கள்" என்றார் கவுண்டர்.

நான் என்றும் மறக்க முடியாத ஒரு உண்மைச் சம்பவம் இது. கற்பித்துக் கொடுத்த ஸர்க்கஸ் ஆட்டமல்ல. தானாகவே இயற்கையில் உண்டான நட்பும் அன்பும்.

*    *    *

**ப**டுத்த படுக்கையிலிருந்தவர் மெது வாகக் கூப்பிட்டார்.

"நப்பூ! நப்பூ!"

"வந்தேன்! அப்பா, வந்து விட் டேன்!" என்று நப்பின்னை வேகமாக மெத்தைப் படி ஏறி வந்தாள்.

வந்து, "என்ன அப்பா?" என்றாள்.

"யாரம்மா பாடுகிறது? யார் வந் திருக்கிறார்கள் கீழே? ரொம்ப நன் றாகப் பாடுகிறாளே, யாரோ?" என்றார்.

"யாரும் வரவில்லையப்பா. யாரும் பாட வில்லையே! தூங்கினீரா?" என்றாள்.

"தூங்கவில்லை, நப்பு!"



"பக்கத்து வீட்டிலே ரேடியோவா?" என்றார் மறுபடியும்.

"யாரும் பாடவில்லை; ரேடியோவும் இல்லை, அப்பா; நீர் கொஞ்சம் தூங்கினால் நல்லது" என்றாள் நப்பின்னை.

"இல்லை, நப்பு. அதோ பார், உனக்குக் கேட்கவில்லையா? உன் அம்மாதானே பாடுகிறாள்? அவள் குரல் உனக்குத் தெரியவில்லையா?" என்றார் ராமானுஜ அய்யங்கார்.

இப்படி மெள்ளத் தாழ்ந்த குரலில் சொல்லி விட்டுக் கண்களை மூடிக் கொண்டார். நப்பின்னை தகப்பனாரின் பாதங்களை மெதுவாகப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்தாள்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன் ராமானுஜ அய்யங்காருடைய மனைவி இறந்து விட்டாள். நப்பின்னையை அவருடைய தம்பி ராமுவுக்குக் கொடுத்துக் கலியாணமாகியிருந்தது. தாயார் இறந்தபோது நப்பின்னைக்குப் பதினைந்து வயது. ஆயினும் மாப்பிள்ளை வீட்டுக்குப் பெண்ணை அனுப்பவில்லை, காரணம் மனஸ்தாபம்.



ராமுவின் தகப்பனார் எதிர்பாராதபடி இறந்து போன பின் அவர் சொத்தும் வியாபாரமும் சிறுவனுக்காக அக்காள் புருஷனான ராமானுஜய்யங்கார் பார்த்து வந்தார். அந்த விஷயத்தில் சில பந்துக்கள் ராமுவின் மனத்தைக் கெடுத்து விட்டார்கள். அவர்கள் சொன்னதைப் பையன் நம்பினான். தன் சொத்தின் பரிபாலனத்தில் ராமானுஜய்யங்கார் மோசம் செய்து விட்டதாகவும் பெருந் தொகைகளைக் கையாடி விட்டுத் தன் சொந்தக் கடன்களைத் தீர்த்துக் கொண்டு விட்டதாகவும் அவர்கள் சொல்லி வந்ததை நம்பி ராமு அவதூறு வார்த்தைகள் பரப்பினான். இதனால் ஒரு தவறும் செய்யாத ராமானுஜய்யங்காருடைய உள்ளம் மிகவும் புண் பட்டது.

பெண்ணைப் படிக்க வைத்து ஒரு வாத்தியார் வேலையில்

அமர்த்தி விட்டார். புருஷன் வீட்டுக்கு அனுப்ப வில்லை. ராமானுஜய்யங்காருக்கு வேறு மகளோ மகனோ இல்லை. ஒரே குழந்தை.

* * *

ஐந்து நிமிஷம் தூங்கின மாதிரி இருந்து மறுபடியும், "நப்பு, அம்மா தான் பாடுகிறது. ராமகீர்த்தனை பாடுகிறாள், ஏன் உன் காதுக்குப் புலன்பட வில்லை? என்னை அழைத்துப் போக வந்து பாடுகிறாள். என்காலம் முடிந்தது நப்பு. இனி உன் உத்தியோகத்தைச் சரியாகப் பார்த்துக் கொண்டு ஆண்டவன் காப்பில் வாழ்க்கை நடத்து. பயப்பட வேண்டாம்" என்றார்.

"அப்பா, எனக்கு ஒரு பயமும் இல்லை. நீர் என்ன என்னவோ பேசாதீர். சுரம்கூட இப்போதில்லை. நின்றிருக்கிறது. கொஞ்சம் தூங்கப் பாரும்" என்றாள் நப்பின்னை.

"செல்லம்! வந்து விடுகிறேன், என் கண்ணே!" என்றார் ராமானுஜய்யங்கார் கண்ணை மூடிக் கொண்டே.

"ஏதோ நல்லதற்குத் தான் கனவில் சங்கீதம் கேட்கிறது. அப்படித் தான் சொல்லுகிறார்கள். நீர் இப்படி யெல்லாம் பேசாதீர். உடம்பு சரியாகப் போவதற்குத் தான் இப்படி தேவ



கானம் காதில் ஒலிக்கிறது. எனக்குங்கூட இப்போது கேட்கிறது" என்றாள் நப்பின்னை கண்களில் நீர் மல்க.

மறுபடியும் ராமானுஜய்யங்கார் கொஞ்சம் தூங்கினார். அப்போது ஒரு புறம் போய் நின்று கொண்டு நப்பின்னை நன்றாகக் கண்ணீர் விட்டு அழுது விட்டு முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

* * *

அடுத்தநாள் காலை சுமார் பத்து மணி. "அப்பா! மாமா வருகிறார். படி ஏறி வந்து கொண்டிருக்கிறார். அழுது கொண்டு வருகிறார். என்ன

விஷயமோ தெரியவில்லை" என்றாள் நப்பின்னை.

'மாமா' என்றால் நப்பின்னையின் புருஷனாகிய ராமு.

"சரணாகதி! என்னை க்ஷமிக்க வேண்டும். அத்திம்பேர்! நான் மகா பாபம் செய்து விட்டேன். சரணாகதி! சரணாகதி! என்னைப் பார்த்து மன்னித்தேன் என்று ஒரு வார்த்தை சொல்லி என்னைக் காப்பாற்ற வேண்டும்." இவ்வாறு சொல்லிய வண்ணம் ராமு வந்து தரையில் நீள விழுந்து தெண்டனிட்டான்.

"ராமு, நான் யார் உன்னை க்ஷமிப்பதற்கு? எல்லாம் பகவானுடைய திருவருள். நீ என்மேல் அபவாதம் சுமத்தினதும் அவனுடைய சங்கற்பம் தான். என்னுடைய பாபங்கள் தான்.



நீ அவனை வேண்டிக்கொள். போதும்" என்றார் ராமானுஜய்யங்கார்.

"அத்திம்பேர்! நான் நேற்றுத்தான் உண்மையைக் கண்டேன். என் பாபம் பெரியது. இதற்கு வேறு பிராயச்சித்தம் இல்லை. உம்முடைய காலில் விழுந்து க்ஷமாபணம் கேட்டுக்கொள் என்று நேற்று வேங்கடேசப் பெருமாளும் அக்காவும் வந்து எனக்குச் சொல்லி விட்டார்கள். வந்தேன். சண்டாளனை மன்னிக்க வேண்டும்" என்றான்.

"அப்பனே! எப்போது உன் உள்ளம் சுத்தமாய் விட்டதோ அப்போதே ஆண்டவனுடைய திருவருள் அடைந்தாய். தீர்க்காயுசாக சுகமாக இரு. என்னுடைய காலம் முடிந்தது. இனி கோபமும் விரோதமும் எனக்கு என்னத்திற்கு? நப்பூவைச் சரியாகப் பார்த்துக்கொள்" என்றார்.

"நான் ஏமாந்து போனேன் அத்திம்பேர்! பாழும் ஜனங்கள் பேச்சைக் கேட்டுக் கலியாணம் வேறு செய்து கொண்டு விட்டேனே. நப்பு எப்படிச் சக்களத்தியுடன் வாழ்வாள்? நான் கெட்டுக் குட்டிச் சுவராகப் போனேன்" என்று ராமு புலம்ப ஆரம்பித்தான்.

"மாமா" என்றாள் நப்பு. பிறகு நிறுத்திக் கொண்டாள்.

ராமு பெண் குழந்தையைப் போல் அழ ஆரம்பித்தான்.

"என்ன சொல்லப் போனாய் நப்பு?" என்றார் ராமானுஜய்யங்கார்.

"ஒன்றுமில்லை; சக்களத்தி என்றெல்லாம் சொன்னாரே அதைப் பற்றிப் பேசப் போனேன். பிறகு அவ்வளவு பாக்கியம் பெற்று விட்டேனா, இப்போது என்னத்துக்கு அந்தப் பேச்சு என்று சும்மா இருந்து விட்டேன்!" என்றாள் நப்பு, தரையைப் பார்த்த வண்ணம்.

"அசட்டுத்தனம் செய்து விட்டேன், நப்பு! தேவகிக்கு ஒரு குழந்தையும் பிறக்கப் போகிறது" என்றான் ராமு.

"பிறந்தால் என்ன? தங்கையின் குழந்தை என் குழந்தையாகவே வளரும்" என்றாள் நப்பின்னை.

"குழந்தாய்!" என்று சொல்லி எழுந்து உட்கார்ந்தார், ராமானுஜய்யங்கார்.

"நம்முடைய சாஸ்திரமும் பண்பாடும் வீண் போகவில்லை. என் செல்வமே! நப்பின்னை! இட்ட பெயருக்குச் சரியாக விளங்குகிறாய். ராமு! இன்றைக்கே அழைத்துப் போ உன் மனைவியை. இருவரும் சுகமாக இருப்பீர்களாக! பகவான் கருணை இனி மழையாகப் பெய்யும். இந்தச் சந்தோஷத்திற்குத்தான் நேற்றிரவு அசரீரி கானம் கேட்டது. நான் பாக்யவான் ஆனேன். நான் பட்ட துயரமெல்லாம் இந்த ஆனந்த பரவசத்துக்காகவே பகவான் செய்த லீலை. எல்லாம் கரைந்து போய் விட்டது." இவ்வாறு சொல்லிவிட்டுச் சற்று ஓய்ந்து ஆயாசமாகப் படுத்தார்.

நப்பு தகப்பனார் கண்களைத் துடைத்து விட்டு ஒரு பக்கத்தில் போய் உட்கார்ந்தாள்.

* * *

அன்று ராமானுஜய்யங்கார் அடைந்த மகிழ்ச்சிப் பரவசத்திலேயே உடலை விட்டு அவர் உயிர் பிரிந்து விட்டது. ராமு வீட்டில் அவனும் அவனுடைய இரண்டு மனைவிகளும் சிறியவள் தேவகியினுடைய குழந்தையும்—குழந்தைக்கு இப்போது இரண்டு வயது—ஒரு குற்றங் குறையுமின்றி வாழ்ந்து வந்தார்கள்.

"இந்தக் குழந்தை யாருடைய தம்மா?" என்று வந்தவர்கள் கேட்பார்கள். நப்பு சிரிப்பாள். தேவகி தலை வணங்கி நிற்பாள்.

"கண்ணு! உன் அம்மா, யார்?" என்பார்கள் சிலர். அவர்களுக்கு இது ஒரு வேடிக்கை. கண்ணு குதித்து ஓடி நப்பு மடியில் போய் உட்காருவான். அவளைத்தான் அவன், "அம்மா!" என்று அழைப்பது. தேவகியைச் "சித்தி" என்று அழைப்பான்.

"இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே! இப்படியும் உண்டா உலகத்தில் சக்களத்திமார்கள்!" என்பார்கள் நல்லவர்கள்.

"எல்லாம் வேஷம். கொஞ்ச நாள் போகட்டும். பின்னால் பாருங்கள், சண்டை இல்லாமல் போகாது" என்பார்கள் தங்களுக்குள் வேறு சில புண்யவதிகள்.

ஆனால் பல ஆண்டுகளுக்குப் பிறகும் ராமு குடும்பத்தில் சண்டையுண்டாகவில்லை!

இது நம் நாட்டில் நடைபெறும். ராமனும் பரதனும் தோன்றிய நாடு அல்லவா? பஞ்ச பாண்டவர்களும் தமயந்தியும் வாழ்ந்த புண்ணிய பூமியல்லவா?

ஏதோ கதை உண்டாக்கி எழுதினேன் என்று எண்ணுகிறீர்கள். நம் நாட்டில் நடமாடும் பல நப்பின்னைகளைக் காண்பீர்கள். அவர்களுடைய தியாக வடிவமான வேள்வியின் புண்ணியத்தினால்தான் மேலே காற்றில் செல்லும் மேகம் நின்று மழை பெய்கிறது.

* * *

ஆனால் எதிர்ப் பட்சத்தில் சொல்வதிலும் உண்மை இருக்கவே இருக்கிறது.

"நம் பரதனைப்போல் எல்லாருக்கும் ஒரு தம்பி இடைப்பார்களா?" என்று ராமசந்திரனே கேட்டானல்லவா?

"சக்களத்தி என்றெல்லாம் ஏன் பேசுகிறீர்கள், அக்கா தங்கைகள் போலிருக்க முடியாதா?" என்று சொல்லப் போனாள் அல்லவா அன்று நம்முடைய கதையில் நப்பின்னை? அக்கா தங்கைகளே பிடிவாத வெறுப்பும் முடியாத சண்டையும் மூட்டிக் கொண்டு, இருவரையும் பெற்ற தகப்பனுடைய வயிறு எரியப் பகை கொண்டு தங்கள் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்வதையும் பார்க்கிறோமல்லவா? பகவானுடைய இருவருளும் தருமத்துக்கு இசைந்த விவேகமும் இருந்தால் சக்களத்திகளும் அன்போடு வாழலாம். இல்லையேல் ஒரு வயிற்றில் பிறந்த சகோதரிகளும் பகைத்துக் கொள்ளலாம். ராமுவைப் போல் யோசனை செய்யாமல் வாழ்க்கையைச் சிக்கல் செய்து கொண்டு விட்டு அலையாமலிருப்பதே நல்லது. சிக்கலில் சிக்கி விட்டால், பிறகு தைரியமும் ஆண்டவன் நினைவும் இழக்காமல் நப்பின்னையைப் போல் வாழ்க்கையைக் காப்பாற்றிக் கொள்வோமாக. 'அறிவு கொடுப்பாய் ஈசனே! அன்பு கொடுப்பாய் ஆண்டவனே!' என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்நாளைக் கழிப்போமாக.

அன்பே மூவா மருந்து. பாற்கடலைக் கடைந்தெடுத்த அமிர்தம் வேறல்ல. அதுவே. அமிர்தத்தை மறுத்து விட்டு உள்ளத்தை அறுக்கும் விஷமாகிய துவேஷத்தைத் தேடுகிறோமே, என்ன மதியீனம்!

**ஏகத்வ மனு பச்யத:**

இந்த தீபாவளியில் எண்ணெயும் சிக்காயும் போட்டு எல்லா துவேஷங்களையும் தேய்த்துக் கழுவி விட்டுக் குளிப்போமாக.

---

இந்தக் கதையின் ஆரம்பத்தில் உள்ள கோயில் காட்சியே இந்த இதழின் மூவர்ண அட்டைச் சித்திரமாகத் திகழ்கிறது.



எமது ஆதரவாளர்கள்
அனைவருக்கும் மனமார்ந்த
நல் வாழ்த்துக்கள்!
செகண்டஸ் மினியேச்சர் "C-2"
ரோல்டு கோல்டு, ஸ்டீல் பேக் ரூ. 146/-
WEST END WATCH CO.
BOMBAY • CALCUTTA

★ நமது ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத் இந்த ஆண்டுத் தீபாவளிப் பண்டிகையைத் தமிழகத்திலே நம்மோடு கொண்டாடுகிறார். அவருக்கு நல்வரவு கூறி மகிழும் சந்தர்ப்பத்தில், ஏற்கனவே அவரோடு சுற்றுப் பிரயாணம் செய்துள்ள அன்பரின் அனுபவங்களை இங்கே தருகிறோம். — ஆசிரியர்

# சில நினைவுகள்

ரா. நா.

ஜனாதிபதி ராஜன் பாபு அவர்கள் காங்கிரஸ் ராஷ்டிரபதியா யிருக்கையில் 1935-ம் ஆண்டு தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தது சம்பந்தமான சில நினைவுகளை இங்கு குறிப்பிடுவது பொருத்தமா யிருக்கும் என்று நினைக்கிறேன்.

"ஜெயபாரதி" தினசரிப் பத்திரிகையின் விசேஷ நிருபராக அவர்களுடன் பிரயாணம் செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. சிதம்பரம் பொதுக் கூட்டத்தில் அவரது பிரசங்கத்தை மொழிபெயர்த்துக் கூறும் பேறும் எனக்குக் கிடைத்தது. அவருடைய பரிவாரத்தில் ஒருவனாக நான் சென்றதால் அருகிலிருந்து அப்பெரியாரின் சிறப்புகளை அறியவும் ஒரு நல்ல சந்தர்ப்பம் எனக்கு வாய்த்தது.

ராஜேந்திர பிரசாத் தமிழ்நாடு பூராவும் சுற்றுப்பிரயாணம் செய்து விட்டுச் சிதம்பரம் வந்து சேர்ந்தார். மகாகனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியாரின் விருந்தினரா யிருந்தார். சிதம்பரம் வந்து சேர்ந்த தினத்தன்று மாலை மாணவர்கள் பாபுஜியை உபசரித்தனர். சாஸ்திரியார் வைபவத்துக்குத் தலைமை வகித்தார். "காந்தி தங்கம் என்றால் ராஜன் பாபு கலப்பில்லாத் தங்கம்" என்று பாபுஜியை சாஸ்திரிகள் பாராட்டினார். உபசரிப்புக்குப் பதில் சொல்லுகையில் ராஜன்பாபு அருமையானதோர் பிரசங்கம் செய்தார்.

"காந்திஜியை நானும் மற்றவர்களும் கண்மூடித்தனமாகப் பின்பற்றுகிறோம் என்கிறார்கள். இதைக் கேட்டு நாங்கள் பெருமை யடைகிறோம். எப்படி நான் காந்திஜியின் கண்மூடி பக்தனானேன் என்பதைச் சொல்லுகிறேன். காந்திஜி புதிதாக இயக்கம் ஆரம்பிக்கும் போதெல்லாம் நான் அவருடன் வாதாடி யிருக்கிறேன். பல ஆட்சேபணைகளைச் சொல்லி யிருக்கிறேன். அவரும் எல்லாவற்றுக்கும் சமாதானம் சொல்லி யிருக்கிறார். கடைசியில் அவர் சொல்வதற்குச் சம்மதிப்பேன். இயக்கம் ஆரம்பித்தபின் பார்த்தால் எல்லாம் அவர் சொன்னபடிதான் நடக்கும். எங்கள் ஆட்சேபணைகள் அர்த்தமற்றவை என்பது நிரூபணமாகிவிடும். இப்படிப் பன்முறை பார்த்த பின் அவரைக் கண் மூடிக்கொண்டு பின்பற்றாமல் என்ன செய்வது?" என்றார். சாந்தம் தவழும் அவர் மொழிகளைக் கேட்ட மாணவர்கள் பரவசமடைந்தனர்.

ராஜன் பாபுவின் சுற்றுப் பிரயாணத்தில் குறிப்பிட வேண்டிய அம்சம் சுயமரியாதை நண்பர்கள் அவர் சென்றவிடமெல்லாம் கறுப்புக் கொடி காட்டியதுதான். இப்படிப் பல இடங்களில் அவர்களுடைய ஆர்ப்பாட்டங்களைப் பற்றிப் பாபுஜி பிரஸ்தாபிக்கவே யில்லை. திருச்சியில் ஆர்ப்பாட்டம் அதிகரித்தது. அங்கு பொதுக் கூட்டத்தில் பேசுகையில் சற்று உருக்கமாகவே பேசினார்: "என்னைத் 'திரும்பிப் போ' என்கின்றனர். நான் எங்கே போவது? இந்தியா முழுதும் என்னுடைய நாடு. அதை விட்டு நான் எங்கு திரும்பிப் போவது?" என்று கேட்டவுடன் நிசப்தம் உண்டாகி விட்டது.

சந்தர்ப்பத்துக்கேற்ற உபமான உபமேயங்களுடன் பேசுவதில் ராஜாஜிக்கு அடுத்தபடியாக ராஜேந்திர பிரசாத்தைக் குறிப்பிடலாம். போடி நாயக்கனூரில் நடுநிசியில் கூட்டம் நடந்தது. கூட்டத்தின் எல்லையில் சில மாட்டு வண்டிக்காரர்கள் வண்டியில் உட்கார்ந்தபடியே பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தனர். பாபுஜி ஒத்துழையாமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். எதிரிலிருந்த வண்டி மாடுகளையே உதாரணமாகக் கூறினார்.

"மாடு பாரத்தை இழுத்துச் செல்லுகிறது. அதைத் தொந்தரவு செய்யாமலிருந்தால் மெள்ள மெள்ள இழுத்துச் செல்லும். அதை அடித்துத் துன்புறுத்தினால் அது படுத்துக் கொண்டுவிடும். அப்புறம் வண்டி எப்படிச் செல்லும்? இது தான் ஒத்துழையாமை" என்றார்.

காங்கிரஸ் கூட்டத்திலில்லாமல் வேறெங்கேயாவது பார்த்தால் பாபுஜியை யாரோ நாட்டுப் புறத்தான் என்றுதான் எண்ணுவார்கள். நல்ல உயரம், ஒழுங்கு படுத்தப்படாத அடர்ந்த கறுத்த மீசை, கனத்த கம்பளியை நம் கன்னடியர் அணிந்திருப்பது போல் தோளில் சுமந்திருப்பார். முழங்காலுக்குச் சற்றுக் கீழ் வரையுள்ள பஞ்ச கச்சம். இப்படிப் பைராகி போல் தோற்ற மளிப்பவர்தான் ராஜன் பாபு. ஒரு சமயம் கல்யாண் ஸ்டேஷனில் ரயில் வரச் சற்று நேரமாகி விட்டதாம். ஸ்டேஷன் பிளாட்பாரத்திலுள்ள குழாயிலேயே ஸ்நானம் செய்ய உட்கார்ந்து விட்டாராம், பாபுஜி.

ஜனக்கூட்டம் என்ன நெருக்கினாலும் கோபம் கிடையாது. ஒரே "பேடன்ட்" புன்முறுவல்தான். தமிழ் நாடு சுற்றுப் பிரயாணம் பூராவிலும் அவர் கோபமடைந்து நான் பார்க்கவே யில்லை. எங்கு சென்றாலும் மத்தியானம் சுற்றுப் பிரயாண கோஷ்டியுடன் தான் போஜனம் செய்வார். தமக்கெனத் தனி உணவு எதுவும் விரும்புவதில்லை. ஒரு சமயம் அவர் முக்கூடலுக்கு முன் சென்றார். எங்கள் கார் தாம்பரபரணியில் தடைப்பட்டு விட்டது. நாங்கள் வரும் வரையில் எங்களைப் பற்றிப் பல தடவை விசாரித்துக் கொண்டே யிருந்ததாக நாங்கள் வந்தவுடன் நண்பர்கள் எங்களிடம் கூறினார்கள்.

* * *

அவருடைய சுற்றுப் பிரயாணத்தில் அவருக்கு சிசுருஷை செய்யச் சீதாராமன் என்கிற பீஹார் சிறுவன் வந்திருந்தான். ஒரு நாள் காலை சாமானை ஒரு காரில் ஏற்றி அவனையும் உட்காரவைத்துக் காரை மாலை போய்ச் சேரவேண்டிய இடத்துக்கு அனுப்பி விட்டோம். மத்தியானம் தங்குமிடம் விருத்தாசலம் ஸ்தலம். அங்கு போனவுடன் "சீதாராமன் எங்கே?" என்று கேட்டார். "நேராக அனுப்பி விட்டோம்" என்று பதில் கூறினோம். "பாவம், அவனுக்குக் கோயில் என்றால் வெகு பிரியம்' என்றார். அதிலிருந்து அவனை எங்களை விட்டுப் பிரிப்பதில்லை. பாபுஜிக்கும் கோயில் என்றால் உயிர். வழியிலுள்ள முக்கிய ஸ்தலங்களிலெல்லாம் சுவாமி தரிசனம் செய்து கொண்டுதான் செல்வார்.

எல்லாக் கூட்டங்களிலும் பீஹார் பூகம்ப நிவாரண வேலையைப் பற்றிப் பேசத் தவற மாட்டார். பூகம்பத்தால் ஜனங்கள் பட்ட கஷ்டத்தைப் பற்றி அவர் பேசும்பொழுது அவர் கண்களில் நீர் பெருகும். கேட்பவர்களும் உருகி விடுவார்கள். பொது நிதி நிர்வாகத்தில் காணயம் என்றால் பீகார் பூகம்ப நிவாரண நிதியைத்தான் காந்திஜி குறிப்பிட்டுச் சொல்வார்.

இன்று ராஜன் பாபு பாரத நாட்டின் ஜனாதிபதியாக இருக்கிறார். அவருடைய குணத்தாலும், தியாகத்தினாலும், நுண்ணிய அறிவாலும் இப்பதவி வகிக்க அவர் எல்லா விதத்திலும் தகுதி பெற்றவர். எனினும், மகாத்மாவின் உண்மையான சீடர் என்கிற முறையில்தான் மக்கள் அவரை அதிகமாக நினைப்பர்.

காந்தியத்தைப் பூரணமாக அனுஷ்டித்து வருபவர் பாபுஜிதான். ராஜன் பாபுவின் தோற்றம் மனக்கண் முன் வரும் போதெல்லாம் மலைச் சொற்பொழிவு நிகழ்த்திய ஏசுநாதர் ஞாபகம் வருகிறது.




# வட இந்திய யாத்திரை - 16

"சுதந்திரம் பெற்று எட்டு ஆண்டுகள் ஆகி விட்டனவே! சுதந்திரத்தினால் என்ன பயன் வந்து விட்டது!" என்று சிலர் முணு முணுக்கிறார்கள் அல்லவா!

அப்படிச் சொன்னவர்களை மூலை முடுக்குகளில் எங்கிருந்தாலும் அசந்து விடாமல் தேடிக் கண்டு பிடியுங்கள்.

அவர்கள் திருமுகத்தைக் கொஞ்சம் காட்டச் சொல்லுங்கள். "ஏன் இப்படி உங்கள் முகத்தில் அசடு வழிகிறது!" என்று வாய் கூசாமல் கேளுங்கள்.

"பாரதத்தாய் உங்களுக்கும் தாய்தானே! பாரத அன்னையின் விலங்குகள் தெறித்து அவள் விடுதலை பெற்றதில் ஏன் நீங்கள் மகிழ்ச்சி அடையவில்லை! பாரதத் தாயின் வெற்றியைக் கண்டு ஏன் இவ்வளவு துக்கப் படுகிறீர்கள்!" என்று விசாரியுங்கள். பாரதத் தாய் வெற்றிபெற்று வரும் வேகத்தை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். "கேளுங்கள், சுதந்திரம் பெற்ற பாரத நாட்டின் சாதனைகளை" என்று அவர்கள் காது செவிடுபடும்படி இரைந்து சொல்லுங்கள். விடுதலை பெற்ற எட்டு ஆண்டுகளுக்குள் ரஷ்யாவும், சீனவும் செய்யாத அரிய சாதனைகளைப் பாரதம் சாதித்திருக்கும் அதிசயத்தை அவர்களுக்குச் சொல்லுங்கள். பக்ரா அணையின் பெருமையை நிமிர்ந்த மார்புடன் எடுத்துக் கூறுங்கள்.

** ** **

நங்கல் நகரிலிருந்து பக்ரா அணைக்கட்டு வேலை நடக்கும் இடம் சுமார் பத்து மைல் தூரம் இருக்கும். அங்கு போய்ச் சேருவதற்கு வசதியாக ஸட்லஜ் நதிக் கரையோரமாகவே சாலை அமைத்திருக்கிறார்கள். ஸட்லஜ் நதிக் கரையோரமாக, பயங்கரமான மலைப்பாறைகள் வழியே செல்லும் அந்த ஏற்றம், இறக்கம், வளைவு, நெளிவான சாலையை இப்பொழுது நினைத்தால் கூட பயமாக இருக்கிறது. இது போன்ற பயங்கரச் சாலைகளை இதற்குப் பிறகு ஜம்முவிலும், காஷ்மீரத்திலும் தான் பார்க்க முடிந்தது. மலைகள் எல்லாம் இளம் பிராயத்து மலைகள். அதில் பத்தடி பன்னிரண்டடி உயரமுள்ள குட்டையான மரங்கள் நிறைந்த காடுகள் தோன்றுகின்றன. இடப்புறத்தில் ஸட்லஜ் நதி கம்பீரமாகத் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடுகிறது. நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் ஒரே மலைதான் காணப்படுகிறது. ஒரு காலத்தில் இங்கு மனிதர்கள் யாருமே வந்ததில்லையாம். இப்போது ஜே, ஜே என்று தொழிலாளர்கள் நடமாடும் புனித பூமியாகக் காட்சி தருகிறது.

சாலையின் வலது புறத்தில் உள்ள மலைகளில் கார் ஓட்டும் டிரைவர்களுக்குப் பல உபதேச மொழிகள் பெரிய எழுத்தில் ஹிந்தியிலும் ஆங்கிலத்திலுமாக எழுதப்பட்டிருக்கின்றன. "உயிர் மிகவும் முக்கியமானது." "உங்களை நம்பி மனைவி மக்கள் இருப்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்." "கவனமாகக் கார் ஓட்டிக் கொண்டு சென்றால் வருத்தப்பட வேண்டியதில்லை" என்ற மணி வாசகங்கள் எழுதப் பட்டிருக்கின்றன.

பக்ரா அணைக்குச் செல்லும் போது என் வாழ்நாளில் என்றும் காணாத காட்சியைக் கண்டேன். அதாவது ஆகாயத்தை நோக்கி ஏறும் பயங்கரமான மலை ஓரத்துச் சாலையையும், பாதாளத்தை நோக்கி இறங்கும் அபாயமான சாலையையும், மலையைச் சுற்றிச் சுற்றிச் செல்லும் அதிசயமான சாலையையும் பார்த்தேன். இந்தச் சாலையிலே எவ்வளவோ பழக்கப் பட்ட டிரைவராக இருந்தாலும் நிதானமாகக் காரை ஓட்ட வேண்டும் என்பதற்காகத்தான் ஆங்காங்கு மலையில் எச்சரிக்கை வாசகங்களை எழுதி வைத்திருக்கிறார்கள். "எதை நம்பினாலும் நம்பலாம். ஆனால் பக்ரா அணைச் சாலையை மட்டும் நம்பக் கூடாது!" என்று கார் ஓட்டி வந்த இன்ஜினீயர் அந்தச் சாலையின் அபாயத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தார். கடைசியில் எப்படியோ பக்ரா அணை கட்டும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்தோம்.

## ஸட்லஜ் நதி

இமய மலையில் மானஸரோவர் என்ற இடத்தில் உற்பத்தியாகிப் பல நூறு மைல்கள் இமயமலையின் வழியாக வந்து, இமய மலை



# பாரதத் தாயின் வெற்றி!

யின் அடிவாரத்தில் உள்ள குன்றுகளான நயனதேவி மலைகளுக்கு இடையில் புகுந்து ஓடி வருகிறது ஸட்லஜ் நதி. பஞ்சாப்பில் உள்ள ஐந்து நதிகளில் மிகவும் முக்கியமான நதி ஸட்லஜ் நதி. இமயமலையில் உற்பத்தியாவதால் வருஷம் முழுவதும் தண்ணீர் தட்டில்லாமல் வந்து கொண்டிருக்கும் சிறப்புடைய நதி. அதனுடைய தண்ணீரை இதுவரை யாரும் சரியாக உபயோகிக்க வில்லை. அதனால் ஸட்லஜ் நதியின் அமுதம் போன்ற தண்ணீர் யாருக்கும் உபயோகமில்லாமல் அரபிக் கடலில் போய் விழுந்து கொண்டிருந்தது.

இப்பொழுது ஸட்லஜ் நதியின் தண்ணீரை உபயோகப் படுத்துவதற்காகத்தான் பக்ரா அணை கட்டுகிறார்கள். நயன தேவி மலைகளை ஒட்டி நூற்றுக்கணக்கான கிராமங்கள் இருக்கின்றன. நயனதேவி மலைகளுக்கு அருகில் இருப்பதுதான் பிலாஸ்பூர் ராஜ்யம். அந்த ராஜ்யத்தில் உள்ள ஒரு அழகான கிராமந்தான் பக்ரா. பக்ரா கிராமத்துக்கு அருகில் இந்த அணையைக் கட்டுவதால் இதற்கு பக்ரா அணை என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

பக்ரா அணை கட்டும் இடத்தில் சுமார் மூவாயிரம் அடி உயரமுள்ள நயனதேவி மலைகளின் இடுக்கில் ஸட்லஜ் நதி புகுந்து ஒய்யாரமாக ஓடி வருகிறது. அப்படி நதி புகுந்து ஓடிவரும் இடுக்கைத்தான் அடைத்து, ஸட்லஜ் நதியைத் தேக்கி உலகிலேயே மிகப் பெரிய பக்ரா அணை கட்டப் போகிறார்கள்.

அணையைக் கட்டுவதற்காக அங்கு செய்திருக்கும் பூர்வாங்க ஏற்பாடுகள் மனத்தால் கூடக் கற்பனை செய்து பார்க்க முடியாத அசுர சாதனைகள். மலையிலேயே சுற்றிச் சுற்றி அணையின் உயரத்துக்குத் தகுந்தபடி அதாவது எழுநூறு அடி உயரத்துக்குச் சாலை அமைத்திருக்கிறார்கள். அந்தச் சாலையின் நீளம் பதினாறு மைல். மலையின்மீது அந்தச் சாலையை எப்படித்தான் அமைத்தார்களோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்! "அணையைக் கட்டுவதைவிட மிகவும் கஷ்டமானது இது போன்ற சாலைகள் அமைப்பது" என்றார் இன்ஜினீயர். அவர் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை. அணை பூமி மட்டத்திலிருந்து எழும்ப எழும்ப அதன் ஒவ்வொரு கட்டத்திலும் அதற்கு வேண்டிய சாமான்களை எடுத்துப் போக வேண்டுமல்லவா! அதற்காக மலையின் அடிவாரத்திலிருந்து பல இடங்களில் மாடிப் படி போல சாலை அமைத்திருக்கிறார்கள். அணை உயர உயர அணைக்கு வேண்டிய சாமான்களைக் கொண்டு செல்லும் நூற்றுக் கணக்கான டன் நிறையுள்ள பயங்கர வாகனங்கள் இடைஞ்சல் இல்லாமல் ஓடுவதற்குத் தகுந்த வண்ணம் சாலைகள் அமைத்திருப்பதைக் குறிப்பிட வேண்டும். அதாவது கோடிக்கணக்கான ரூபாய்களை வாரி இறைத்திருக்கிறார்கள்.

## மண் அணை

பக்ரா அணை கட்டும் இடத்தில் இப்பொழுது 'காபர் டாம்' என்று வழங்கும் மண் அணை ஒன்று எடுத்திருக்கிறார்கள். ஸட்லஜ் நதி புகுந்து ஓடி வரும் நயன தேவி மலை இடுக்குகளுக்குக் குறுக்கே மண் அணை கட்டி அந்த அணையின் இரு பகுதி வழியாக மலையைக் குடைந்து சுரங்கக் கால்வாய் அமைத்திருக்கிறார்கள். அந்தச் சுரங்கக் கால்வாயின் வழியாக சட்லஜ் நதி தன்னுடைய வேகத்தையெல்லாம் அடக்கி ஒடுக்கிக் கொண்டு புகுந்து சென்று அரை மைல் தூரத்துக்கு அப்பால் மீண்டும் சட்லஜ் நதியில் வந்து விழுகிறது.

இதன் பலனாக பக்ரா அணை கட்டும் இடமான அரை மைல் விஸ்தீரணத்தில் ஸட்லஜ் நதியின் தண்ணீரே இல்லை. அணை கட்டுவதற்கு வேண்டிய அஸ்திவாரம் போடுவதற்காக மலையின் அடிவாரத்தில் பூமியில் பாறைகள் வெட்டி எடுக்கப்படுகின்றன. கூடவே இளம் பிராயமுள்ள அந்த நயன தேவி மலைகள் நன்றாகப் பலப்படுத்தப் படுகின்றன.

மலைகளைப் பலப்படுத்தும் காட்சி அதிசயமான காட்சி. மலையில் ஆங்காங்கு துளைகள் போட்டிருக்கிறார்கள். அந்தத் துளை







மேலே: கான்வஸ் பெல்ட் மூலம் கூழாங் கற்கள் செல்கின்றன. நாலு மைல்களுக்கு மேல் நீளமுள்ள பெல்ட் பாதை. கீழே: நயன தேவி மலைகளின் 'அபாயமான இடத்தில் நின்று தொழிலாளர்கள் வேலை செய்யும் அதிசயத்தைக் கவனியுங்கள்.

யின் மூலம் மலைகளுக்கு 'இன்ஜக்ஷன்' செய்கிறார்கள். அதாவது ஊசி போடுகிறார்கள்.

சிமென்ட் குழம்பை ஒரு அதிசய இயந்திரத்தின் மூலம் அந்த மலைகளுக்குள் செலுத்துகிறார்கள். பாறையாக இல்லாமல் மண்ணாக இருக்கும் இளம் வயதுடைய அந்த மலையின் மணற்பாங்கான கண்ணுக்குப் புலப்படாத இடுக்குகளில் எல்லாம் சிமென்ட் குழம்பு புகுந்து மலையை மிகவும் உறுதி வாய்ந்த, பலம் நிறைந்த, பல கோடி வருஷங்கள் வயதான மலையைப் போல மாற்றி விடுகிறது!

என்னே ஆராய்ச்சியின் அற்புதம்! மனிதனின் அறிவுத் திறமைக்கு முன், அபாரமான உழைப்புச் சக்திக்கு முன் இயற்கைகூட அல்லவா தலை வணங்கி விடுகிறது!

சுமார் எட்டாயிரம் தொழிலாளர்கள் இவ்விடத்தில் வேலைசெய்து கொண்டிருக்கிறார்கள். இரண்டாயிரம் அடி உயர முள்ள மலைகளின் ஓரத்தில் பாறைகளை வெடி வைத்துப் பிளந்து தள்ளுகிறார்கள். அவர்கள் மலையின் ஓரத்திலிருந்து வேலை செய்வதைப் பார்த்தால் ஏதோ எறும்புகள் எறும்புப் புற்றுக்குள் சுறு சுறுப்பாக அங்கும் இங்கும் ஓடி உற்சாகமாக வேலை செய்து கொண்டிருப்பதுபோல் இருக்கிறது.

மலையின் அடிவாரத்தில், பூமியில் பெரிய பெரிய ராட்சச இயந்திரங்கள் பாறைகள் நிறைந்த அந்தப் பூமியை ஆழமாக வெட்டி எடுக்கின்றன. இன்னும் சில இயந்திரங்கள் தோண்டிக் கொண்டிருக்கின்றன. அப்படி வெட்டியதையும் தோண்டியதையும் இன்னும் சில இயந்திரங்கள் எடுத்துக் கொண்டு போய் வெளியில் கொட்டுகின்றன. பூமிக்கு அடியில் பாறைகளை உடைத்துத் தோண்டும் இடத்தில் குபுகுபு என்று தண்ணீர் பொங்கி வருகிறது. பொங்கி வரும் தண்ணீர் அணையின் அஸ்திவாரத்தில் ஏரிபோலத் தேங்கி விடுகிறது. அப்படித் தேங்கி நிற்கும் தண்ணீரைக் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் இன்னொரு இயந்திரம் உறிஞ்சி அரை மைலுக்கு அப்பால் நதியில் கொண்டு கொட்டுகிறது.

இயந்திரங்களை இயக்கும் தொழிலாளர்களும், இயந்திரம் சென்று வேலை செய்ய முடியாத அபாயமான இடத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களும் மலர்ந்த முகத்துடன் குதூகலமாக வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்கள் இவ்வளவு உற்சாகமாக வேலை செய்து வரும் அதிசயம் என்னவென்று கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

## தொழிலாளர்களின் தியாகம்

முதலாவது இங்கே கண்டிராக்டர்கள் இல்லை. சர்க்கார் இன்ஜினீயரிங் இலாகாவே தன் சொந்த மேற்பார்வையிலேயே வேலை நடத்துகிறது. தொழிலாளர்கள் எல்லாருமே மாதச் சம்பளத்தில் வேலை செய்கிறார்கள். எட்டு மணி நேரத்துக்கு மேல் வேலை கிடையாது. மூன்று பகுதிகளாகப் பிரிந்து தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் வேலை நடந்து கொண்டிருக்கிறது. பகலில் மலையின் உயரத்திலே வேலை செய்கிறார்கள். இரவில் மலை அடிவாரத்தில் பூமியில் வேலை செய்கிறார்கள். வேலைக்குத் தகுந்தபடி அவர்களுக்குக் கூலி கிடைக்கிறது. மாதம் எழுபத்தைந்து ரூபாயிலிருந்து அறுநூறு ரூபாய் வரையில் சம்பளம் வாங்கும் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். சம்பளம் கொடுப்பதைத் தவிர அவர்களுக்கு வேண்டிய எல்லா சௌகர்யங்களும் கவனிக்கப்படுகின்றன. மலையின் மேலே அவர்கள் வேலை செய்யும் இடத்தில் அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்கிறார்கள். தண்ணீர் என்றால் சாதாரண தண்ணீரா! ஐஸ் தண்ணீர்!

ஐஸ் தண்ணீர் கொடுப்பதில் என்ன அதிசயம்! ஸட்லஜ் நதியில்தான் வேண்டிய அளவு தண்ணீர் ஓடுகிறதே! அதில் மொண்டுகொண்டு போய்க் கொடுத்தாலே ஐஸ் தண்ணீர் போலத்தானே இருக்கும் என்று நினைக்கலாம்.

அந்த இடத்தில் பஞ்சாபின் கொடிய வெயிலைப் பற்றி நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும்.



ஜீவ மரணப்போர்க்களத்திலே ஜெயக்கொடி
ஏற்றிய பின் நிரந்தரமாக ஜொலிக்கும்
அமர ஜோதிகளின் இணையற்ற கதை!
அமரர் கல்கி யின்
கள்வனின்
காதலி
ரேவதி புரொடக்ஷன்ஸ்
தயாரிப்பு...
தீபாவளியன்று
சென்னை
மற்றும் தென்னாடெங்கும்
மகத்தான
ஆரம்பம்...
டைரக்ஷன்
V.S.ராகவன்
திரைக்கதை வசனம்
S.D.சுந்தரம்
ஸ்டுடியோ· ரேவதி
GAIETY
PICTURES
CIRCUIT
MADRAS-2.

கோடை காலத்தில் மண்டையைப் பிளந்து, தோலை உரித்து விடுவதுபோல கொடுமையான வெயில் காய்கிறது. நாக்கு அப்படியே வறண்டு விடுகிறது! தாகம்! தாகம்! தாகம்! என்று ஒரே தாகம்தான். வேலை செய்யாமல் சும்மா சுற்றிப் பார்த்துக் கொண்டுவந்த நாங்களே அரை மணி நேரத்துக்குள் எட்டு டம்ளர் தண்ணீர் குடித்து விட்டோம். அப்படியும் தாகம் தணிந்த பாடாயில்லை. அப்படியிருக்க உடல் வருந்தி உழைக்கும் தொழிலாளர்களுக்கு எவ்வளவு வறட்சியாக இருக்கும்! அப்படி தாகம் நாவை வறட்டும்போது தண்ணீர் சாப்பிட்டால் தேவாமிர்தம்போலல்லவா இருக்கும்.

இவ்வாறு தொழிலாளர்களுக்குப் பகலில் ஐஸ் தண்ணீர் கொடுக்கிறார்கள். இரவில் ஐஸ் தண்ணீருடன் தேத் தண்ணீரும் கொடுக்கிறார்கள். அவர்கள் வேலை செய்யும் போது அணிந்து கொள்வதற்காகப் பிரத்தியேக உடை கொடுக்கிறார்கள்.

இவ்வளவு சௌகரியங்களுடன், உழைக்கும் தொழிலாளர்களுக்கு வேண்டிய சத்துள்ள ஆகாரங்களைத் தயார் செய்து கொள்வதற்கு அதற்கான தானியங்களும், இதர பண்டங்களும் குறைந்த விலையில் அவர்களுக்கு வழங்கப்படுகின்றன. அணைக்கட்டில் வேலை செய்யும் எட்டாயிரம் தொழிலாளர்களும் இந்த நன்மையைப் பெற்று வருகிறார்கள். பின்னே அவர்கள் உற்சாகமாக உழைத்து வருவதற்குக் கேட்க வேண்டுமா!

பக்ரா அணை கட்டி வரும் இடத்தில் இரவில் வேலை நடக்கும் அதிசயத்தைப் பார்த்துப் பார்த்து வியந்து போனோம். நயனாதேவி மலையின் சிகரத்தில், இரண்டாயிரம் அடி உயரத்தில் ஒரு மலைக்கும் இன்னொரு மலைக்கும் குறுக்கே இரண்டாயிரம் அடி நீளம் ஒரு பெரிய தேர் வடம்போல் இரும்பு வடத்தைக் கட்டியிருக்கிறார்கள். அந்த வடத்தில் நாலு நாலு பல்புகள் உள்ள கொத்துகள் பத்தடிக்கு ஒன்றாக இரண்டாயிரம் அடி நீளத்திலும் தொங்கிக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு பல்பு கொத்திலும் உள்ள பல்பு ஒவ்வொன்றும் ஆயிரம் வோல்ட் வெளிச்சம் கொடுக்கக் கூடிய சக்தியுடையது. சூரியன் அஸ்தமித்ததும் நூற்றுக்கணக்கான பல்பு கொத்துகள் ஒரே காலத்தில் எரிகின்றன. அதாவது பக்ரா அணை கட்டும் இடத்தில் வேறொரு சூரியனே உதயமாகி விட்டதோ என்று எண்ணி எண்ணி வியக்கும்படி ஜகஜ்ஜோதியாக வெளிச்சம் உண்டாகி விடுகிறது. சூரியன் அஸ்தமித்து விட்டான் என்ற உணர்வே ஏற்படுவதற்கு வழியில்லை. உண்மைச் சூரிய வெளிச்சத்துக்கும் இந்தச் செயற்கைச் சூரிய வெளிச்சத்துக்கும் ஒரு பெரிய வித்தியாசமும் இருக்கிறது. பகலில் வெயிலின் கொடுமையில் வேலை செய்வதை விட இரவில் இன்ஜினியர்கள் ஏற்படுத்திக் கொடுத்த மின்சார சூரிய வெளிச்சத்தில் இன்பமாகத் தொழிலாளர்கள் வேலை செய்து வருகிறார்கள்.

தொழிலாளர்களுக்கு வேண்டிய வைத்திய வசதிகளும் உடனுக்குடன் அளிக்கப்படுகின்றன. அவசர உதவிகளுக்குத் தயாராக ஆம்புலன்ஸ் வண்டிகள் நிறுத்தப்பட்டிருக்கின்றன.

பக்ரா அணையினால் கோடிக் கணக்கான மக்கள் பயன் அடையப் போகிறார்கள். ஆயிரம்

ஆயிரம் ஆண்டுகள் பயன் அடையப் போகிறார்கள். அதற்காக எத்தனையோ தொழிலாளர்கள் இன்றையதினம் தங்கள் இன்னுயிரைத் தியாகம் செய்யத்தான் வேண்டி யிருக்கிறது. மிகவும் அபாயமான இடங்களில் எவ்வளவோ ஜாக்கிரதையாக வேலை செய்தாலும் தவிர்க்க முடியாத சில சமயங்களில் தொழிலாளர்கள் தங்களையே தியாகம் செய்யும்படியான நிலை ஏற்படத்தான் செய்கிறது.

பக்ரா அணையைக் கட்டி முடிப்பதற்காகத் தங்கள் உயிரைத் தியாகம் செய்யும் தொழிலாளர்களைப் பாரததேசம் என்றென்றும் மறக்காது. அவர்களின் நினைவுச் சின்னமாக பக்ரா அணையே வானோங்கி நின்று திகழும். பக்ரா அணை கட்டி முடிப்பதற்காகத் தங்களைத் தியாகம் செய்யும் அந்த உத்தமத் தொழிலாளர்களை நினைத்து அவர்களுக்குத் தலை வணங்குவோம்.

## சுரங்கக் குழாய்க் கால்வாய்

பக்ரா அணை கட்டுவதற்காக நயனதேவி மலையைக் குடைந்து சுரங்கக் கால்வாய் அமைத்திருக்கிறார்கள் அல்லவா! அதைப் பற்றிச் சில விவரங்களைக் கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தச் சுரங்கக் கால்வாய் உலகிலேயே மிகப் பெரிய நீளமான கால்வாய். இது வரையில் ஒரு அணை கட்டுவதற்காக அவ்வளவு பெரிய சுரங்கக் கால்வாய் கட்டியதே இல்லையாம். ஒவ்வொரு கால்வாயும் அரை மைல் நீள முடையது. இந்தக் கால்வாயைக் கட்டி முடிப்பதற்காக ஐந்து கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள். ஐந்தாண்டுகள் இரவு பகலாகப் பாடுபட்டுக் கட்டி யிருக்கிறார்கள்.

இந்தச் சுரங்கக் குழாய்க் கால்வாயின் உயரம் ஐம்பது அடி. மண் அணைக்கு இருபுறத்திலும் உள்ள இரண்டு மலைகளிலும் ஒவ்வொரு மலையிலும் ஒரு சுரங்கக் குழாய்க் கால்வாய் கட்டி யிருக்கிறார்கள். கால்வாய் ஆரம்பத்தில் நாலு மூலையாகச் சதுரமாக இருக்கிறது. குழாய்க்கால்வாய் முடியும் இடத்தில் வட்ட வடிவமாக இருக்கிறது. அணை கட்டி முடிந்தவுடன் ஐந்து கோடி ரூபாய் செலவு செய்து ஐந்தாண்டுகள் கஷ்டப்பட்டுக் கட்டிய இந்தக் கால்வாயை மூடிவிட வேண்டியதுதான். அதற்காக இந்தக் கால்வாயை மூடுவதற்கு வேண்டிய பலமான பல இரும்புக் கதவுகளையும் இப்பொழுதே இந்தக் கால்வாயில் செய்து வைத்திருக்கிறார்கள்.

ஸட்லஜ் நதி இப்பொழுது இந்த இரண்டு சுரங்கக் குழாய்க் கால்வாய் வழியாகத்தான் பிரிந்து ஓடி வருகிறது.

பக்ரா அணை கட்டும் இடத்துக்கு அருகில் ஸட்லஜ் நதிக் கரையில் சென்று மலைகளுக்கு அடியில் உள்ள அந்தச் சுரங்கக் கால்வாய் வழியாகத் தண்ணீர் ஓடி வரும் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அந்தக் குழாயிலிருந்து குபு குபு என்று தண்ணீர் பீய்ந்துக் கொண்டு வந்து ஸட்லஜ் நதியில் விழும் அழகைக் கம்பனும் காளிதாசனும்தான் வர்ணிக்க வேண்டும். அந்தத் தண்ணீரைப் பார்த்துக்கொண்டே இருந்தால் பசியே இருக்காது. மனத்தில் இருந்து கவலைகள் எல்லாம் மாயமாய் மறைந்து போகும். அப்படி ஒரு அழகு அதிலே மிளிர்கிறது.

இந்த மாதிரி ஸட்லஜ் நதியைப் பிரித்து அணை கட்டும் இடத்தில் தண்ணீர் இல்லாமல் செய்யாவிட்டால் அணை கட்ட முடியுமா? ஸட்லஜ் நதியின் பயங்கர வேகத்தை வேறு எந்தவகையாலும் தாங்கிவிடத்தான் முடியுமா?

## பக்ரா அணை

**ப**க்ரா அணை கட்டும் இடத்தில் மலையில் ஒரு வெள்ளைக் கோடு போட்டுக் காட்டியிருக்கிறார்கள். கீழே அகலம் குறைவாகவும் மேலே அகலம் அதிகமாகவும் அந்த வெள்ளைக் கோடு மலை மேலே ஏறிப் போகிறது. திருப்பதி வேங்கடாசலபதியின் நெற்றியிலே தீட்டியிருக்கும் நாமத்தைப் போல அந்த வெள்ளைக் கோடு காட்சி தருகிறது. நயன தேவி மலைகளில் குறிப்பிட்டிருக்கும் அந்த வெள்ளை நாமம் வானத்துக்கும் பூமிக்குமாக நிற்கிறது. மகாவிஷ்ணுவின் திருமுகத்தைப் பார்ப்பது போன்ற ஒரு பக்தி பரவசமே உண்டாகி விடுகிறது.

அணை கட்டி முடிந்தால் அது எவ்வளவு உயரம் போய் நிற்கும் என்று காண்பிப்பதற்காக அந்த மலையின் மீது அமைத்துள்ள அதிசயமான சாலைகள் வழியாகச் சென்று மலைகளின் சிகரத்தையே அடைந்து விட்டோம். அங்கிருந்து குனிந்து பார்த்தால் மலையின் அடிவாரத்தில் மனிதர்கள் இருப்பதே தெரியவில்லை. முப்பதடி நாற்பதடி உயரமுள்ள பெரிய பெரிய ராட்சஸ இயந்திரங்களை சின்னஞ் சிறு எறும்புகளைப் போல் கண்ணுக்குத் தெரியாமல் தோற்ற மளித்தன.

அந்த மலையின் உச்சியிலிருந்து இன்ஜினீயர் அணைக்கட்டு சம்பந்தமான மற்ற விவரங்களை எல்லாம் எடுத்துச் சொன்னார்.

இந்த அணை இருக்கும் இடம் இமாசலப் பிரதேசம். இந்த அணையைக் கட்டுவது பஞ்சாப் சர்க்கார். இதனால் பயன் பெறப் போகிறவர்கள் பஞ்சாப், பெப்சு, ராஜஸ்தான் முதலிய ராஜ்யங்களைச் சேர்ந்தவர்கள். இதற்குப் பண உதவி அளிப்பது இந்திய சர்க்கார் என்று சொல்லிவிட்டு மேலே விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

மொத்தம் அணைக்கட்டின் உயரம் அறுநூற்று எண்பது அடி. அஸ்திவாரத்தில் அணையின் அகலம் முந்நூற்று இருபத்தைந்தடி. அணையின் சிகரத்திலே அதன் அகலம் ஆயிரத்து எழுநூறு அடி. முப்பதடி அகலத்தில் அணையின் ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலைக்குச் செல்வதற்குப் பலமான கான்கிரீட் ரோடு போட்டிருக்கும். அணையின் அஸ்திவாரத்தில் அதன் குறுக்களவு எவ்வளவு தெரியுமா? ஆயிரத்து முந்நூற்றுப் பத்தடி.

**அ**ஸ்திவாரத்திலிருந்து அணைகட்டி முடிப்பதற்கு எவ்வளவு சிமெண்ட் உபயோகப்படுத்தப் போகிறார்கள் என்பதைக் கேளுங்கள். மணிக்கு நானூறு டன் சிமெண்ட் வீதம் நாலு ஆண்டுகள் இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் பக்ரா அணையில் கொட்டப் போகிறார்கள். அதாவது ஆயிரத்து முந்நூற்றுப் பத்தடி அஸ்திவார அகலமும் முப்பதடி அகல சிகரமும் கொண்டு அறுநூற்று எண்பதடி உயர்ந்து நிற்கும் ஒரு பூதாகாரமான சிமெண்ட் மலையையே கட்டப் போகிறார்கள்.

அந்த அணைக்குச் செலவாகும் சிமெண்டைக் கொண்டு பக்ராவிலிருந்து இங்கிலாந்து வரையில் முப்பதடி அகலமும் மூன்றடி உயரமும் உள்ள ஒரு கான்கிரீட் சாலை போடலாம் என்றால் அந்த அணைக்கு எவ்வளவு சிமெண்ட் உபயோகப்படுத்தப் போகிறார்கள் என்பதனைக் கற்பனை செய்து பாருங்கள். இந்த அணைக்கு வேண்டிய சிமெண்டை ஏ. ஸி. ஸி. சிமெண்ட் ஸ்தாபனத்தார் வழங்கப் போகிறார்கள். பெப்சுவில் சுராஜ்பூர் என்னும் இடத்திலிருக்கும் ஏ. ஸி. ஸி. சிமெண்ட் தொழிற்சாலையிலிருந்து பக்ரா அணைக்கு வேண்டிய சிமெண்ட் தடங்கல் இல்லாமல் வந்து கொண்டிருக்கிறது.

சிமெண்டுடன் கலப்பதற்கு வேண்டிய மணலுக்கு வேண்டிய கருங்கல் உருளைக் கற்கள் பக்ராவிலிருந்து ஐந்து மைல்களுக்கு அப்பால் உள்ள பத்தேக்பால் என்ற இடத்திலிருந்தும் இரண்டரை மைல் தூரத்துக்கு அப்பால் உள்ள நைல்லா என்ற இடத்திலிருந்தும் கான்வஸ் பெல்ட் மூலம் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

**அ**டாடா! அந்த பெல்ட் மூலம் கூழாங் கற்கள் வரும் அதிசயமே அதிசயம். மூன்றடி அகலத்துக்குக் கான்வஸ் துணியில் ரப்பர் மேல் உறை போட்டிருக்கிறது. அந்தத் துணி மிக நெருக்கமாக அமைத்துள்ள உருளையின் மேல் ஓடுவதற்குத் தயாராகக் காத்துக்கொண்டிருக்கிறது. கூழாங் கற்கள் நிறைந்துள்ள இரும்புச் சட்டிகளை அந்தத் துணியின்மேல் வைக்கிறார்கள். இயந்திரத்தின் உதவியால் உருளைகள் வேகமாகச் சுழன்று உருளுகின்றன. ரப்பர் உறை போட்ட கான்வஸ் துணி ஓட ஆரம்பிக்கிறது. இரண்டு பக்கமும் ஏற்றலாகவும் மத்தியில் பள்ளமாகவும் உள்ள அந்தத் துணியில் வைத்த உருளைக் கல் நிரம்பிய இரும்புச் சட்டிகளும் ஓடுகின்றன. கற்கள் போய்ச் சேரவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்ததும் இரும்புச் சட்டிகளில் இருக்கும் கூழாங் கற்களை எடுத்துக் கொட்டிக்கொண்டு வெறும் இரும்புச் சட்டிகளைக் கான்வஸ் துணியில் வைத்து விடுகிறார்கள். அந்த வெறும் சட்டிகள் திரும்பவும் கூழாங்கற்கள் இருக்கும் இடத்துக்குச் சென்று விடுகின்றன. அங்கு சட்டியில் கூழாங்கற்களை நிரப்பி மீண்டும் கான்வஸ் பெல்டில் வைத்து விடுகிறார்கள். கூழாங் கற்கள் மீண்டும் பிரயாணம் செய்ய ஆரம்பித்து விடுகின்றன.

அவை எத்தனையோ இடங்களில் உயரமாக ஏறுகின்றன, இறங்குகின்றன. இன்னும் என்னென்னவோ ஜால வித்தைகள் எல்லாம் செய்து கொண்டு எங்கும் கவிழ்ந்து விடாமல் செல்லும் அதிசயத்தை நேரில் பார்த்துத்தான் அநுபவிக்க வேண்டும்.

இன்ஜினீயர் இதுபோன்ற பல புள்ளி விவரங்களையும், ரஸமான நிகழ்ச்சிகளையும் விளக்கிச் சொல்லிக் கொண்டிருக்கும்போது இடி முழக்கம்போல் அதிர்வேட்டுச் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து பலவிதமான சத்தங்கள் வந்தன. மலைப்பாறைகள் வானத்தில் பறந்தன. தொழிலாளர்கள் மூலைக்கு மூலை சிதறி ஓடினார்கள். நாங்கள் ஒரு கணம் ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றோம். (தொடரும்)

# திருவாளர் கந்தசாமி

கிருஷ்ணன் பாலா



**ப**த்திரிகைக் காரியாலயத்தில் "டெலிபிரிண்டர்" கருவியைப் பார்த்துக் கொண்டிருந்த உதவி ஆசிரியர் பாலகிருஷ்ணன் துள்ளிக் குதித்தார்.

"கிருஷ்ண சாமி! கோபாலமேனன்! அச்சுத மேனன்!... ஸார்... ஸார்...அடேடே......அப்பாடி...நல்ல வேளை!"

"என்ன, என்ன!" என்று டஜன் கணக்கில் குரல்கள் துள்ளிக் கேட்டன. உலகில்எந்த இடத்தில்,யாருக்கு,என்னவோ! சர்வாந்தர்யாமி, இந்த 'டெலி பிரிண்டர்.'

"நல்ல வேளை ஸார்... நமது தலைவரை யாரோ ஒருத்தன் கத்தியால் குத்தப் பார்த்தானும்... அவரே தடுத்து விட்டாராம்..."

"காயமொன்றும் இல்லையே!..."

"நல்ல வேளையாக இல்லை..."

"ப்ஷா ... சொல்ல முடியாது" என்ற குரல் கேட்டு அனைவரும் திரும்பினார்கள். புதிதொன்றும் இல்லை அது. ஹெட் அக்கௌண்டண்ட் திருவாளர் கந்தசாமியின் குரல்தான். இதழ்களில் ஒருவிதமான குரூரச் சிரிப்பு நெளிந்தது. எப்போதும் போல் அவர் நின்று கொண்டிருந்தார்.

"என்ன சொல்ல முடியாது!"

"அதான் ஸார் ... தலைவருக்குக் காயமில்லை என்று..."

"எப்படி!"

"எப்படியாவது!...எங்கேயாவது ஒருத்தன் கத்தியால் குத்த வந்தால், அதைத் தடுத்துக் கொண்டு, காயமில்லாமல் தப்ப முடியுமா! இருக்கும் ஸார், ஏதாவது இருக்கும்! வீண் காபரா பண்ண வேண்டாமென்றுதான் இந்த மாதிரி 'நியூஸ்' கொடுத்திருக்கிறார்கள்."

"ஆமாம், குத்த வந்தவனை யாராவது அடித்துப் போட்டு விட்டார்களோ!"

"இல்லை, அவன் போலீசில் பத்திரமாக இருக்கிறான்!"

"இருக்காது ஸார்!"

"என்ன இருக்காது!"

"கும்பல் கூடி அவனை நொறுக்கி யிருப்பாங்க ஸார்...எலும்பையெல்லாம் ..."

"இல்லே சார் என்கிறேனே!"

"ஆ...மா...ம்... இந்த 'டெலி பிரிண்டர்' செய்தியை வைத்துக் கொண்டுதானே சொல்லுகிறீர்கள்! அதை உடைப்பிலே போடும்!"

திருவாளர் கந்தசாமி, திரும்பி நடந்து சென்று, தமது கூட்டல், கழித்தல் இயந்திரத்துக்கு எதிரே அமர்ந்து கொண்டார், எப்போதும் போல, கடல் போன்ற சோகம் அவர் முகத்தில் கவிந்து கொண்டது. இடையிடையே சிரித்துக் கொண்டார்.

இவரையே பார்த்துக் கொண்டிருந்த பாலகிருஷ்ணன் 'களுக்' கென்று நகைத்தான்.

"ஏன் ஸார், தலைவருக்கு மணிக்கட்டில் சிராய்த்தது என்றாவது சொன்னால்தான் மனுஷனுக்குத் திருப்தி போலிருக்கே!"

"இல்லையானால் குத்த வந்தவனுக்கு இரண்டு விலா எலும்பாவது நொறுங்கி யிருக்க வேணும், இல்லையென்றால்...சே, சே......"

"ஏன் ஸார், இது இப்படி இருக்கு!"

"எப்படி!"

"அப்படியா! அன்னிக்கு 'ஸ்வாரக்' விமான விபத்து குறித்து நியூஸ் வந்ததே நினைவிருக்கிறதா! நொறுங்கிப் போன விமானத்திலே சௌ-என்-லாய் இல்லை என்று தெரிந்தது. இவர் கிட்டே சொன்னேன், என்ன சொல்லுறார் பதில்! இதே 'ப்ஷா சொல்ல முடியாது' தான். சௌ-என்-லாய் அதிலே இருந்திருப்பாராம்! கம்யூனிஸ்ட் தேசங்கள் உண்மையைச் சொல்லாதாம். கடைசியில்தான் தெரியுமாம். 'அப்போ தெரியும் ஐயா, இந்தியா சங்கதி!......தொலைச்சப்புடுவான்கள், பாரு!' என்று சொல்லிச் சிரித்துக் கொள்ளுகிறார்."

திருவாளர் கந்தசாமி எப்போதுமே இப்படித்தான்.

ஏதாவது ஒரு திட்டத்தை நடத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் இருப்பவர்கள், "வயதானவராயிற்றே! இவரிடமும் சொல்லிப் பார்க்கலாம்" என்று திருவாளர் கந்தசாமியிடம் தங்கள் எண்ணத்தைச் சொல்லுவார்கள். முழுவதும் கேட்டுக் கொள்ளுவார் அவர். 'ப்ஷா' என்பார் மேட்டு வளையைப் பார்த்தபடி. "சொல்ல முடியாது" என்று முத்தாய்ப்பு வைப்பார். அவசிய மிருந்தால், எதிரில் அமர்ந்திருப்பவரின் திட்டம் எப்படியெல்லாம் நாசமாகப் போகும், எப்படி நஷ்டம் விளைவிக்கும் என்று கோடி காட்டுவார். அவ்வளவுதான். குளவி பறந்து பறந்து பாய்ச்சல் காட்டும் போது, அதை அடிக்கிறேன் என்று போய், ஒரு கண்ணாடியையும், ஒரு கடிகாரத்தையும் உடைத்துக் குளவியாலும் கொட்டுப்பட்டுக் கொண்டவர் எப்படி அலமந்து போய் நிற்பாரோ அப்படி இருப்பார் எதிராளி.



தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையினர் தென்னிந்திய வட இந்திய கலாசார இணைப்பை நோக்கமாகக் கொண்டு 'கலா பாரதி' என்னும் கலைக் குழு ஒன்றைத் தொடங்கி நடத்தி வருகிறார்கள். அதன் சார்பில் 'சல்தி துனியா' என்ற ஹிந்தி நாடகம் நடிக்கப்பட்டது. தலைமை வகித்த ஸ்ரீ லால் சந்த் நாநா அவர்கள் தென்னிந்தியரின் கலைத் திறனையும் ஹிந்தியைத் தெளிவாக கையாளும் முறையையும் பாராட்டிப் பேசினார். நாடகத்தில் பங்கு எடுத்துக் கொண்டவர்களைப் படத்தில் காணலாம்.

---

அன்று அப்படித்தான்; உதவி ஆசிரியர் பாலகிருஷ்ணன் நொண்டிக் கொண்டே காரியாலயத்துக்கு வந்தார்.

"என்ன ஸார், காலிலே என்ன காயம்!"

"ஒன்றுமில்லே, மிஸ்டர் கந்தசாமி! காரிலே உட்கார்ந்திருக்கும் போது, பாவிப் பயலுக கதவைப் படாரென்று சாத்தினுங்க. மூணு விரல் மாட்டிக்கிட்டுது."

"அடாடா! எலும்பு போச்சா...!"

பாலகிருஷ்ணன் பிறர் முகம் கோணச் சகிக்க மாட்டார். அதற்காக முழுப் பொய்யும் சொல்ல மாட்டார். சமாளித்துக் கொண்டு, "எலும்பு போச்சா, இல்லையா என்று இன்னும் இரண்டு நாட்கள் கழித்துத்தான் தெரியுமாம்" என்றார். திருவாளர் கந்தசாமியின் முகத்தில் புன்னகை படர்ந்தது. "சொல்ல முடியாது. இதெல்லாமே, கொஞ்ச நாள் கழித்துத்தான் தெரியும். நம்ம ஆசிரியரின் மருமானுக்குப் பாருங்க..." என்று விஸ்தாரமாகச் சில கோரக் கதைகள் சொன்னார்.

பாலகிருஷ்ணன் யோசிக்கலானார். திருவாளர் கந்தசாமி ஏன் இப்படிப் பிறர் சிரமப் பட வேண்டுமென்று ஏங்க வேண்டும்! அவரும் பார்த்து விட்டார். ஆபீஸ் பையன் முதல் பிரதம மந்திரி வரை கந்தசாமிக்கு ஒன்று தான். பிறருக்குக் கஷ்டம் என்றால் அவர் முகம் விகசிக்கிறது. ஏன் அது! சிலர் பழைய ஸ்டாம்புகளையும், நாணயங்களையும் சேர்த்து வைத்துக் கொள்ளுவது போல, இவர் தமது பழைய இன்னல்களையே எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கிறாரோ! அதனால்தான் பிறர் கஷ்டப்படுவதில் இவருக்கு ஆனந்தமோ! இல்லா விட்டால் வேறு என்ன! பாலகிருஷ்ணனின் மூளையில் ஏதோ ஒன்று பளிச்சிட்டது. இருக்கலாம்... இருக்கலாம்... ஹாவ்லாக் எல்லிஸ் முதல் 'பால நிபுணன்' வரை எத்தனை மனத் தத்துவப் புத்தகங்களை அவர் கரைத்துக் குடித்திருக்கிறார்! கந்தசாமியின் வீட்டுக்கு அடிக்கடி போய்ப் பார்த்து நிலைமையைத் தெளிவு பண்ணிக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தார்.

அன்றிலிருந்து பாலகிருஷ்ணன் அடிக்கடி கந்தசாமியுடன் காணப்பட்டார். அவர் வீட்டில் பழியாகக் கிடந்தார். ஸ்ரீமதி கந்தசாமியின் முகத்தில் அவர் எதிர்பார்த்தபடி ஏமாற்றக் களை ஏதும் இல்லை. அவள் வயதுக்கும் அவனுடைய குழந்தைகளுக்கும் ஏற்ற அளவு பருமனுடன் நிறைந்துதான் இருந்தாள் அவள். ஒரு நாள் இரவு கந்தசாமியின் வீட்டிலேயே எதையோ சாக்காக வைத்துக் கொண்டு தங்கினார் பாலகிருஷ்ணன். கந்தசாமி தமது மூத்த பிள்ளையை ஏதோ கண்டபடி திட்டி விட்டுச் சாப்பிட வந்தார். கந்தசாமியும், பாலகிருஷ்ணனும் படுக்கையில் படுத்தபடி பேசிக் கொண்டிருந்தார்கள். கோபத்தையும் கொட்டாவியையும் அடக்கிக் கொண்டு பாலகிருஷ்ணன் சகித்துக் கொண்டார். பிறகு தூங்குவது போலப் பாசாங்கு செய்தார். அதைப் பாசாங்குடன் நிறுத்திக் கொள்ளுவதற்கு அவர் பட்டபாடு அவருக்குத்தான் தெரியும்! திருவாளர் கந்தசாமி மெதுவாக நழுவியதையும் அவர் அறிவார். அன்று இரவு கண் விழித்தார் பாலகிருஷ்ணன். அவர் எதிர்பார்த்த விம்மலோ, சீறலோ எதுவுமே காணோம். சிவந்த கண்களுடன் மறு நாட்காலை அவர் வீடு திரும்பியதுதான் மிச்சம். ஆனால் அதற்காக அவர் தமது விஜயத்தை நிறுத்தவில்லை. ஒரு நாள் கந்தசாமியின் மனைவி பாலகிருஷ்ணனைப் பார்த்துக் கேட்டாள்: "உங்க தம்பி ஏதோ அந்தக் கலெக்டர் பரீட்சை கொடுத்திருக்காங்கன்னு சொன்னீங்க இல்லே!"

"ஆமாம், அம்மா!"

"எப்படி எழுதியிருக்காரு...... !"

"நன்றாய்த்தான் எழுதியிருக்கான்...ஏதோ, பார்க்கணும்......"

"நமக்கெல்லாம் அது எங்கேங்க...அதுக்கு என்னவோ பெரிய சிபார்செல்லாம் வேணுமாமில்லே! உறவுக்காரர்களும் பெரிய மனுஷங்களா இருக்கணுமாமில்லே...... !"

"அதெல்லாம் இல்லேம்மா......கொஞ்சம் கூடக் கிடையாது" என்றார் பாலகிருஷ்ணன்.

"சொல்ல முடியாதுங்......"

ஸ்ரீமதி கந்தசாமி தொடர்ந்து என்ன சொன்னாளோ! அது பாலகிருஷ்ணனின் செவிக்குள் புக மறுத்தது. அவர் அம்மையாரின் முகத்தைப் பார்த்தார். அதே கந்தசாமிச் சிரிப்பு!......நல்ல ஆராய்ச்சி செய்ய வந்தார் அவர்! இரண்டு பேரும் இதிலே ஒன்றுதானா! அவசரமாக விடைபெற்றுக் கொண்டு அவர் விரைந்து நடக்கலானார். பெரு நடை ஓட்டமாகிச் சிறு நடையாகி டாக்டர் குணரத்தினத்தின் வீட்டு வாசல் நிலைக்கு வந்து நின்றது.

டாக்டர் குணரத்தினம் பாலகிருஷ்ணனுக்குத் தெரிந்தவர்தான். மனத்தத்துவ டாக்டர் அவர். பொறுமையுடன் பாலகிருஷ்ணன் சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டார். அவர் நெற்றியில் மடமட வென்று மூன்று சுருக்கங்கள் படிந்தன. படிந்த விரைவில் அவை அகன்றன.

"நீங்கள் ஒவ்வொருவரும் திருவாளர் கந்தசாமிக்கு விரோதிகள்!" என்றார் டாக்டர்.

"விரோதிகளா! எப்படி!" என்றார் அதிசயத்துடன் பாலகிருஷ்ணன்.

"நீங்கள் ஒவ்வொருவரும், தாம் செய்ய வரும் காரியத்துக்குக் குறுக்கே நிற்பதாக அவர் நினைத்துக் கொள்ளுகிறார். ஆகவே, அவரைப் பொறுத்த மட்டில் நீங்கள் எல்லோரும் அவருக்கு விரோதிகள் தாம்."

"நமது தலைவரும், சென-என்-லாயும் அவருக்கு எப்படி விரோதி யானார்கள்!"

"அது பழக்க தோஷம். உலகமே அவருக்கு விரோதி...... மனித குலமே அப்படி."

"ஏன்!" என்று கேட்டார்.

"அவர் எப்போதோ பலருக்குக் கெடுதி விளைவித்திருக்க வேண்டும். அது நெஞ்சுக்குள் நெடுநாள் வரை அமுங்கியிருந்து ஒரு நாள் வெளிக் கிளம்பியிருக்கிறது. தம்மால் கெட்டவர்கள் தம்மைப் பழி வாங்கப் போகிறார்கள் என்ற அச்சம் அது. அச்சத்தால் பிறப்பது கொடுமை...புரிகிறதா ஓய்!"

"ஊம்!"

"அதனால்தான் யாருக்கும் கெடுதி வந்தால் அவர் சந்தோஷப்படுகிறார்......"

"அது சரி. ஸ்ரீமதி கந்தசாமியின் விஷயம் எப்படி! அவர்கள் ஏன்...!"

"அட பயித்தியக்கார மனிதரே! அது பழக்க தோஷம் ஐயா...!"

"சரி......"

"உமக்கு இந்த விஷயத்தில் ஆர்வம் இருந்தால், ஸ்ரீமான் கந்தசாமி எப்போது யாருக்கு என்ன விதமாகத் தீங்கு செய்தார் என்று கண்டு பிடிக்கப் பாரும். பார்த்து வந்து என்னிடம் சொல்லும்" என்றார் டாக்டர்.

"சரி......பார்க்கிறேன்......"

பாலகிருஷ்ணன் அன்று முதல் திருவாளர் கந்தசாமியின் பூர்வோத்திரங்களை விசாரிக்கலானார். அவர் தம்பி ஏதோ இருபத்திஇரண்டு வயதில் மலேயாவுக்கு ஓடிவிட்டதாகச் சொல்லிக் கொண்டார்கள். அவர் அண்ணா பிள்ளை ஒருவன் பதினெட்டு வயதில் இரண்டே நாள் ஜுரத்தில் போய் விட்டானாம். கந்தசாமிக்கு முன்னாலிருந்த ஹெட் அக்கௌண்டண்டை, முதலாளி வேலையை விட்டு நீக்கிக் கந்தசாமிக்கு அந்த உத்தியோகத்தைக் கொடுத்ததாகத் தெரிய வந்தது. பணம் கையாடிய குற்றத்துக்காக அவரைப் போகச் சொல்லிவிட்டார்களாம். நிஜமாக அவர் குற்றவாளியோ, அல்லது இந்தக் கந்தசாமியே......சே!...வெளியே போன மனிதருக்கு எத்தனை பிள்ளை குட்டிகளோ!......பாவம்...இம்மாதிரி எத்தனையோ விவரங்கள் சேகரித்துத் தொகுத்துப் பார்க்கலானார் பாலகிருஷ்ணன். தினம் நான்கு முறைகளாவது அவர் பந்தயக் குதிரை போல உடல் சிலிர்ப்பதும், எதையாவது சொல்லிக் கொண்டு தம்மையே நம்ப வைத்துக் கொள்ளுவதும் சகஜமாகி விட்டன.

ஒரு நாள் கந்தசாமி பாலகிருஷ்ணனைக் கூப்பிட்டார். தாம் வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த காப்பியில் பாதி ஊற்றி அன்புடன் கொடுத்தார். மீதிப் பாதியைக் கந்தசாமி சாப்பிடத் தொடங்கின பிறகுதான் பாலகிருஷ்ணன் தமக்குக் கொடுக்கப்பட்டதைச் சுவைக்கலானார்.

"என்னங்க ... இப்பொழுதெல்லாம் நம்ப மேஜைப் பக்கம் வருகிறதே இல்லை...... !"

"ஒண்ணுமில்லீங்க, வேலைதான். மேனன் வேறே லீவு."

"பாவம், ரொம்பக் களைப்பாத்தான் தெரியுது! அப்புறம் வீட்டிலே எல்லாரும் சௌக்கியமா! தம்பிக்கு இண்டர்வியூ ஏதும்வந்ததா!"

"வந்திருக்குது, டெல்லிக்குப் புறப்பட்டுப் போயிருக்கான்!"

"அவன் ஜமாய்ச்சப்பிடுவானுங்க. நான் சொல்லறேன் கேளுங்க, நம்ம தெற்கத்திப் பசங்களுக்குத்தான் இனிமேல் நிறைய வேலை கொடுக்கப் போறாங்களாம்..."

பாலகிருஷ்ணன் குழன்றார். என்ன இது, கந்தசாமியா தம்மெதிரில் உட்கார்ந்திருப்பது! என்ன மாறுதல்! ஆமாம். திடீரென்று அவருக்கு நினைவு வந்தது. இரண்டு மூன்று நாளைக்கு முன்பு, ஐஸன் ஹோவருக்கு இருதய நோய் என்று தகவல் சொன்னபோது கூடக் கந்தசாமி கொக்கரிக்க வில்லை. "எல்லாம் சரியாகப் போயிடும் சார், அமெரிக்காவிலே செத்தவங்களுக்கே உயிர் மூட்டிடுவாங்களே" என்றுதான் சொன்னார்.

"நீங்க நம்ம வீட்டுக்கு நடுவிலே அடிக்கடி வந்துக்கிட்டிருந்தீங்க. இப்பத்தான் நிறுத்திட்டீங்க, விஷயம் தெரியுமில்லை. நம்ப பையன் எட்டுத்தரமா பி. ஏ. போய்க்கிட்டே இருந்தவன் இரண்டாம் கிளாஸிலே தேறிப்புட்டானும். இந்த செப்டம்பரிலே பிரைவேட்டாச் சொன்னாங்க. அப்புறம் பாருங்க, தந்தாரியாச் சுத்திக்கிட்டிருந்தவன் கல்யாணம் பண்ணிக்க ஒத்துக்கிட்டிருக்கான். நம்ப ஆபீஸிலேயே வேலை போட்டுத் தருவதாக ஆசிரியர் சொல்லி இருக்காரு! இனிமே எனக்கு என்ன ஸார் வேணும்! அவன் கவலைதான் பெருங் கவலையாக இருந்தது. அவனுக்கே மனசு மாறிப் பொறுப்பு வந்தாச்சு. இனிமேல் எனக்கு என்ன கவலை சார், சொல்லுங்க!"

"ஹி ஹி..."

"பையன் கல்யாணத்துக்கு அவசியமா வரணும் நீங்க! அதுக்கும் மூர்த்திக் கல்யாண விஷயங்களிலேயும் ஒத்தாசை பண்ண வேணும்."

"அதுக்கென்னங்க, கண்டிப்பா வரேன்."

"இத்தனை நாளா மனசு கவலையிலே உலகமே எனக்கும் அவனுக்கும் வெறுப்பா இருந்துதுங்க! இப்பத்தான் மனசு, மனசா இருக்குது......" என்றார் அவர்.

"இல்லீங்களா, பின்னே! ஹி...ஹி..."

கந்தசாமியை நிமிர்ந்து பார்க்கவே அவமானமாக இருந்தது பாலகிருஷ்ணனுக்கு. அவர் சமாளித்துக் கொண்டு தமது இடத்துக்கு வந்தார். "கந்தசாமி ருஷிப் பேர்வழி ஆகிவிட்டாரே!" என்றுதான் காரியாலயத்தில் எல்லோரும் பேசிக் கொண்டார்கள். பாலகிருஷ்ணன் மட்டும், "கந்தசாமியின் இடுங்கிய கண்கள், கொடுமை அகன்று விசாலமாகி விட்டன" என்று தமக்குள் சொல்லிக்கொண்டார்.

# இரண்டும் வாட்டர்புரூப் கடிகாரங்கள் — அவை ரோலெக்ஸ் தயாரிப்புகளுந்தான்



ஆடவருக்கேற்றது டியூடர். அதன் வாட்டர் புரூப் கேஸ் உள்ளிருக்கிற நேர்மையான 17 ஜுவல் யந்திரத்தை தூசி, அழுக்கு, ஈரம் புகாமல் பாதுகாக்கின்றது. வெளியே அதை அலைகளுடைய பெண்மணிகளுக்கு டியூடர் ஆயிஸ்டர் கடிகாரத்தை சிபார்சு செய்வோம் — வருடக்கணக்கில் சேவைபுரியும்.

எமது டியூடர் கடிகாரங்களின் எல்லா நிறுசுகளையும் வந்து பாருங்கள் — நேரில் வரமுடியாதவர்களுக்கு ஒரு இலவச காட்லாக் அனுப்புவோம்.

## டியூடர்

கடிகாரங்கள்

ஜெனிவா, ஸ்விட்ஸர்லாந்து, தயாரிப்புகள்

தென்னிந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

K. 758

# ஆற்றங்கரையினிலே



பேராசிரியர், ரா. பி. சேதுப்பிள்ளை

## 44. கும்பகோணம்

சோழ வள நாட்டிலே சாலச் செழுமை யுற்று விளங்கும் நகரம் கும்பகோணம். குடமூக்கு என்பது அதன் பழம் பெயர். பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னே எழுந்த பக்தமிழ்ப் பாசுரங்களில் குடமூக்கு என்றே இவ்வூர் குறிக்கப் படுகின்றது. குடமூக்கு எவ்வாறு கும்பகோணம் ஆயிற்று என்பது அறியத் தக்கதாகும்.

தமிழ் நாட்டில் பெயர் மாறிய பழம் பதிகள் சில உண்டு. காவிரியாற்றின் கரையிலுள்ள மயிலாடுதுறை என்ற ஊரின் பெயர் மாயூரபுரம் என்று வடமொழியில் பெயர்க்கப் பட்டது. மாயூரபுரம் மாயூரவரமாக மாறி, மாயவரம் எனச் சிதைந்தது. மயிலாடு துறையே அவ்வூரின் பழம் பெயர் என்பது "நீல மாமயில் ஆடு துறையனே" என்ற தேவாரத் திருவாக்கால் இனிது விளங்கும்.

மணிமுத்தா நதியின் கரையிலே திகழ்கின்றது விருத்தாசலம் என்னும் திருநகரம். முன்னாளில் முதுகுன்றம் என்பது அதன் பெயர்.

> **"முத்தாறுடைய முதல்வர்**
> **கோயில் முதுகுன்றே"**

என்று அத்தலத்தைப் பாடினார் திருஞான சம்பந்தர். முதுகுன்றம் என்ற தமிழ்ப் பெயர் வடமொழியில் விருத்தாசலம் ஆயிற்று.

சோழ மண்டலக் கரையில் இப்பொழுது வேதாரண்யம் என்று வழங்கும் ஊர் முன்னாளில் மறைக்காடு என்னும் பெயர் பெற்றிருந்தது. அவ்வூரில் கோயில் கொண்ட ஈசனை,

> **"மம்மர் அறுக்கும் மருந்து கண்டாய்**
> **மறைக்காட் டுறையும் மணாளன் தானே"**

என்று பாடினார் ஓர் அருட் பாவலர். மறைக்காடு என்னும் தமிழ்ப் பெயரின் மொழிபெயர்ப்பே வேதாரண்யம் என்பது வெளிப்படை.

பண்டைத் தமிழிலே கிழக்கைக் குணக்கு என்றும், மேற்கைக் குடக்கு என்றும் குறிக்கும் வழக்குண்டு. தமிழகத்தின் கிழக்கு எல்லையாகவும் மேற்கு எல்லையாகவும் அமைந்த நெடுங் கடல்களை முறையே குணகடல் எனவும் குடகடல் எனவும் சங்க நூல்கள் கூறும். குணவாசல் என்றும் குடவாசல் என்றும் பெயருடைய ஊர்கள் இந்நாட்டில் உள்ளன. "குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்தார்" இளங்கோவடிகள் என்று சிலப்பதிகாரப் பாயிரம் சொல்லும். தஞ்சை மாவட்டத்தில் குடவாயில் என்று பெயர் பெற்றிருந்த ஊர், இப்போது கொடவாசல் என வழங்கப் பெறுகின்றது.

தமிழகத்தின் மேற்றிசையில் உள்ள நெடுமலைத் தொடர் முற்காலத்தில் குடமலை என்று குறிக்கப் பெற்றது. இந்நாளில் மேற்குத் தொடர்ச்சி மலை என்று கூறப் படுவது அதுவே. அக்குடமலையில் அமைந்த பொதிகையில் தோன்று தொட்டு வாழ்ந்து தமிழ் நலம் பேணினார் ஒரு முனிவர்.

" முத்தமிழ் மாமுனி நீள்வரையே—நின்று
மொய்ம்புறக் காக்கும் தமிழ்நாடு "

என்று பாரதியாரும் அம்முனிவரை மனமாரப் போற்றினர். அவரைக் குடமுனிவர் என்றும் அழைத்தனர் பழந் தமிழ் மக்கள். அவர் அருளால் வளர்ந்தோங்கிய தமிழின் பெருமையை,

" வடமொழியைப் பாணினிக்கு
வகுத்தருளி அதற்கு இணையாத்
தொடர்புடைய தென்மொழியை
உலகமெலாம் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார்
கொல்லேற்றுப் பாகர்வலிக்
கடல்வரைப்பின் இதன்பெருமை
யாவரே கணித்தறிவார் "

(பாணினி - வடமொழி இலக்கணம் செய்தவர்; குடமுனி - தமிழிலக்கணம் செய்தவர்; கொல்லேற்றுப் பாகர் — சிவபெருமான்; வரைப்பு - உலகம்)

என்று பாடினர், இரு மொழியும் இனிதுணர்ந்த மாதவர் சிவஞான முனிவர். குடமுனி என்னும் பெயரைக் கும்ப முனி என்று மொழி பெயர்த்தனர் வடமொழியாளர். அந்த வகையில் குடமூக்கு என்ற ஊர்ப் பெயரும் கும்பகோணம் என மொழி பெயர்க்கப் பட்டது.

குட மூக்கில் கோயில் கொண்ட சிவபெருமானையும் திருமாலையும் பாமாலை பாடிப் போற்றினர் பெரியோர்.

" தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்டவர்புரம் மூன்றொரு மாத்திரைக்
கொண்ட வன்உறை யுங்குட மூக்கிலே "

(விண்டவர் — பகைவர்; மாத்திரை— கணப்பொழுது)

என்று பாடியருளினர் திருநாவுக்கரசர். குடமூக்கில் பள்ளி கொண்ட திருமாலைப் பரிந்துபாடினர் முதலாழ்வார்களில் ஒருவர்.

" எங்கள் பெருமான் இமையோர் தலைவன்நீ
செங்கண் நெடுமால் திருமார்பா-பொங்கு
படமூக்கின் ஆயிரவாய்ப் பாம்பணைமேற்
சேர்ந்தாய்
குடமூக்குக் கோயிலாக் கொண்டு "

(இமையோர்-தேவர்)

என்பது அவர் திருவாக்கு. எனவே தேவாரப் பாடல்களிலும், ஆழ்வார்கள் அருளிய திருப்பாசுரங்களிலும் குடமூக்கு என்றே இவ்வூர் குறிக்கப்பட்டுள்ளது என்பது தெளிவாகும்.

குடமூக்கு என்ற பெயரைக் குடந்தை என்றும் குறுக்கி வழங்குவதுண்டு. ஆரா வமுதாய், அரவணையிற் பள்ளி கொண்ட திருமாலைக் குடந்தைப் பதியிலே கண் குளிரக் கண்டு வழிபட்டார் நம்மாழ்வார்.

" நீரா வினைகள் தீர என்னை
ஆண்டாய் திருக் குடந்தை
ஊரா உனக்கு ஆட் பட்டும்
அடியேன் இன்னும் உழல்வேனோ "

என்று மனமுருகிப் பாடினர்.

திருக்குடந்தையில் பல்லாண்டு வாழ்ந்து அப்பதியைப் புனிதமாக்கிய பெரியார்களுள் ஒருவர் திருமழிசை யாழ்வார். "திருமழிசைப் பிரான் உகந்த இடம்" என்று குடந்தையைப் புகழ்ந்துரைத்தார் பெரிய வாச்சான் பிள்ளை. குடந்தை மாநகரிலே கண் வளர்ந்த திருமாலைக் காணுந்தோறும் திருமழிசையார் காதல் பெருகிற்று: நினைக்குந் தோறும் அவர் நெஞ்சம் உருகிற்று.

" நடந்த கால்கள் நொந்தவோ
நடுங்கஞாலம் ஏனமாய்
இடந்த மெய் குலுங்கவோ
விலங்குமால் வரைச் சுரம்
கடந்த கால் பரந்த
காவிரிக்கரைக் குடந்தையுள்
கிடந்த வாறு எழுந்திருந்து
பேசு வாழி கேசனே "

என்று ஆசையுற்றுப் பாடினர்.

" என் ஐயனே! காடும் கரையும் அலைந்தமையால் உன் கால்கள் அலுத்தனவோ? திருமேனி சலித்ததுவோ? காவிரிக் கரையிலுள்ள குடந்தைக் கோவிலுள் பள்ளி கொண்டு இளைப்பாறிக் கொள்கின்றாயோ? அடியேற்கு நீயே அன்பாவாய்! ஆரமுதம் ஆவாய்! இன்பாவாய்! எல்லாமும் நீயே ஆவாய்! என்னை முகம் பாராயோ! எழுந்திருந்து பேசாயோ!" என்று முறையிட்டார்.

" அத்தனாகி அன்னை யாகி
ஆளும்எம் பிரானுமாய்
ஒத்தொவ்வாத பல்பிறப்பு
ஒழித்துநம்மை ஆட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார்
புகுந்து நம்முள் மேவினார்
எத்தினால் இடர்க் கடல்
கிடத்தி ஏழை நெஞ்சமே "

என்று ஏங்கி நின்ற தன் உள்ளத்தைத் தேற்றினர். "ஏழை மனமே! நீ ஏன் இடர்ப்படுகின்றாய்! என் அத்தனாகிய முத்தன்: தாயாகிய தலைவன்; பிறவியை வேரறுக்கும் பெருமான் அருங் கருணையால் என்னையும் ஆட் கொண்டான். தனக்குவமை யில்லாதான் தான் சேர்ந்தார்க்கு மனக் கவலையுண்டோ" என்று அறிவுறுத்தினர். "குடந்தை என்பார்க்குக் கொடுவினை யில்லை" என்று பாடினார் திருநாவுக்கரசரும்.

" குடமூக்கே குடமூக்கே என்பீராகில்
கொடுவினைகள் தீர்ந்து அரனைக்
குறுகலாமே "

என்பது அவர் திருவாக்கு. (தொடரும்)


வாழ்த்துக்கள்
எல்லோரும் புனித தீபாவளியை மங்களமாயும், மகிழ்ச்சியாயும் கொண்டாட எங்கள் அன்புமிக்க வாழ்த்துக்கள்.
METTUR INDUSTRIES LTD
METTUR MULL
மேட்டூர் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
மேட்டூர் அணை. சேலம் ஜில்லா.
மேட்டூர் மல், லாங்கிளாத் தயாரிப்பவர்கள்.
மானேஜிங் ஏஜண்டுகள் :
W.A. பியர்ட்ஸெல் & கோ., லிட்
ஸெகண்ட் லைன் பீச், சென்னை-1.




# கல்கியின் அமர தாரா

அத்தியாயம் 8

## இன்னல் தொடர்ந்தது

என் தந்தை சிறைப்பட்ட விவரம் தெரிந்தது முதல் என் அன்னை துடி துடித்துப் போனார். என்ன நொந்து என்ன பயன்? மனத்தைத் தேற்றிக் கொண்டு உயிர் வாழ வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இருந்தது. நான் ஒரு பிள்ளை இருந்தேனல்லவா? எனக்காக அவர் தைரியமாக இருந்தார்.

வாத்தியாரய்யா திருநெல்வேலி சென்று என் தந்தையை நேரில் பார்த்துப் பேசிவிட்டு வந்தார். வழக்கு நடத்துவதற்கும் ஏற்பாடெல்லாம் செய்தார். பெரிய வக்கீல் வைத்து வழக்கு நடத்துவதற்குக் கையில் பணம் ஏது? அது இல்லாததால் இன்னலுக்கு மேல் இன்னலாக வந்து எங்களைத் தாக்கிற்று. அந்தச் சமயத்தில் எங்களிடம் ஊரார் அனைவருமே அனுதாபத்துடன் நடந்து கொண்டார்கள் என்று சொல்ல வேண்டும். அதிலும் பண்ணையார் வேதாசலம் மிகவும் உதவியாக இருந்தார். அவருடைய உதவி யில்லாவிட்டால் தமிழ் வாத்தியார் தர்மலிங்கத்தாலும் ஒன்றும் செய்திருக்க முடியாது. போய்ப் பார்த்திருக்கக் கூட முடியாது.

என் அன்னை மட்டும் சென்று என் தந்தையைப் பார்த்துவிட்டு வந்தார். என்னை அழைத்துச் செல்ல மறுத்துவிட்டார். அதற்கு என் படிப்பு கெட்டுவிடும் என்று காரணம் கூறினார். ஆனால் அது உண்மைக் காரணம் அல்ல என்று எனக்குத் தெரிந்திருந்தது. என் தந்தை சிறையில் இருப்பதை நான் பார்க்கக் கூடாது என்பதே அவருடைய எண்ணம் என்பதை நான் ஊகித்து அறிந்து கொண்டேன். ஆகையால் நானும் வருவேனென்று அவரிடம் பிடிவாதம் செய்யவில்லை.




அங்கே என்ன நடந்ததென்று எனக்கு விவரமாகத் தெரியாது. ஆனால் என் அன்னை திரும்பி வந்த பிறகு முன்னைவிடத் தைரியமாக இருப்பதாக எனக்குத் தோன்றியது.

அப்போது எனக்கு வழக்கு விவரங்களைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு அறிவு ஏற்பட்டிருக்கவில்லை. வாத்தியார் ஐயா தர்மலிங்கத்துடன் என் அன்னை மணிக் கணக்காகக் கவலையுடன் பேசுவதையும், கண்ணீர் வடிப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். என் அன்னை இருக்கும்போது நான் இதைப் பற்றியே பேச மாட்டேன். அவர் மனம் புண்ணாகி விடும் என்று எனக்கு ரொம்ப பயம்.

வாத்தியார் ஐயா வீட்டுக்குச் சென்ற போதும் பேச முடியாது. அவர்கள் வீட்டு மனிதர்கள் எதிரில் என் தந்தையைப் பற்றிப் பேச எனக்குக் கூச்சமாக இருக்கும். ஆகவே வாத்தியார் ஐயா தனியாக இருக்கும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தேன். ஒரு நாள் அப்படிச் சந்தர்ப்பம் நேரிட்டபோது, "ஸார்! நான் ஒன்று கேட்கிறேன். சொல்வீர்களா?" என்று கேட்டேன்.

"என்ன வேண்டுமோ கேளேன். இதற்குப் பீடிகை போடுவானேன்?" என்றார் தர்மலிங்கம் அவர்கள்.

"என் தந்தையை ஏன் சிறையில் போட்டிருக்கிறார்கள் என்ற காரணத்தை நிஜமாகச் சொல்ல வேண்டும். அப்பா தவறு செய்து சிறைக்குப் போயிருந்தாலும் அதைக் கண்டிப்பாகச் சொல்லத்தான் வேண்டும். என்னிடமிருந்து மறைக்கக் கூடாது. அதைப் பற்றி நீங்களும் அம்மாவும் மறைப்பதுதான் எனக்கு ரொம்ப வேதனையாக இருக்கிறது" என்று கூறி நிறுத்தினேன். எனக்கு, உணர்ச்சியோடு பேசியதால் மூச்சு வாங்கியது. மரியாதைக்குரிய வாத்தியார் ஐயாவிடம் அப்பொழுது பேசுகிறோம் என்பதைக்கூட மறந்து அவ்வாறு பேசி விட்டேன்.

அவர் என்னை அனுதாபத்தோடு பார்த்தார். பின்னர் என் முதுகில் தட்டிக் கொடுத்து, "ரங்கதுரை! நீ குழந்தை. உனக்கு எதற்காக இந்த விவரமெல்லாம் தெரிய வேண்டும்? உன் மனம் குழம்புமே தவிர அதனால் உனக்கு ஒன்றும் பயன் இல்லையே. ஆகவேதான் நானும் அம்மாவும் உன்னிடம் இதைப் பற்றிப் பேச வேண்டாமென்று தீர்மானித்தோம்" என்று கூறினார்.

"இப்படி நீங்கள் மறைப்பதால் என் தந்தை ஏதோ பெரிய குற்றம் செய்து விட்டதாகத் தோன்றி என்னை வதைக்கிறது. இதே ஞாபகத்தில் வேறு ஒன்றுமே என்னால் செய்ய முடியவில்லை. தயவு செய்து..."

"ரங்கா! உன் தந்தையின் மீது ஒரு தவறும் இல்லை. அவர் நிரபராதி. வேறு ஒருவனுடைய வஞ்சனையால்தான் உன் தந்தை சிறை சென்றிருக்கிறார். உன் அப்பா தவறே செய்ய வில்லை என்று நான் சொல்லவில்லை. முன்பு இப்படி ஏற்பட்டிருந்தால்கூட எனக்கு இவ்வளவு அனுதாபம் உண்டாகி இருக்காது. வெண்ணெய் திரண்டு வருகிற சமயத்தில் தாழி உடைந்த மாதிரி, அவன் மனம் திருந்திய சமயத்தில் இப்படி நேர்ந்து விட்டதே என்று தான் ரொம்ப வருத்தமாக இருக்கிறது. ரங்கா! இதற்கு மேல் நீ என்னை இப்போது ஒன்றும் கேட்காதே. சமயம் வரும்போது நானே சொல்கிறேன். இதை அடியோடு மறந்துவிட்டுப் படிப்பில் கவனத்தை நன்றாகச் செலுத்து. உன் அம்மாவுக்கு ஆதரவாக நீதான் இருக்கிறாய் என்பதை ஒருபோதும் மறந்து விடாதே. உன் தந்தைக்குப் பத்து வருஷம் தண்டனை கொடுத்திருக்கிறார்கள். அவர் வரும்வரையில் உன் அன்னைக்கு நீ ஒருவன்தான். அப்பா வரும்போது என்ன நிலையில் வருவாரோ? இறைவனுக்குத்தான் வெளிச்சம். நீ இப்போது படிப்பில் இன்னும் கண்ணும் கருத்துமாக மனத்தைச் செலுத்த வேண்டும்."

"நீங்கள் சொன்னதை எப்போதும் நினைவு வைத்துக் கொள்வேன் ஸார். என் மனம் இப்போது தான் ஓரளவு சாந்தி அடைந் திருக்கிறது. முழுதும் சமாதானமாகவில்லை. இருந்தாலும் பெரிய பாரம் குறைந்த மாதிரி இருக்



கிறது. இனிமேல் நான் இதைப் பற்றி உங்களை வற்புறுத்த வில்லை. நீங்களே எப்போது எல்லா விவரங்களையும் சொல்லலாமோ அப்போது சொல்லுங்கள்" என்று கூறி விட்டு உடனே படுக்கப் போய் விட்டேன்.

* * *

அப்போது நடந்ததை யெல்லாம் நினைத்தால் இப்போது கூட மிகவும் வியப்பாக இருக்கிறது. எவ்வளவு சோதனைகள்? எத்தனை மனத் துயரம்? என்ன வறுமை? இவைகளை யெல்லாம் சகித்துக் கொண்டு எப்படியோ நானும் அம்மாவும் உயிர் வாழத்தானே செய்தோம்? பொறுக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும் போது கடவுள் அதைத் தாங்குவதற்கு அபரிமிதமான சக்தியையும் கொடுக்கிறாரே! இந்த தத்துவம் இலகுவாக விளங்கக் கூடியதா?

அன்றும் சரி. இன்றும் சரி. அந்த மனோதிடம் எங்கே யிருந்து எனக்கு வருகிறது என்பதை என்னால் தெரிந்து கொள்ளவே முடியவில்லை. என் இதயமென்னும் விளக்கின் சுடரொளியாகத் திகழும் இந்துமதி சிறைப்பட்ட செய்தியைக் கேட்டுத் தாங்கிக் கொண்டேனே. அப்போது தந்தை சிறைப் பட்டதைத் தாங்கியதில் என்ன வியப்பு?

* * *

வரவர எங்கள் பொருளாதார நிலை சீர்குலைந்து கொண்டே வந்தது. சீர்குலையாமல் எப்படி இருக்கும்? நல்ல வேளையாக எனக்காவது உபகார சம்பளம் கிடைத்திருந்தது. இல்லா விட்டால் என் அன்னையின் மனம் உடைந்தே போயிருக்கும். பாவம்! அவர் விரிந்து போன பானையைப் புளி வைத்து அடைப்பது போல, அவருடைய விரிந்த உள்ளத்தை என் மீது உள்ள அன்பு என்னும் வன்துவால் விண்டு போகாமல் ஒட்ட வைத்திருந்தார்.

எத்தனை நாட்களுக்கு வருமானம் இல்லாமல் காலந்தள்ள முடியும்? மேலும் என் அன்னை வீட்டிலிருந்த சாமான்களை விற்று, அந்த ஊரில் கைமாற்றுப் பணம் கொடுத்திருந்தவர்களுக்கெல்லாம் கொடுத்து விட்டார். ஆகவே அடியோடு ஒன்றுமில்லாமல் போய் விட்டது.

இந்தப் பொருளாதார நிலையைச் சீர்ப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதற்காக என் அருமை அன்னை தின்பண்டங்கள் செய்து அந்த ஊரில் உள்ள பணக்காரர்களின் வீடுகளுக்குக் கொடுக்க ஆரம்பித்தார். அவருடைய முகராசியோ என்னமோ எல்லோருக்கும் அவை ரொம்பப் பிடித்தன. அவ்வப்போது நடக்கும் விருந்துகள், கல்யாணங்கள் முதலியவற்றுக்கு என் அன்னையை உதவிக்கு





சென்னை, அயன்புரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ காசி விசுவநாதர் சன்னிதியில் செப்டம்பர் 16-ல் நவராத்திரி விழா ஆரம்பமாயிற்று. தேவி விசாலாக்ஷிக்குத் தினந்தோறும் லட்சார்ச்சனை விமரிசையாக நடந்தது. உயர் நீதிமன்றத்து நீதிபதி ஸ்ரீ ஏ. எஸ். பி. ஐயர் அவர்கள் மேற்படி விழாவைத் துவக்கி வைத்தார். தேவியின் தூப, தீப, அலங்கார பூஜைகளுடன் பிரபல சங்கீத வித்வான்கள் தினந்தோறும் இன்னிசை விருந்தளித்தனர். முதல் நாள் திருப்புகழ் மணி பஜனை நிகழ்த்தினார். பிறகு, கடைசி தினத்தில் செப்டம்பர் 25-ந் தேதி சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் விஜயம் செய்து சிறப்பித்தார். விழாவில் பங்கெடுத்துக் கொண்டு நடத்தி வைத்த பக்தர்களையும் கவர்னரையும் படத்தில் காணலாம்.

அழைத்துக் கொள்வார்கள். அந்தச் சமயங்களில் ரொம்பக் கவலை இல்லாமலிருந்தது. அம்மா செய்து கொடுக்கும் தின் பண்டங்களை நான் சில சமயம் எடுத்துக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வருவதுண்டு.

சில வீடுகளுக்குத் தினமும் இடியாப்பமோ அல்லது இட்டிலியோ செய்து கொடுக்கும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். என் அன்னை செய்யும் பணியாரங்கள், பலகாரங்கள் எல்லாம் அல்லிக் குளத்துப் பெரிய மனிதர்கள் வீட்டுத் தவிசுப்பிள்ளைகள் செய்வதைவிட நன்றாயிருந்தன. ஆகவே அம்மாவின் பலகாரங்கள் செலவழியாமல் இருந்ததே இல்லை. நான் அவைகளை ஒரு கூடையில் எடுத்துக் கொண்டு வீடு வீடாகப் போய்க் கொடுத்து விட்டு வருவேன். எனக்கு என் தாயின் கஷ்டம் கண்களை உறுத்தினாலும், நான் நன்றாகப் படிக்க வேண்டுமென்றுதானே இவ்வளவு பாடுபடுகிறார் என்று தோன்றிய உடனே மனம் குழைந்து போய் விடும். எப்படியாவது பெரிய உத்தியோகத்தில் அமர்ந்து அவரைத் திருப்தி செய்ய வேண்டும் என்று மனத்துக்குள் உறுதிப் படுத்திக் கொள்வேன்.

ஒரு கையில் புத்தகமும், இன்னொரு கையில் கூடையுமாக நான் அல்லிக் குளத்தில் ஆறுக்கும் தெருக்குமாக நடக்க ஆரம்பித்துப் பல தினங்கள் ஆகியிருந்தன.

என் அன்னை முன்போல் இல்லாமல் இப்போது என்னிடமும் போகவதை மிகவும் குறைத்துக் கொண்டு விட்டார். வேலை! வேலை! வேலை! வேலை செய்வதுதான் அவருக்குத் தெரிந்தது. பாவம், எனக்காக அவர் என்ன பாடு பட்டிருக்கிறார்?

"தன்னரோடு வைத்து எண்ணக்
கடவுளும் இல்"

என்று நான்மணிக் கடிகை ஆசிரியர் கூறியிருப்பது மற்றவர்களுக்குப் பொருந்துமோ இல்லையோ, என்னுடைய அன்னைக்கு முற்றிலும் பொருந்தும்.

என்னைப் பொறுத்த வரையில் அவர் தெய்வத்திற்கும் மேலாகத் திகழ்ந்தார். அளவு கடந்த துயரம் அவரைத் தாக்கிய போதிலும், அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில், ஒரு ஆர்ப்பாட்டமும் செய்யாமல் தன் துயரத்தை யெல்லாம் மறந்து விட்டு எனக்காகவே அவர் வாழ்ந்தார்.

* * *

**ப**ண்ணையார் வேதாசலத்தின் வீட்டில் ஏதேனும் ஒரு விசேஷம் நடந்து கொண்டே இருக்கும். அவருக்கு நிறையப் பெண்கள். யாருக்காவது குழந்தை பிறந்து கொண்டே இருக்கும். என் அன்னை அப்போது உதவி செய்யச் சென்று வருவார். ஏதேனும் பணம் கொடுப்பார்கள். இப்படி எங்கள் ஜீவனம் நடந்து வந்தது. நானோ படிப்பு! படிப்பு!! படிப்பு!!! என்று அதில் மூழ்கியே விட்டேன். என் தந்தையை நான் மறந்தே போய் விட்டேன். ஏன், என்னையேகூட மறந்து விட்டேன்!

அது வரை எப்படியும் எழுபத்தைந்து மார்க் வந்து விடுமென்று தைரியமாக இருப்பேன். இப்போது எல்லாவற்றிலும் தொண்ணூறு மார்க்காவது வாங்கி விட வேண்டுமென்று புஸ்தகக் கடலில் அமிழ்ந்து விட்டேன். என் அன்னை இவ்வளவு கஷ்டப்படுவதற்கு நான் இதுகூடச் செய்ய வேண்டாமா என்று நான் தோன்றிக் கொண்டே இருந்தது.

நான் பணியாரக் கூடையை எடுத்துக் கொண்டு போகும்போது எனக்கும் சிலர் வேலை வைப்பார்கள். அதைச் செய்து

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்னானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேகமுழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.




## மைசூர் சந்தன சோப்

**கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்**

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

---

# அந்த இருமலை நிறுத்துக-

தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக. மார்பு மற்றும் சுவாசப்பை அடைப்பை நீக்குக. எல்லாம் க்ஷணத்தில் முடிக்க.




# PEPS

பெப்ஸ் சாப்பிடுங்கள்.




உலக பிரசித்தி பெற்ற
தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

பெப்ஸ் தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி, குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போது இந்த ரசங்கள் ஆவியாக மாறி ஸ்வாசத்துடன் தொண்டை, சுவாசக்குழாய் மூலமாக சுவாசப் பைக்குச் செல்லும் நோயின் ஆரம்ப ஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. இதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும் உலக பிரசித்தி பெற்றும் விளங்குகின்றது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளுயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

மதராஸுக்கு ஸோல் ஏஜண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் செல்யூலோஸ் பிலிம்

# விற்பனையை துரிதமாக்கும்!



துணிமணிகள், மிட்டாய்கள், பொம்மைகள் மற்றும் எந்த இதர பொருள்களையும் சீக்கிரத்தில் விற்பனைசெய்ய ட்ரான்ஸ்பெரன்ட் செல்லூலோஸ் பிலிம் உபயோகியுங்கள். அது கண்ணைக் கவருகிறது...பார்த்தவுடன சரக்குகளின் தரத்தை மேன்மைப் படுத்துகிறது ... விற்பனையை எளிதாக்கி விடுகிறது!

மேலும் அது சரக்குகளுக்குப் பாதுகாப்பளிக்கிறது! ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் செல்லூலோஸ் பிலிம் தூசிதுப்பும் படியாமல் காப்பாற்றுகிறது. சாமான் வாங்குபவர்கள் தொட்டாலும் சிறிதும் பாழடைவதில்லை. உலர்ந்த பழவகைகள் கடைசிவரை புத்தம்புதியதாக இருக்கின்றன.

இலவச சாம்பிள்களுக்கு இன்றே எழுதுங்கள்.



TRAYONS

**ட்ரான்ஸ்பெரன்ட்**
**செல்யூலோஸ்**
**பிலிம்**

கண்ணைக் கவருகிறது—
விற்பனையை துரிதமாக்கிறது!

## தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்

பாக்டரி: ரேயான்புரம், திருவாங்கூர்-கொச்சின்.
ஸேல்ஸ் ஆபீஸ்: யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்ஸ், மதராஸ்-1.
மானேஜிங் ஏஜெண்ட்கள்: எம்சீடி & ஸன்ஸ் (திருவாங்கூர்) லிட்.

மதராஸ் ஸ்டாக்கிஸ்டுகள்:
ரேயான் டிரேடெர்ஸ் லிமிடெட், 27. பவழக்காரத் தெரு, சென்னை -1
(கிளை ஆபீஸ்கள்: மதுரை, சேலம், கோயமுத்தூர்)

பெங்களூர் ஸ்டாக்கிஸ்டுகள்:
மெஸர்ஸ் எச். சுப்பண்ணா & சன்ஸ், டாட்பெட், பெங்களூர்

விட்டு அவர்கள் ஏதாவது கொடுத்தால் வாங்கிக் கொண்டு வந்து என் தாயாரிடம் கொடுப்பேன்.

இப்படி ஒரு நாள் நான் பண்ணையார் வேதாசலம் வீட்டுக்கு, அம்மா செய்திருந்த முறுக்குகளை எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்த போதுதான் அந்தச் சம்பவம் நடந்தது. அதே சம்பவந்தான் தமிழ் வாத்தியாரின் வாயைத் திறந்தது. அதன் பிறகுதான் என் தந்தையைப் பற்றிய முழு விவரங்களையும் அவர் எனக்குச் சொன்னார். அந்தச் சந்தர்ப்பத்தையும், அதன் மூலம் ஏற்பட்ட விளைவுகளையும் இப்போது நினைத்தால்கூட உடல் சிலிர்க்கிறது. எதிர்பாராத விஷயங்கள், சிறிய சம்பவங்கள் எவ்வளவு தூரம் நம் வாழ்க்கையைப் பாதித்து விடுகின்றன?

அத்தியாயம் 9

## மிராசுதார் தரிசனம்!

எனக்கு அரை வருஷப் பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது ஒருநாள் என் அருமை அன்னை என்னைக் கூப்பிட்டார். நான் புஸ்தகத்தை எடுத்து வைத்து விட்டு எழுந்து சென்றேன்.

"துரை! உன் படிப்பைக் கெடுத்து விட்டேனா? பாவம்! உன்னைப் பரீட்சை சமயத்தில்கூடச் சேர்ந்தாற் போல் படிக்க விட முடியவில்லை" என்றார்.

"இல்லை அம்மா! படித்து விட்டேன். சும்மா படித்தாலும்தான் கஷ்டமாக இருக்கிறது. நடுவில் கொஞ்சம் வேறு ஏதாவது வேலை செய்தால்தான் மறுபடியும் படிக்கும் போது மனத்தில் நன்றாகப் பதிகிறது."

"அப்படியானால் சரி! பண்ணையார் வேதாசலம் வீட்டில் முறுக்கு செய்து தரச் சொல்லியிருந்தார்கள். இதோ இந்தக் கூடையில் வைத்திருக்கிறேன். நீ சாப்பிட்டு விட்டு, அவர்கள் வீட்டில் இதைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டுப் பள்ளிக்கூடம் போகிறாயா?"

"ஓ! கொடுத்து விடுகிறேனே" என்று கூறிவிட்டுச் சீக்கிரமாகச் சாப்பிட்டேன். பிறகு ஒரு கையில் புஸ்தகப் பையுடனும் இன்னொரு கையில் கூடையுடனும் புறப்பட்டேன்.

தெருவில் நடக்கும் போதே என் மனத்தில் மனப்பாடம் செய்யவேண்டிய சில பகுதிகளை நினைவு படுத்திக் கொண்டே போனேன். தமிழ் இலக்கணப் பாடம் எப்போதுமே எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கும். தமிழ் வாத்தியாரிடமிருந்த பக்தியினால் அந்தக் கஷ்டத்தை நான் வெளியே சொல்லிக் கொண்டதே இல்லை. இலக்கணத்தில் நிறைய மார்க்கு வாங்கினால்தான் அவருக்குப் பிடிக்கும். ஆகவே மண்டையை உடைத்துக் கொண்டு நன்றாகச் சூத்திரங்களை உருப் போடுவேன். இப்போதும் ஒரு நன்னூல் சூத்திரத்தை மனதில் சொல்லிக் கொண்டே போனேன். முழுதும் சரியாக ஞாபகம் இல்லை.

"......உறழும் என்மரும் உளரே"

என்று மனத்தில் சொல்லிக் கொண்டது தான் நினைவிருக்கிறது. ஏதோ தவறு இருப்பதாகத் தோன்றியது. 'உறழும்' என்பது 'உளறும்' என்றே வாயில் வந்தது. மனத்தில் எழுந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, முறுக்குக் கூடையைக் கீழே வைத்து விட்டுப் பையிலிருந்த இலக்கணப் புத்தகத்தை எடுத்துக் கொண்டேன். அதைப் பிரித்து ஒரு கையில் வைத்துக் கொண்டு, கூடையைக் கையில் எடுத்துக் கொண்டு படித்துக் கொண்டே சென்றேன்.

எவ்வளவுதூரம் இப்படித் தமிழ் இலக்கணத்தில் முட்டிக் கொண்டே முன்னேறினேனோ தெரியாது. பின்னால் வண்டி வருவது போல் சத்தம் கேட்டது. ஒதுங்க வேண்டும் என்று நான் நினைப்பதற்குள், "ஏய்! ஏய்! ஓரம்! ஓரம்!" என்று ஒரு குரல் கர்ண கடூரமாக ஒலித்தது. அதைக் கேட்டுத் திடுக்கிட்டதில் அத்தனை நேரம் நான் பாடம் பண்ணியதெல்லாம் கூட மறந்து விட்டது.

நான் ஒரு அடி எடுத்து வைப்பதற்குள் சுரீல் என்று பலமாக என் முதுகில் ஏதோ பட்டது. வலி பொறுக்க முடியாமல், "ஐயோ!" என்றேன். மறுபடியும் சுரீல் என்று இன்னொரு அடி விழுந்தது. என் கையிலிருந்த கூடை ஒரு மூலையில் விழுந்து முறுக்குகளெல்லாம் சிதறி மண்ணில் விழுந்தன. என் புத்தகமும் எங்கோ போய் விழுந்தது. நான் வலி தாங்காமல் கீழே விழுந்து விட்டேன். என்னைத் தாண்டி ஒரு மாட்டு வண்டி சென்றது. அதில் ஒரு மனிதர் உட்கார்ந்து கொண்டிருந்தார். இந்த வண்டிக்காரன்தான் என்னைச் சாட்டையால் அடித்திருக்கிறான் என்று அப்போதுதான் எனக்குத் தெரிந்தது.

அந்தப் பாதகனை மனமாரத் திட்டினேன். சிறிது நேரங்கழித்துக் கலங்கிய உள்ளத்துடன் கூடையையும் புத்தகங்களையும் எடுத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிச் சென்றேன்.

அம்மா என்னைப் பார்த்ததும் பதறிப் போய் விட்டார்.

"என்ன ஆயிற்று ரங்கா? ஏன் திரும்பி வந்து விட்டாய்? மேலே எல்லாம் மண்ணாக இருக்கிறதே? விழுந்து விட்டாயா அப்பா?" என்று கேட்டார்.

"விழவில்லை, அம்மா! நான் படித்துக் கொண்டே போனேன். பின்னால் ஒரு வண்டி வந்தது. ரோடு நடுவிலே நடக்கிறேனே என்று வண்டிக்காரனுக்குக் கோபம் போலிருக்கிறது. வண்டிச் சாட்டையால் இரண்டு அடி அடித்து விட்டான். அப்போ கூடை விழுந்து விட்டது. முறுக்கெல்லாம் மண்ணாகி விட்டது அம்மா!" என்றேன். அதைச் சொல்லும்போது எனக்குத் தொண்டையை அடைத்தது. பாவம்! அவர் எவ்வளவு சிரமப்பட்டு முறுக்குகளைச் சுற்றினார்? பொருளும் நஷ்டம். அவர் பட்ட சிரமமும் வீண். ஆயினும் நான் ஆண் பிள்ளை அல்லவா? அதனால் அழுகையை அடக்கிக் கொண்டு ரொம்பக் கவலைப் படாதவன் மாதிரி என் தாயாரிடம் காட்டிக் கொண்டேன்.

என் அன்னைக்கு அந்த வண்டிக்காரன் மீது ஒரே கோபம்.

"முறுக்குப்போனால் போகிறது ரங்கா. ஆனால் அந்தப் படுபாவிக்குத் தெருவோடு போகும் குழந்தையை அடிக்க எப்படி மனம் வந்தது? பாதகன். அவன் நன்றாக இருப்பானா? என் நெஞ்சு எரிகிற மாதிரி அவனுக்கும் எரியாதா?" என்று கூறிவிட்டு என் சட்டையைக் கழட்டச் சொன்னார். முதுகிலும், தோளிலும் சிவப்பாக இரண்டு கோடுகள் தெரியவே துடித்துப் போய் விட்டார்.

கண்களில் நீர் ததும்ப அதற்குத் தேங்காய் எண்ணெய் தடவிக்கொண்டே "ரங்கா! அது யார் வீட்டு வண்டி சொல்லு. நான் போய்க் கேட்கிறேன். நியாயம், தர்மம் ஒன்றுமே கிடையாதா? ஒரு தவறும் பண்ணாத குழந்தையை



இப்படி எதற்காக அடிக்க வேண்டும்?'' என்று புலம்பினார்.

"அம்மா! நீ வருத்தப்படாதே. இது ஒன்றும் வலிக்கவே இல்லை. மேலும் அந்த வண்டி நம்ம ஊருக்குப் புதிது. வந்தவரும் புதிய மனிதர்!'' என்று கூறிச் சமாதானப் படுத்தினேன்.

அன்று நான் பள்ளிக்குச் செல்லும் போது நேரமாகி விட்டது. தமிழ் வாத்தியார்தான் என் வகுப்பை நடத்திக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும் "ஏன் இத்தனை நேரம்?'' என்று கேட்டார். நான் விவரங்களைச் சொன்னவுடன் ரொம்ப வருத்தப்பட்டார். அந்தப் புதிய மனிதர் யாரென்று கண்டு பிடிக்கப் போவதாகவும் கூறினார்.

மறு நாள் காலை நான் அவர் வீட்டுக்குச் சென்ற போது என்னிடம் சில முக்கியமான விவரங்களைக் கூறினார்.

"ரங்கா! நேற்று இந்த ஊருக்கு வந்திருக்கும் புதிய மனிதர் யாரென்று தெரியுமா?'' என்று கேட்டார்.

"தெரியாதே, ஸார்!''

"அந்தப் பாவிதான் சகவரமூர்த்தி.''

"எங்கள் குத்தகை நிலத்துக்குச் சொந்தக்காரர், மிராசுதார் சகவர மூர்த்திதானே? இனி மேல் அவரைப் பற்றி எனக்குத் தெரிந்து என்ன ஆகப் போகிறது ஸார்? நிலம் தான் இனி எங்களுக்குக் கிடையாதே!''

"அதோடு விட்டு விட்டாயே, துரை. இந்தப் படுபாதகனுடைய சூழ்ச்சியால் தான் உன் தந்தை சிறைக்குப் போயிருக்கிறார்.''

"என்ன! நிஜமாகவா?''

"ஆமாம், ரங்கா! இவன் செய்த சட்ட விரோதமான செயலுக்கு உன் தந்தையை உடந்தையாக இருக்கச் சொல்லி நிர்ப்பந்தப் படுத்தினான். அவரும் வேறு வழியில்லாமல் அதில் அகப்பட்டுக் கொண்டார். கடைசியில் அவரைக் காட்டிக் கொடுத்து விட்டு இவன் தப்பித்துக் கொண்டு விட்டான். நியாயமாக உன் தந்தை இருக்கும் இடத்தில் இவன் இருக்க வேண்டும்'' என்று கூறினார்.

"இவ்வளவு சொன்ன பிறகு விவரங்கள் முழுவதையும்தான் சொல்லி விடுங்களேன்'' என்றேன்.









அவர் ஒரு கணம் கண்களை மூடிக் கொண்டு பேசாமல் இருந்தார். பிறகு என் தந்தை சிறைப்பட்ட விவரங்களை,- அதாவது என் தந்தை அவரிடம் கூறியதைச் சொன்னார்.

ஈசுவரமூர்த்தியை என் தந்தை பார்க்கச் சென்ற போது அவர் மிகவும் கடுமையாக இருந்தார். பணம் முழுவதையும் கொடுத்தால்தான் மறு வருஷம் நிலத்தைக் குத்தகைக்கு விட முடியும் என்றார். என் தந்தை கெஞ்சிப் பார்த்தார். அவர் மசியவில்லை. ஆகவே மறுநாள் பார்த்துக்கொள்ளலாம் என்று தாம் தங்கியிருந்த இடத்துக்குப் போய் விட்டார். மறு நாளும் அவர் பிடி கொடுத்துப் பேச வில்லை.

அதற்கு அடுத்த நாள் என் தந்தை அவரைப் பார்க்கப் போன சமயத்தில் ஈசுவரமூர்த்தி சற்றுத் தணிந்து பேசி



னார். கொஞ்சம் வியப்புடனேயே என் தந்தை தன் விஷயத்தை அவரிடம் மறுபடியும் கூறினார்.

ஈசுவர மூர்த்தி அதன் பிறகு, "கந்தசாமி! போனால் போகிறது என்று இந்தத் தடவை நீ கொடுப்பதை வாங்கிக் கொள்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. நீ இப்போது ஒரு காரியம் செய்வதாக ஒப்புக் கொள்ள வேண்டும்" என்று கூறினார்.

"கட்டாயம் செய்கிறேன். எது வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்" என்றார் கந்தசாமி.

"இதை யாருக்கும் சொல்வதில்லை என்று உங்கள் பிள்ளை மீது ஆணையாகச் சத்தியம் செய்ய வேண்டும்."

இதைக் கேட்டதும் கந்தசாமிக்குக் கொஞ்சம் தயக்கம் ஏற்பட்டது. 'சத்தியம் செய்ய வேண்டுமென்றால் ஏதோ தவறான காரியமாக இருக்கும். இப்போது நான் திருந்தி மனிதனாகி இருக்கிறோம். மறுபடியும் ஏதாவது சிக்கிக் கொள்ளக் கூடாது' என்று நினைத்துக் கொண்டு, "சத்தியம் எதற்கு? நான் யாரிடமும் சொல்லவில்லை" என்றார்.

இதைக் கேட்டதும் ஈசுவரமூர்த்திக்குக் கோபம் வந்து விட்டது. "என்ன ஐயா? விளையாடுகிறீரா? பணத்தைக் கீழே வைத்து விட்டு மறு காரியம் பாரும்" என்று உறுமினார்.

கந்தசாமியின் மனம் தளர்ந்தது. வீட்டின் நிலை என்ன ஆகும் என்ற எண்ணத்தினால் அவர் ஈசுவரமூர்த்தியின் நிபந்தனையை ஒப்புக் கொண்டார்.

"என் ஒரே மகன் மீது ஆணையாக நீங்கள் சொல்வதை யாரிடமும் சொல்லவில்லையென்று சத்தியம் செய்கிறேன்" என்று கூறினார்.

அதன் பிறகு ஈசுவரமூர்த்தி விஷயத்தைக் கூறினார். புதுச்சேரியிலிருந்து அவர் பலவிதமான சரக்குகளைத் தருவித்துக் கொண்டிருந்தார். உயர்ந்த ரக மது வகைகள், பட்டுத் துணிகள், சீட்டுக் கட்டுகள், வாசனைத் திரவியங்கள் முதலிய சகலவித பொருள்களும் அதில் அடங்கியிருந்தன. இப்போது ஒரு இக்கட்டான நிலை ஏற்பட்டிருந்தது. சுமார் ஐயாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களை அவர் வரவழைப்பதற்கு ஏற்பாடு செய்து விட்டார். பாதிப் பணம் கொடுத்தாகி விட்டது. இப்போது அதை வழக்கமாகச் சுங்க அதிகாரிகளின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டுக் கடத்திக் கொண்டு வரும் ஆளின் மீது போலீஸாருக்குச் சந்தேகம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்தது. ஆகவே அவன் எடுத்துக் கொண்டு வந்து மாட்டிக் கொண்டால் இவர் பாடும் திண்டாட்டம். கந்தசாமி போய்ச் சரக்குகளை எப்படியாவது எடுத்துக் கொண்டு வந்து விட்டால், அவருக்கு வேண்டிய சௌகரியங்களை யெல்லாம் ஈசுவரமூர்த்தி எப்போதும் செய்து கொடுப்பார். என்னென்ன விதமாகச் செய்ய வேண்டுமென்பதை ஈசுவரமூர்த்தி இதற்குக் கந்தசாமி உடன்பட்ட பிறகு கூறுவார். இதுதான் விஷயம்.

இதைக் கேட்டதும் கந்தசாமியின் நெஞ்சம் பரிதவித்தது. உரலுக்குள் தலையை இட்டுக் கொண்டு விட்டோமே என்று தவித்துப் போனார். ஆனால் வறுமை அவரை விரட்டியது. ஈசுவரமூர்த்தி இதைச் செய்யாவிட்டால் பாக்கிப் பணத்துக்காக வழக்குப் போடுவேன் என்று வேறு பயமுறுத்தினார். ஆதலால் கந்தசாமிக்குச் சிறிதும் இஷ்டமில்லாமலிருந்தும் இந்தக் காரியத்துக்கு மனச்சாட்சிக்கு விரோதமாக அவர் ஒப்புக் கொள்ள நேர்ந்தது. (தொடரும்)

# குழந்தைகளின் வளர்ச்சியில் டுமெக்ஸ் பால் உணவு எப்படி உதவுகிறது?

சமீபத்தில் குழந்தைகளுக்கேற்ற பால் உணவு கண்டு பிடிக்க அநேக ஆராய்ச்சிகள் செய்யப்பட்டன. இத்தகைய ஆராய்ச்சியின் முடிவுதான் டுமெக்ஸ். இந்திய சீதோஷ்ண நிலைக்கேற்க தயாரிக்கப்பட்ட உன்னதமான பால் உணவு இதுவே. உதாரணமாக குளிர் நிறைந்த மேல் நாட்டுக் குழந்தைகள் கொழுப்புச் சத்துகளை விரும்புவது போல் நம் நாட்டு குழந்தைகள் விரும்புவதில்லை. ஆகையால்தான் டுமெக்ஸ் பால் உணவில் கொழுப்புச்சத்து மற்ற பால் உணவுகளைவிட மிகக்குறைவாகவே சேர்க்கப்பட்டிருக்கிறது. எனவே இது எளிதில் ஜீரணிக்கக்கூடியது. ஆரோக்ய வளர்ச்சிக்கான டுமெக்ஸ் பால் உணவில் விடமின் B 6 அதிகமாக சேர்க்கப்பட்டிருக்கிறது. மற்றும் பாலின் இயற்கைச்சர்க்கரை, விடமின் D, இரும்புச்சத்து இவைகளும் நிறைந்திருக்கின்றன. ஆகையால்தான் குழந்தைகள் டுமெக்ஸ் பால் உணவை மிகவும் விரும்புகிறார்கள். அதை அருந்தி நன்கு வளர்கிறார்கள்.

# டுமெக்ஸ் பால் உணவு

**உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களது வளர்ச்சியைக் கவனியுங்கள்**

# தலை தீபாவளி

"ஸார்! இன்றைக்கு நான் ஊருக்குப் புறப்பட வேண்டிய நாள்."

"நான் என்னப்பா செய்வது? இடர் என்று வேலை வந்தால் அதை முடிக்கத் தானே வேண்டும்!"

"வேறு யாரையாவது நீங்கள்......"

"யாரை அனுப்புவது? ஏழு நாள் முன்னாலே வந்த சிவதாணை அனுப்பச் சொல்லுகிறாயோ? ஒரு லட்ச ரூபாய்ச் சரக்கு தெரியுமோ, இல்லியோ? பொறுப்பு வாய்ந்தவனைத்தானே அனுப்பணும்?"— மானேஜர் விதானமாகக் கூறினார்.

கோகுலனுடைய இதயத்தில் நீர் சுரந்தது. அதன் எதிரொலியாக ஆத்திரம் கிளம்பியது.

"ஸார்! எனக்கு நாளை மறுநாள் தலை தீபாவளி!" என்று கூறியபோது அவன் குரலிலேயே என்றும் இராத புரட்சி தொனித்தது.

"எனக்குத் தெரியாதா?" என்று மானேஜர் சிரித்துக் கொண்டே கூறினார்.

"தெரிந்துமா இப்படிச் செய்கிறீர்கள்?..."

"வாழ்க்கையில் கடமை இருக்கிறது அல்லவா?...அதுதான் முதலில்...தீபாவளி வருஷா வருஷம் வருகிறது" என்று கூறி விட்டு அவர் சிரித்தார்.

கோகுலன் துடித்தான். மானேஜரின் மீது பாய்ந்து போராடி, ஆபீஸுக்கே தீ வைத்து விட்டு ஓடி விடலாமா என்று அவனுக்குத் தோன்றியது. மானேஜரின் உத்தரவை மீறினால் என்ன?...ஆனால் அடுத்த கணமே, தெருவில் வேலைக்கு அலையும் கோலம் கண்ணெதிரில் நின்றது. ராதையுடன் தலை தீபாவளியைக் கொண்டாடி விட்டு, அவன் வேலையற்றவனாக அவள் முகத்தில் எப்படி விழிப்பான்? உடனே மீறுவ வேண்டும் என்றிருந்த தனிக் குடித்தனத்தைத்தான் அவன் எப்படித் துவங்குவான்?

"வேறு வழியே இல்லையா, ஸார்?" என்று அவன் குரல் கெஞ்சியது.

"எனக்கு ஒன்றும் தோன்ற வில்லை. நாளைக்குச் சீக்கிரத்தில் வேலை முடிந்தால் போய் விடு." மானேஜரின் குரலில் ஈரம் இருப்பதாகப் பட்டது. ஆனால் முகத்தைக் கூர்ந்து பார்த்த போது அவனுக்கு மீண்டும் ஆத்திரம்தான். 'வஞ்சம் தீர்த்துக் கொள்கிறார்' என்று அவன் பொருமினான்.

* * *

திரும்புகையில் டிக்கட்டு வாங்கலாம் என்று வைத்திருந்த பணத்தை எடுத்தான். "உனக்கும் எனக்கும் தலைதீபாவளி கிடையாது, ராதை!" என்று அவன் வாய் அவனையுமறியாமல் முணுமுணுத்தது. பக்கத்திலே சென்ற ஓரிருவர் ஒரு விதமாகப் பார்த்துக் கொண்டே சென்றனர்.

பஸ்ஸிலே ஏற அவன் மனம் செல்ல வில்லை. காலின் சுதந்திரத்தில் அவன் நடந்தான். ராதைக்கு எவ்வளவு கடிதங்கள்



எழுதி விட்டான்? தலை தீபாவளி எவ்வளவு தூரத்துக்குக் கடிதங்களில் முத்திரை ஏறிச் சிரஞ்சீவித்துவம் பெற்று விட்டது? கடைசியில் தலையே வெடிப்பது போல் தலை தீபாவளி வெடித்து விட்டது.

'நம் வாழ்வில் தலை தீபாவளி ஒருநாள். அந்தத் தினத்திற்காக நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறேன்.' ராதை எழுதிய கடிதம் ஒன்றில் இருந்த வார்த்தைகள் மனத்தில் மோதின. அந்த மோதலில் அவன் தன்னையே வெறுத்துக் கொண்டான். ஏன் இந்தத் தடவை இந்தமாதிரியான தடங்கல் வரவேண்டும்? போன தடவை வந்திருக்கக் கூடாதா? ஓட்டலில் ஆறு மணிக்குத் தானே தீபாவளியே பிறக்கிறது? அடுத்த வருஷம் தடைப்பட்டாலும் கூடக் கவலையில்லை. அவன் வீட்டிலேயேதான் ராதை இருப்பாள்.

அறைக்குச் சென்றபோது ராதையின் கடிதம் கண்ணில் பட்டது. தீபாவளிக்கு முன்னால் கிடைக்கும் கடைசிக் கடிதம். அதைப் பிரித்துப் பார்க்கக் கூட அவனுக்குத் தோன்றவில்லை. என்ன எழுதி யிருக்கப் போகிறாள்? 'ரயிலில் ஜாக்கிரதையாக வாருங்கள். தலை தீபாவளியன்று அது, இது' இன்னும் என்ன வெல்லாமோ எழுதி யிருக்கப் போகிறாள். அதைப் படித்து அக்னியில் நெய் வார்க்க வேண்டாம்.

மேலே தெரிந்தது புடவைதான். ரோஜா நிறம் கண்ணைப் பறித்தது. 'ஊசிப் பச்சை'க் கரை மடிப்பிலிருந்து இலேசாகத் தெரிந்தது. புடவையில் அங்கங்கே சிதறிக் கிடந்த முல்லை மொட்டுகளைப் பார்த்த போது கோகுலனுக்கு வெறுப்புத் தாள வில்லை. புடவையையே கிழித்தெறியலாமா என்று கூடப் பொருமினான்.

"என்ன ஸார், காப்பி கொண்டு வரட்டுமா?" என்று கேட்டுக் கொண்டே சிப்பந்தி அவனருகில் வந்தான்.

"உம்" என்றான் அவன்.

காப்பியை அவன் கொண்டு வந்தபோது, "ஸார் எட்டேகால் மணிக்குத்தானே ரயில்! நாளைக்கு இந்த நேரத்திலே...ஆஹா? தலை தீபாவளின்னா......" என்று அவன் ஆரம்பித்தான்.

"போதுமடா...போ......தலை தீபாவளியாம்...ரொம்ப அனுபவித்து விட்டான்..."

காப்பி சாப்பிட்டவுடன் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தான். மானேஜர் கடுமையைப் பற்றிச் சொன்னதெல்லாம் அலை அலையாகத் திரும்பியது. பழி தீர்த்துக் கொள்ளச் சரியான சமயத்தை எதிர் பார்த்திருந்தார். அவருக்கு அது கிடைத்து விட்டது. சீ, மனிதனுக்கு மனிதன் மேல் பழி தீர்த்துக் கொள்ள என்ன ஆசை? அவனுடைய உணர்ச்சிகளின் ஆழத்தையும் மனத்தின் அபிலாஷைகளையும் அறிந்து அவர் இப்படிச் செய்தால், அவர் என்ன மனிதர்? அவருடைய பெண்ணுக்குத்தான் தலை தீபாவளியாக இருந்தால் இன்னும் இரண்டு நாட்கள் முன்னாலேயே 'லீவு' கொடுத்திருப்பாரே? — அதுவும் உள்ளூரிலேயே கொண்டாடுவதற்கு!

படித்தும் பதவி பெற்றும், கை நிறையப் பணம் கொழித்தும் என்ன பயன்? மற்றவருடைய மனத்திற்குச் சலுகை காட்டக் கூடத் தோன்றவில்லை. அவருடைய பெண்ணை மணம் செய்து கொள்ளவில்லை என்றால் வஞ்சம் தீர்த்துக் கொள்ளுவதா?

ஒரு வருஷத்துக்கு முன் நடந்ததெல்லாம் கனவு போலத் திரும்பின.

ஒரு நாள் மானேஜரே அவனைத் தேடிக் கொண்டு ஓட்டலுக்கு வந்து விட்டார். காரியாலயத்துக்கு அவன் வந்து ஒரு வருஷம் தான் அப்போது ஆகியிருந்தது.



மானேஜரைக் கண்டபோது மகிழ்ந்தாலும் 'ஏதாவது' நடக்கப் போகிறதோ என்ற திகிலும் பிறந்தது.

என்ன வெல்லாமோ அவனுடன் பேசி விட்டு, கடைசியில் தகப்பனாரின் விலாசத்தையும் பெற்றுக் கொண்டு போனார்.

நாலைந்து நாட்கள் சென்றன. ஆபீஸ் உதவி மானேஜர் அவனை அழைத்தார்.

"நானும் மானேஜரும் இப்பொழுது தான் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அவருக்கு உன்மேல் அபார பிரியம்...மதிப்பு...நம்பிக்கை..."

"அப்படியா....?"

"நீ முன்னுக்கு வருவாய் என்று அவர் தீர்மானமாகச் சொல்லுகிறார். அவர்கூட உன் வயதில் உன் மாதிரிதான் இருந்தாராம்......"

கோகுலன் இலேசாகச் சிரித்தான்.

"அவர் பெண்ணை நீ பார்த்திருக்கிறாயா?"

"ஊஹூம்... இல்லே..."

"நான் பார்த்திருக்கிறேன் 'இண்டர்' பாஸ் செய்திருக்கிறான். 'பிடில்' வாசிப்பான். இந்தக் காலத்துப் பெண் என்றால் அவனைத்தான் சொல்ல வேண்டும்."

"பணக்காரப் பெண்......"

"ஆமாம், உன் தகப்பனாருக்குக் கடிதம் எழுதி யிருந்தாராம்... ஜாதகமும் நேற்றுக் கிடைத்ததாம். ரொம்ப நன்றாகப்பொருந்துகிறது என்று சொன்னார்."

"அப்படியா? எனக்கு என் தகப்பனாரிடமிருந்து ஒரு தகவலும் இல்லையே?"

"வராமலிருக்கவா போகிறது?" என்று கேட்ட அவர், தாழ்ந்த குரலில், "அவருடைய பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளுவதில் அநேக அனுகூலங்கள் உண்டு. ஆனால் அவையெல்லாம் நான் சொல்லித்தான் உனக்குத் தெரிய வேண்டுமா!" என்று ஆசை காட்டினார்.

கோகுலன் ஆசனத்திற்கு வந்தபோது அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தகப்பனாரிடமிருந்து கடிதம் வரட்டும் என்று காத்திருந்தான்.

ஒரு வாரத்தில் தகப்பனாரே வந்து விட்டார். அவர் சொல்லை மீற முடியாமல் பெண் பார்க்கச் சென்றான். மானேஜருடைய காரே ஓட்டலுக்கு வந்தது.

பெண் 'இந்தக் காலத்துப்' பெண்ணாகவேதான் தோன்றினாள். அதிக ஓய்வின் பயனாக வளர்ந்த சதை. தகப்பனாரைப் போல் குள்ளம். அவளுடைய கைக் கடிகாரம் பிடில் தந்திகளில் உராயுமோ என்று அதைக் கழற்றி விட்டு, பந்துவராளியா, பூர்வி கல்யாணியா என்று புதிர் போட்டுப் 'பிடில்' வாசித்தாள்.

"ஊருக்குப் போய் எழுதுகிறேன். பிள்ளையிடம் கலந்து கொண்டு..." தகப்பனார் வழக்கமான உபாயத்தைக் கூறிவிட்டு எழுந்தார். கோகுலனுடைய உள்ளத்தில் எண்ணங்கள் சிதறின.

ஒரு வாரத்துக்குப் பிறகு மானேஜரிடம் அலுவலாகச் சென்றபோது, "கோகுலன், உன் தகப்பனாரிடமிருந்து எனக்குக் கடிதம் வந்து விட்டது!" என்றார். அதற்குமேல் அவர் ஒன்றும் சொல்லவில்லை. கண்களில் மட்டும் ஏமாற்றமும் அதன் விளைவான வெறுப்பும் பிரதிபலித்தன.

* * *

இப்போது சாய்வு நாற்காலியில் கோகுலன் துடித்தான். "மானேஜர் பழி வாங்கித் தன் ஏமாற்றத்தைத் தீர்த்துக் கொள்ளப் பார்க்கிறார்!" இந்த எண்ணம் தான் உதித்தது.

வராந்தாவுக்கு வந்தான். தெருவில் இப்போதே தீபாவளி பிறந்து விட்டது.

பட்டாசு வெடியின் திடீர் அலறலைக் கேட்டு அலறி நகர்ந்த பெரியவர்களும், பட்டாசுக் கடையையே பார்த்துப் பார்த்துப் பெருமூச் ஏங்கிய சில பையன்களும் துணிப் பொட்டணங்களைத் தூக்க முடியாமல் தூக்கிச் சென்றவர்களும் கோகுலனுடைய கண்களுக்குக் கனவுலக வாசிகளாகத் தோன்றினார்கள்.

கோகுலனுக்குத் தலையில் அடித்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது. வராந்தாவை விட்டு அறைக்குள் திரும்பினான்.

ராதையின் கடிதம்தான் தெரிந்தது.

"பார்த்தால்தான் என்ன?"

அடுத்த கணம் உறையை உடைத்தான். "நாளைக்குக் காலை ஏழு மணிக்குப் 'புது உலகம்' பிறக்கிறது. அதற்கு அடுத்த நாள் 'புது உலகத்தில்' புதுச் சூரியன் அதிகாலையில் நாலு மணிக்கே உதயமாகப் போகிறான். அப்போது இரண்டே இரண்டு பேர்தான் உலகத்திலேயே......"

மேலே அவனால் படிக்க முடியவில்லை.

"புது உலகத்தில் சூரியன் இருக்க மாட்டான், ராதா!" என்று அவன் இதயம் அலறியது.

இரவு எட்டேகால் சென்றது.

"ரயிலும் போய் விட்டது......இனிமேல் நாளைக்குத்தான் ரயில்......ரயில் போனால் ரயில்......தலை தீபாவளி போனால்?......"

* * *

பொழுது விடிந்தது.

கோகுலன் காரியாலயத்துக்குச் சென்ற போது யாரும் வந்திருக்கவில்லை.

ஒன்பதரை மணிக்கு 'பியூன்' மாணிக்கம் அவனைப் பார்த்ததும் திடுக்கிட்டான். "என்னாங்க இன்னிக்கு?"

"ஒன்றுமில்லையப்பா..."

சிவதாணுவும் 'டைபிஸ்ட்'டும் இன்னும் இரண்டு சிப்பந்திகளும்தான் ஆபீஸில். உதவி மானேஜர் ஊரிலேயே இல்லை. இருந்தவர் எல்லோரும் அனுதாபப்பட்டார்கள். ஆனால் மானேஜரைப் பற்றி அவதூறாக ஒருவரும் சொல்லவில்லையே என்ற ஆதங்கம் கோகுலனுக்கு.

* * *

துறைமுகத்திலிருந்து கோகுலன் கிடங்குக்கு வந்தபோது மணி பன்னிரண்டுக்கு மேலாகி விட்டது. இரண்டு வண்டிகளில் லட்சம் ரூபாய் சரக்குகள் இரண்டு தரம் வரவேண்டும். சாமான்களை ஏற்றிக் கொண்டு முதல் தடவையாக ஒன்றன் பின் ஒன்றாய் வந்தன. ஜாக்கிரதையாகக் கட்டுக்களை அவிழ்த்து இறக்கினார்கள்.

புத்தகத்தில் குறித்துக்கொண்டு வியர்வை சொட்டக் கோகுலன் நின்றான். இரண்டு வண்டிச் சரக்குகளையும் இறக்கி விட்டு மீண்டும் திரும்ப வண்டிகள் சென்றன.

# கால்கேட் குளோரோபில்*

## ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரிய குளோரோபில் இல்லை**

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை. மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள்கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்!**

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTPA/G/3


இரவில் என்னுடைய
கண்கள் கூர்மையான
பார்வையை உடை
யனவா யிருக்கின்றன.
ஏனெனில் எஸ்ட்ரேல்
லாவிலிருக்கும் ஒளிச்
சக்தி என்னிட
மிருக்கிறது.
எஸ்ட்ரேலா
பாட்டரீஸ்
ESTRELA
YOUR GUIDE IN DARKNESS
ESTRELA BATTERIES LTD BOMBAY
எஸ்ட்ரெல்லா பாட்டரீஸ் லிட்.,
பம்பாய் - டெல்லி - மதராஸ் - கான்பூர் - நாக்பூர் - கல்கத்தா.


SWASTIK
CASTOR
ஸ்வஸ்திக் மருந்தாக உதவும் காஸ்டர் ஆயில்
ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், லிமிடெட்

மணி மூன்று அடித்தது. மூன்றேகால் ஆயிற்று. மூன்றரையும் பிறந்து விட்டது. கோகுலன் பொறுமை யிழந்தான்.

நாலரை மணிக்கு மானேஜர் கிடங்குக்கு வந்தார். முகத்தில் சிரிப்பு. அவரைப் பார்க்கவே கோகுலன் வெறுத்தான். அவனையும் ராதையையும் வெவ்வேறு இடங்களில் பிரித்து வைத்துக் கட்டிப் போட்டவர் அல்லவா அவர்?

"இதுதானே கடைசி 'டிரிப்'?"

"ஆமாம், ஸார்!" அவன் குரலில்கூட என்றுமில்லாத வெறுப்பும் பொருமலும்.

"குறிப்புப் புஸ்தகத்தைக் காவல்காரனிடம் கொடுத்து விட்டுப் போ......"

"சரி சார்."

அவர் சென்றார்.

ஐந்து இருபதுக்குத் திடீரென்று அவர் மீண்டும் வந்தார்.

"கோகுலன், முடித்து விட்டாயா?"

"ஆகிவிட்டது......கிடங்கை இப்போது தான் பூட்டினேன்."

"'வெரி'குட்......காரில் ஏறு. டிரைவர், இதைக் காவல்காரனிடம் கொடுத்து விட்டு நான் சொன்னபடி செய்."

கோகுலனுக்கு ஒன்றும் புரியவில்லை. இன்னும் ஏதாவது வேலை கொடுக்கப் போகிறாரோ என்று அவன் உள்ளூற எரிந்தான்.

இதுவரையில் அவர் அவ்வளவு வேகமாகக் கார் ஓட்டி அவன் பார்த்ததில்லை. பத்து நிமிஷங்களில் ஜன மந்தையைத் தாண்டிக் கொண்டு கார் அவன் ஓட்டலை அடைந்தது.

"கோகுலன், மணி ஐந்தரை ... இன்னும் பத்து நிமிஷம் அவகாசம் தருகிறேன். அதற்குள் புறப்பட வேண்டும்."

கோகுலனுக்குத் தலை சுற்றியது. ஒன்றுமே புரியவில்லை. அவன் கற்பனை செய்த பிரளயத்தின் அறிகுறிகளா? உலகம்மாறிப் புது உலகம் பிறக்கப் போகிறதா? அவன் முன் இருக்கும் மானேஜர் உயிரும் சதையும் கொண்ட மனித ராசியைச் சேர்ந்தவர்தானா?

பேச முடியாமல் திணறினான்.

"உம் ... உம் ... சீக்கிரம்..."

முகத்தைக்கூடக் கழுவவில்லை. திறந்திருந்த பெட்டியைச் சரி செய்தான். கலைந்த தலையை அவசரத்தில் இன்னும் கலைத்துக் கொண்டான். 'சீப்பை எடுத்துக் கொள்ளணும்' என்ற எண்ணம் தோன்றியதே தவிரக் காரியத்தில் கை செல்லவில்லை. ரோஜா நிறப் புடவையின் மடிப்பில் 'கிளிப்பச்சை'க் கரை இலேசாகத் தெரிந்தது. பூட்டின பெட்டியை மீண்டும் திறந்தான். புடவை இருக்கிறதா இல்லையா என்று அவனுக்குச் சந்தேகம்.

அறையைப் பூட்டி விட்டு, பூட்டை இழுத்துக் கூடப் பார்க்கத் தோன்றாமல், மாடிப் படியை நோக்கித் தாவினான்.

"சீக்கிரம் போங்கள் சார். தலை தீபாவளி" என்று சிரித்துக் கொண்டே காப்பி கொண்டு வரும் சிப்பந்தியின் மொழிகள் அவன் காதில் ஏறவில்லை. சிரிப்புக்குப் பதில் சிரிப்பாக ஏதோ சிரித்து வைத்தான்.

மானேஜர் ஒன்றுமே பேசாமல் காரை வேகமாக ஓட்டினார்.

ஐந்து ஐம்பத்தைந்து. டிரைவர் டிக்கட்டுடன் தயாராக இருந்தான். அதற்குரிய பணத்தைக் கொடுக்க வேணும் என்றுகூட கோகுலனுக்குத் தோன்றவில்லை.

அவன் ரயில் ஏறவும் அது புறப்படவும் சரியாக இருந்தது.

"ஜாக்கிரதையாகப் போ. நாலு நாட்கள் இருந்து விட்டு வா." மானேஜர் நகரும் ரயிலோடு நகர்ந்து கொண்டே கூறினார்.

கோகுலனுக்கு என்னவெல்லாமோ கூற வேண்டும்போல இருந்தது. ஆனால் நாக்கில் ஒலி புரண்டால்தானே?

* * *

ஏழே கால் அரக்கோணம். எட்டே முக்கால் காட்பாடி. இன்னும் இரண்டரை மணி ஆகுமே ஜோலார்ப்பேட்டை வர.

அப்புறம், அப்புறம்...சேலம்...ஈரோடு... திருப்பூர்......அப்புறம், அப்புறம் தலை தீபாவளி!

ஜோலார்ப் பேட்டைக்கு அடுத்த ஸ்டேஷன் கோயமுத்தூரா யிருக்கக் கூடாதா? இல்லா விட்டால் ராதை ஜோலார்ப் பேட்டையில் இருக்கக் கூடாதா? ரயிலின் வேகத்தில் அவன் கண்கள் சுழன்று கடைசியில் மூடின.

திடீரென்று நேரமாகி விட்டதோ என்று கண் விழித்தான். வெளியே மழை.

"என்ன ஸார், நேரம்?" கையில் நாலைக்குத்தான் கடிகாரம் இருக்கும்.

"இப்போதான் சேலம் வந்து போச்சு."

சேலம். ஈரோடு. நடுவிலே இருக்கிற சின்ன ஸ்டேஷனைப் பற்றி ஏன் கவலைப் படணும்? மீண்டும் பூனைத் தூக்கம்.

"ஸார், என்ன நேரம்?"

"ஐந்து."

"இன்னும் பதினைந்து நிமிஷம்தானே, கோயமுத்தூர் வர?"

"வண்டி ஒரு மணி நேரம் தாமதம்..."

"என்ன?" இடி விழுந்தது போலிருந்தது அவன் காதுகளில்.

தெய்வமே சோதிக்கிறது. கோகுலன் முகத்தில் ஈரமில்லை. மனம் கசிந்தது.

* * *

ஆறேகாலுக்கு ரயில் நின்றது. இனிமேல் அவசரப்பட்டு ஒன்றும் பயனில்லை.

இத்தனை நேரம் அவன் எதற்காகப் பறந்தான்? யாருக்காக மனம் உளைந்தான்?

தெருவில் தீபாவளி முடிந்து விட்டதற்கான கோலம். பட்டாசுத் துண்டுகள் அங்குமிங்குமாகச் சிதறிக் கிடந்தன. காலை நேரத்தில் நடமாட்டம் அதிகமில்லை. பொழுது புலர்ந்து விட்ட பிறகு வெளிச்சத்தில் என்ன தீபாவளி வேண்டியிருக்கும்?

'ஜில்'லென்று முகத்தில் கோயமுத்தூர் மலைச் சாரல் காற்று வீசியது. வானில் மேகங்களின் சஞ்சாரம்.

'திரும்பி விடலாமா' என்று கூட ஒரு கணம் கோகுலன் நினைத்தான்.

ஆனால் அதற்குள் ராமநகர் வந்து விட்டது.

ராதையின் வீட்டைப் பார்க்கவே அவனுக்கு ஏனோ பயமாக இருந்தது. ஒருத்திக்காக இவ்வளவு தூரம் பறந்ததை நினைத்து ஏளனம் செய்வார்களோ என்று அவன் மனம் கலங்கினான்.

வண்டியிலிருந்து இறங்கியதும் பாலு, "அம்மா, அத்திம்பேர்! அக்கா, அத்திம்பேர்!" என்று தன் கையிலிருந்த பட்டாசையும் மறந்து கத்தினான். அடுத்த விநாடி 'டபார்' என்று வெடித்தது.

அது வெற்றி முழக்கமா?

ராதையும் தாயாரும் திண்ணைக்கு வந்தார்கள். ராதையை ஒரு கணம் பார்த்தான். அவனுக்கு உடல் நடுங்கியது. தூக்கமில்லாமல் சிவந்திருந்த கண்கள், வாராத கேசம், பழைய புடவை உடலில், முகத்தில் ஜீவனே இல்லை.

"வாருங்கோ, மாப்பிள்ளை......"

அவன் காதுகளில் விழவில்லை. ராதை பேசாமல் முன் செல்ல அவன் நேரே அவன் அறைக்குச் சென்றான். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். இருவர் கண்களிலும் நீர் துளிர்த்தது. திடீரென்று ராதை சிரித்தாள்.

"நம் தீபாவளி இப்போதுதான் பிறந்தது. ஊருக்கும் உலகத்துக்கும் அது தீர்ந்து விட்டது......அதைப் பற்றி நமக்கென்ன...நமக்கு நம் தீபாவளிதானே...... நாம் சேருகிறபோதுதான் அதற்குப் பிறந்த வேளை......"

கோகுலன் உட்கார்ந்து விட்டான். அவனுடைய கை இன்னும் ராதையின் கைகளிலேயே புதைந்திருந்தது.

## புண்ணிய புருஷரின் மறைவு

சில தினங்களுக்கு முன் மதுரை ஜில்லா பெரிய குளத்தில் தமது எண்பதாவது வயதில் சமாதி எய்திய ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா, ஆதி சங்கரர், வித்யாரண்யர், சதாசிவப் பிரம்மேந்திரர் முதலிய மகான்களின் வழியில் தோன்றியவர். இல்லறத்தில் இருந்து கொண்டே துறவியாகத் தொண்டு புரிந்தவர். ஆங்கிலம், தமிழ், வடமொழி இம் மூன்று பாஷைகளிலும் புலமை வாய்ந்த ஸ்ரீ சுந்தரராஜ சர்மா, ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே பகவத் கீதையை ஆதிசங்கரர் பாஷ்யத்துடன் தமிழில் மொழி பெயர்த்துத் தனிப் பெருமைக்கு உரியவரானார். இதைத் தவிர மற்றும் பல அரிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து அரிய தொண்டு புரிந்தார். பாலகங்காதர திலகர், பண்டித மதன் மோகன் மாளவியா, மகா மகோபாத்யாய டாக்டர் கங்கா நாத் ஜா, சென்னைக் கவர்னர் திரு ஸ்ரீ பிரகாசாவின் தந்தையான டாக்டர் பகவான்தாஸ் முதலிய மாபெரும் தலைவர்கள் ஸ்ரீ சர்மாவுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தார்கள் எனில், அந்த மகானின் பெருமையை ஊகித்துக் கொள்ளலாம். அப்பெரியாரின் மறைவு பற்றி கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் உருக்கமான செய்தி அனுப்பியிருந்தார்கள். புகழ் உடல் எய்திய மேற்படி ஞானியின் சமாதி, பெரிய குளம் முருகப்பெருமான் ஆலயத்துக்கு அருகில் நிகழ்கிறது.






# குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மிய மணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

## இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம்
கால்கேட் பாமாலிவ்
அளிக்கிறது




# ப்ரோடெக்ஸ்

## சர்வப்பிரயோக வாசனைப்பௌடர்

PTP/6/3



# உங்கள் கூந்தலில் அமைந்திருக்கும் சுருள்களை எழிலோங்கச் செய்யுங்கள்

யாவரும், சுருண்டு வளைவுகளோடிருக்கும் கூந்தலைக் கண்டு போற்றுகின்றனர். ஏதாவதொரு கெட்டியான எண்ணெயை உபயோகித்து சிக்குப் பிடிக்கும் விதத்தில் கூந்தலை படிய வைக்கக் கூடாது. கூந்தலுக்கான டாம்கோ வாசனைத் தேங்காய் எண்ணெயை உபயோகித்து உங்கள் கூந்தலின் இயற்கையான வளைவுகளை நிலைக்கச் செய்யுங்கள். உயர்ந்த பாணியில் பரிசுத்தப்படுத்திய இந்த லேசான எண்ணெய், மல்லிகை, ரோஜா, லெவண்டர் ஆகிய மூன்று நேர்த்தியான வாசனைகளில் கிடைக்கிறது.




25 வருஷங்களாக இந்தியாவின் மிகவும் விரும்பப்பட்ட கூந்தல் தைலம்.



வாரத்திற்கொருமுறை கூந்தலுக்கு டாம்கோவின் தேங்காய் எண்ணெய் ஷாம்பூவை உபயோகித்து ஸ்நானம் செய்யுங்கள். இதுவும் உங்கள் கூந்தல் மிருதுவாய் இயற்கையான கருக்குடனிருக்க உதவும்.

## டாம்கோ

### கூந்தலுக்கான வாசனைத் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்

டாடா ஆயில் மில்ஸ்



# அரங்கேற்றம்

ரா. பாலகிருஷ்ணன்

டைரக்டர் வேதமூர்த்தி தன் வீடு தேடி வந்திருக்கிறார் என்றதுமே சாருமதி முகத்தைச் சுளித்துக் கொண்டாள். வெறுப்பினால் அல்ல. அவர் எதைப்பற்றிப் பேசக் கூடும் என்று அவள் முன் கூட்டியே ஊகித்திருந்ததுதான் காரணம். சாருமதியின் வைராக்கியத்தைக் குலைக்க அவர் தான் ஒரு வாரமாகத் தீவிர முயற்சி செய்து வருகிறாரே? அவள் 'சரி' யென்று தலையசைத்தால் போதும்; வேத மூர்த்திக்கு உள்ளம் குளிர்ந்துவிடும். ஆனால் அந்தப் பேச்சை யெடுத்தாலே அவளுக்கு வேம்பாகக் கசந்தது. எது தன்னுடைய திறமைக்கு எடுத்துக் காட்டாக, வெற்றிக்கு அடிப்படையாக அமையும் என்று வேதமூர்த்தி நம்பினாரோ, அதுவே அவளுடைய வாழ்க்கையின் தோல்வியாக முடியும் என்பது அவருக்கு எப்படித் தெரியும்?

சோபாவிலமர்ந்த வேதமூர்த்தியின் முகம் உற்சாகமிழந்து காணப்பட்டது.

"டைரக்டர் ஸார்! காப்பி சாப்பிடுகிறீர்களா? இல்லை......ஓவல்டின்......ஏதாவது கொண்டுவரச் சொல்லட்டுமா?" என்றாள் சாருமதி. ரவிவர்மாவின் தமயந்தி சித்திரம் போல் தூணில் முழங்கையை ஊன்றி ஒயிலாக நின்றாள், அந்த நடிகை.

"வந்தனம். நீ எனக்குத் திருப்திகரமான முடிவு சொல்லுவதாயிருந்தால் காப்பி, டீ, ஓவல்டின் எல்லாவற்றையும் ஒரே மூச்சில் வேண்டுமானாலும் குடிக்கத் தயார்! உன் முடிவைச் சொல்லு, முதலில். இவ்வளவு நாட்களாக நீ பிடி கொடுத்தே பேசவில்லை. நம் முதலாளி கூட ஒற்றைக் காலில் நிற்கிறார். லட்சக்கணக்கில் பணத்தைக் கொட்டியிருக்கிறவரல்லவா? அவர் மன நிலை எப்படியிருக்குமென்பது நான் கூறாமலே விளங்கும், உனக்கு" என்றார் டைரக்டர் வேதமூர்த்தி. 'எனக்காக இல்லாவிட்டாலும் முதலாளி சொல்லுகிறாரே என்பதற்காக வேனும் ஒப்புக் கொள்ளேன்!' என்று கெஞ்சுவது போலிருந்தது அவர் முகபாவமும் பேசிய தோரணையும்.

"ஸார்! நம் முதலாளி ரொம்ப நல்லவர்தான். என்னைக் கண்ணியமாக நடத்தி வந்திருக்கிறார், இன்று வரையில். உங்களைப்பற்றி நேருக்கு நேர் சொல்ல எனக்கே கூச்சமாயிருக்கிறது. சினிமாத் தொழில் செய்த பாக்கியந்தான் உங்களை இதில் பிரவேசிக்கச் செய்திருக்கிறது. உங்களைப் போன்ற ஒரு பண்புள்ள அறிவாளியை டைரக்டராக அடையக் கொடுத்து வைத்த நம் முதலாளியின் அதிர்ஷ்டத்தை எண்ணும்போது எனக்கே பெருமையாகத்தான் இருக்கிறது. படத்தின் சிறப்பையும், என் எதிர்கால நலனையும் கருத்தில் கொண்டு தான் நீங்கள் இவ்விஷயத்தில் முனைந்து நிற்கிறீர்கள் என்பதும் எனக்குத் தெரியாமல் இல்லை. இவ்வளவிருந்தும் உங்கள் யோசனையை என்னால் ஏற்க முடியவில்லையே என்ற வருத்தந்தான் எனக்கு. தயவு செய்து என்னை மேலும் வற்புறுத்தாமல் என் இஷ்டப்படி விட்டுவிடுங்கள்!" வேதனையின் சாயல் சாருமதியின் முகத்தில் படர்ந்தது.

எதையோ எண்ணி அவள் சஞ்சலப் படுகிறாள் என்பதைக் கண்டு கொண்டார் வேதமூர்த்தி. "சாருமதி! உன் கருத்து எனக்கு விளங்கவேயில்லை. நடிக்க முன் வந்திருக்கிறாய்; ஆனால் நாட்டியமாட மறுக்கிறாய். உன் திறமையை உன்னைவிட நான் நன்கு அறிந்து கொண்டிருக்கிறேன். உதட்டளவில் உன்னைப் புகழ்ந்து பேசவில்லை. உண்மையாகத்தான் கூறுகிறேன். காலில் சதங்கையைக் கட்டிக் கொண்டு ஆட வந்து விடுகிறார்களே! அவர்களெல்லாம் நீ நடந்து செல்லும் ஒயிலைக் கண்டு வெட்கப்பட வேண்டும்! சில நாட்கள் நீ பாடங் கற்றுக் கொண்டால் போதும்; அபாரத் தேர்ச்சியடைந்து விடுவாய். ஒரு பத்து நிமிடங்கள் இந்தப் படத்தில் நீ நடனமாடுவதன் மூலம் எவ்வளவு பேருக்கு மகத்தான லாபம் ஏற்படும் என்பதை யோசித்துப் பார்!"—டைரக்டரின் பேச்சு அவள் உள்ளத்தை ஊடுருவியது.

ஒருகணம் மௌனமாக நின்றாள் சாரு. அவள் மனம் எதையோ தாவிப் பிடிக்க முயன்று கொண்டிருந்தது.

"டைரக்டர் ஸார்! நான் நன்றிகெட்டவளல்ல. என்னை நடிப்புக் கலையில் பழக்கி



முன்னுக்குக் கொண்டு வந்தவர் நீங்கள். அதற்காக நான் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நன்றாக நடனமாடத் தெரிந்தும், ஆடமுடியாத நிலைமையில் இருக்கிறேன். தயவு செய்து என்னை இந்த விஷயத்தில் மட்டும் வற்புறுத்தாதீர்கள்!" என்ற அவன் பதிலில் சோகம் நிறைந்திருந்தது.

"என்ன? உனக்கு நாட்டியமாடத் தெரியுமா? நன்றாக ஆடுவாயா? அப்படியானால்......"

"ஆமாம். அபாரமாக ஆடுவேன். சிட்சை எதுவும் தேவையில்லை எனக்கு. ஆனால் இந்த ஜன்மத்தில் நான் மேடையேறி நாட்டியமாடப் போவதில்லை. காரணத்தையும் சொல்லுகிறேன். அதை நினைக்கும் போதே நெஞ்சு வேதனையடைகிறது. அந்த வேதனையை வெளியேற்றுவதற்காகிலும் என் வரலாற்றை இப்போது சொல்லத்தான் போகிறேன்" என்று ஒரு கணம் தயங்கி விட்டு ஆரம்பித்தான் சாருமதி.

"நட்டுவனார் நடேச பிள்ளை என்ற பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அந்தச் சுற்று வட்டாரத்திலேயே யாருக்கும் அவரைத் தெரிந்திருக்காது. பரத நாட்டியத்தில் அவருக்கிருந்த புலமை அசாதாரணமானது. வாழையடி வாழையாகப் பரத நாட்டியத்தைப் போதித்த பரம்பரையில் உதித்தவர் அவர். ஆனால் அவர் கீர்த்தி பரவவில்லை. அவருக்கு இரண்டே சிஷ்யர்கள்தாம்! ஒருத்தி அவருடைய சொந்தப் புதல்வி. மற்றவன் நான்! எங்கள் இருவர் மூலமும் தம் புகழ் நாடெங்கும் வியாபிக்கப் போகிறது என்று அவர் கண்ட கனவு நிறைவேறாமலேயே கருகிவிட்டது. என் துரதிர்ஷ்டம் தான் அவர் புகழுக்கு யமனாக வந்து மூளத்தது என்பதே என் அபிப்பிராயம்! சந்தர்ப்பங்கள் அப்படிச் சதி செய்துவிட்டன.

என் தகப்பனார் இறந்தவுடன், எட்டு மாதக் குழந்தையான என்னை வளர்க்க வேண்டி, நடேச பிள்ளையின் வீட்டில் சமையல் வேலைக்கமர்ந்தாள் என் தாயார். சுமார் ஏழு வருடங்கள் அந்த வீட்டில் உழைத்தாள்...அதாவது கடைசி மூச்சுள்ள வரையில். என் தாயின் மறைவுக்குப் பின் என்னை வளர்க்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார், நடேச பிள்ளை.

அன்று முதல் நடேச பிள்ளைதான் எனக்குத் தாய், தகப்பன், குரு எல்லாம்!

அவருடைய ஒரே பெண் கமலத்துக்கு ஏறக்குறைய என் வயதுதான். உடன் பிறந்த சகோதரிபோல என்னிடம் ஒட்டிப் பழகினாள். கள்ளங் கபடு அறியாத வெள்ளை மனம் அவளுக்கு. இல்லாவிட்டால், அநாதையான என்னிடம் சரிசமமாகப் பழகி யிருப்பாளா அவள்?

நடேச பிள்ளையும் அவர் மகளும் என்னிடம் உயிரா யிருப்பது தெய்வத்துக்கே பொறுக்கவில்லை போலும்! அவர்களுடைய அன்புக்கு மாறாக, கமலத்தின் அன்னை என்னைக் கட்டோடு வெறுத்து வந்தாள். என் முகத்தைப் பார்த்தாலே அவளுக்குத் தணலாய்த் தகிக்கும். நான் அந்த வீட்டில் இரண்டு வேளைச் சோறு தின்று வளருவதே அவளுக்குப் பிடிக்கவில்லை யென்பதும் எனக்குத் தெரியும். போக்கிடமற்ற நான் அவள் கொடுமையைச் சகித்துக் கொண்டு அந்த வீட்டிலிருந்ததற்குக் கமலம், நடேச பிள்ளை இருவரும் என்னை மனப்பூர்வமாக நேசித்ததுதான் காரணம்.

வெகு நாட்களாகக் குழந்தைக்கு ஏங்கிய அக் குடும்பத்தில் என் தாயார் அடியெடுத்து வைத்த மறு வருடம் கமலம் பிறந்தாள். அதனாலேயே நடேச பிள்ளைக்கு என்னிடம் ஒரு அலாதி பிரியம். 'புண்ணியவதி இந்த வீட்டில் நுழைந்த வேளை, நல்ல வேளைதான்' என்று அடி நாட்களில் அவர் மனைவிகூடச் சொல்லி மகிழ்ந்தாள். ஆனால் அந்த நினைவு அவளிடம் நிலைக்கவில்லை. தனக்கென ஒரு குழந்தை பிறந்தவுடன், என்னிடம் அவள் பொறுமை கொள்ளத் தொடங்கினாள். என் தாயாரின் மறைவுக்குப் பின் அது சிறிது சிறிதாக வளர்ந்து கொண்டே போயிற்று.

கமலத்தையும் என்னையும் ஒரே நாளில் பள்ளியில் சேர்த்தார் நடேச பிள்ளை. அப்

# நிரூபணம்!




சாதாரணமான எளிய
பரீக்ஷைகளிலும் கூட

## புதிய

## 'ஆஸ்ப்ரோ' வலி, ஜுரம் இவற்றினின்று

துரிதமாயும், அபாயமின்றியும் நிவாரணம் அளிக்கின்றது

என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது

### சிறந்தபாக்கிங்-நிறைந்தபாதுகாப்பு

புதிய 'ஆஸ்ப்ரோ'வுடன் கூடிய காகிதத் துண்டை ஜலத்திலிட்டு, எவ்வளவு நேரம் வேண்டுமாயினும் வைத்திருங்கள். பிறகு அத்துண்டைப் பிரித்து வில்லைகளைப் பரிசோதியுங்கள்—அவைகள் கெடாமலும், சுத்தமாயும், ஈரமில்லாமலும் இருக்கக் காண்பீர்கள்.




ஒவ்வொரு புதிய 'ஆஸ்ப்ரோ'வும், காற்று மற்றும் ஈரம் படாமல் தனித் தனியே ஸீல் செய்யப்பட்டிருப்பதனால், உதிரி வில்லைகளால் ஏற்படும் வயிற்றைப் பாதிக்கும் அமிலங்கள் சேர்வதினின்றும் பாதுகாக்கிறது.

### துரிதமான வேலை - அதி சீக்கிர நிவாரணம்

இரண்டு புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஒரு கிளாஸ் ஜலத்திலிடவும். அவை நொடியில் ஜலத்தில் கரைந்து மென்மையான தூளாய் விடுகின்றன. இச்சிறந்த செய்முறை வழிக்கு எமது நன்றி. இதே மாதிரிதான் புதிய 'ஆஸ்ப்ரோ'வும் உங்கள் தேகத்திற்குள் க்ஷணத்தில் வேலை செய்ய ஆரம்பிக்கிறது.




புதிய 'ஆஸ்ப்ரோ' அதைப்போலுள்ள மற்றெவ்விதமான வில்லைகளைக் காட்டிலும் வேகமாகக் கரைகிறது, என்பதை ரசாயனசாலைப் பரீக்ஷைகள் நிரூபித்துள்ளன. புதிய 'ஆஸ்ப்ரோ'வில் துர்ப்பழக்கம் உண்டாக்கும் மருந்துகள் எதுவும் சேர்க்கப்படவில்லை, அன்றியும் அது இருதயத்தையோ வயிற்றையோ பாதிக்காது.




கைக்கடக்கமான மூன்று வில்லைகளடங்கிய
பாக்கெட் விலை 2 அணு
30 வில்லைகள் கொண்ட குடும்ப சைஸ் ரூ. 1/2

279

விநியோகஸ்தர்கள்: முல்லர் அண்டு பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்,
பம்பாய், கல்கத்தா, மதராஸ், டில்லி.

போது அவர் மனைவி கூறியது எனக்கு இன்னும் நன்றாக ஞாபகமிருக்கிறது. "இந்தச் சமையற்காரக் குட்டிக்குப் பள்ளிக்கூடம் ஒன்றுதான் குறைச்சல்! சோறு போட்டுத் துணிமணி வாங்கிக் கொடுப்பது போதாதா?" என்றாள். என் தாயார் அந்த வீட்டில் சமையல் செய்தாள் என்பதற்காக நான் பள்ளிக்கூடம் சென்று படிப்பது கூடத் தவறா? நானும் எதிர்காலத்தில் ஒரு சமையற்காரியாகவே காலத்தை ஓட்ட வேண்டும் என்பது அவள் நினைவு!

அந்த அம்மாளைப் பற்றி நான் தூஷணையாகப் பேசக் கூடாதுதான். என்ன இருந்தாலும் நான் அவர்கள் வீட்டு உப்பைத் தின்று வளர்ந்தவளல்லவா? ஆயினும் கமலமும் அவள் தந்தையும் என்னிடம் காண்பித்த பரிவை எண்ணிப் பார்க்கும் போது இவள் கொடுமை விசுவரூபமெடுக்கத்தான் செய்கிறது.

ஐந்தாறு வருடங்களுக்குப் பிறகு எங்கள் படிப்பு நின்றது; வீட்டிலேயே நடனம் பயிலத் தொடங்கினோம். நடேச பிள்ளைதான் எங்கள் குரு. நாட்டியத்தில் எனக்கு மிகுந்த ஆர்வம். சுலபத்தில் விஷயங்களைக் கிரஹித்துக் கொண்டு விரைவாக நடேச பிள்ளையே ஆச்சரியப்படுவார்.

"இந்தக் குழந்தையால் எனக்கு எவ்வளவு கீர்த்தி ஏற்படப்போகிறது, தெரியுமா? எதிர்காலத்தில் இவள் கலை பிரமாதமாகச் சோபிக்கப் போகிறது. இன்னாரின் செல்வி சாருமதி என்று ஊர் உலகமெல்லாம் இவள் நடனத்தைப் புகழப் போகிறது என்ற நினைவே எனக்குக் குதூகலமளிக்கிறது. இவளைப் போன்ற ஒரு கூர்மையான பெண்ணுக்கு வித்தை பயில்விப்பதே ஒரு பாக்கியம்!" என்று தம் நண்பர்களிடம் சொல்லி மகிழ்வார்.

கமலமும் நானும் வெகு ஊக்கத்துடன் பயின்று முன்னேறி வந்தோம். ஒரு நாளைக்கு எனக்கு ஏதாவது உடம்புக்கு வந்துவிட்டாலும் அவள் பாடம் சொல்லிக் கொள்ள மறுத்து விடுவாள். 'அக்காவும் வரட்டும், அப்பா! நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்' என்று கூறிவிடுவாள்.

கமலம் நல்ல அழகி. அம்மாவைப் போலப் பொன்னிற மேனி. களையான முகம். தகப்பனாரின் பண்புகளனைத்தும் அவள் உள்ளத்தில் குடி கொண்டிருந்தன. ஆயினும் என் அழகுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அவள் அழகின் மாற்று வெகுவாகக் குறைந்துதான் விளங்கியது என்ற மற்றவர்களின் அபிப்பிராயத்தை நான் ஒப்புக் கொள்ள வேண்டியதுதான்.

எட்டு வருடப் பயிற்சிக்குப் பின் எங்கள் நாட்டியத்தில் பூரண திருப்தி ஏற்பட்டது. நடேச பிள்ளைக்கு, கலையின் நுட்பங்களனைத்தையும் போதித்து விட்டார். அரங்

கேற்றத்துக்குத் தேதியும் குறிப்பிட்டு விட்டார். அந்தச் செலவுக்கென வீட்டை அடகு வைத்து ஆயிரம் ரூபாய்க்கு மேல் கடன் வாங்கி யிருந்ததைத் தம் மனைவிக்குக் கூடத் தெரிவிக்கவில்லை, அவர்.

தீபாவளி கழிந்த எட்டாவது நாள் அரங்கேற்றம். நண்பர்கள், உறவினர்கள் எல்லோருக்கும் அழைப்பிதழ்கள் பறந்தன.

அன்று தீபாவளி. மங்கள ஸ்நானம் செய்துவிட்டுப் புது உடையணிந்து பட்டாசு கொளுத்த வாசலுக்கு வந்தான் கமலம். வைகறை இருள் பிரியவில்லை. திண்ணையில் ஒரு அகல் விளக்கை ஏற்றி வைத்து விட்டு நானும் திண்ணைமீது உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

புதை வாணம் ஒன்றைத் தெருவாசலில் வைத்துக் கொளுத்திவிட்டு வேகமாகத் திரும்பி வந்தான் கமலம். சில நிமிஷமாகியும் அது எரியவில்லை. ஒன்றிரண்டு பொறிகள்தான் தெறித்தன.

"நேற்று சாயந்திரம் மழை பெய்தது பார்த்தாயா? அதனால்தான் வாணத்துக்குள்ளிருக்கும் மருந்துகூட சரப்பசை கண்டிருக்கிறது!" என்று என்னிடம் கூறி விட்டு, மறுபடியும் புதை வாணத்தை நெருங்கிக் குனிந்து பார்த்தான், கமலம்.

"ஜாக்கிரதை, கமலம்! உள்ளூற நெருப்பு இருந்தாலும் இருக்கும். குனிந்து பார்க்காதே!" என்று நான் எச்சரித்துக் கொண்டிருக்கும் போதே 'புசு, புசு' வென்று சீறியெழுந்த வாணம் பொல, பொல வென்று கண்ணைப் பறிக்கும் வண்ண ஜாலங்களை வாரி யிறைத்தது. கண்ணைப் பறிக்கும் வண்ண ஜாலங்கள்தாம்! கமலத்தின் குனிந்த தலை நிமிர்வதற்குள் புதை வாணத்திலிருந்து புறப்பட்ட நெருப்பு பிழம்புகள் அவன் முகத்தில் வேகமாக வந்து தாக்கின. 'ஐயோ!' என்ற அலறலுடன் கைகளால் கண்ணைப் பொத்திக் கொண்டு அப்படியே தரையில் சாய்ந்தான் கமலம்.

திண்ணையிலிருந்து குதித்த என் கை, கால்கள் பதறின. அவனை மெல்லத் தூக்கி யணைத்துத் திண்ணைக்கு அழைத்து வந்தேன். உள்ளேயிருந்து நடேச பிள்ளையும் அவர் மனைவியும் வாசலுக்கு விரைந்தனர். விளக்கொளியில் கமலத்தின் இடது கண்ணைப் பார்த்தேன். என் உடலிலுள்ள ரத்தம் உறைந்து விட்டது போலிருந்தது. ரத்தச் சிவப்பாக இருந்த கமலத்தின் இடது கண்ணில், விழி இருந்த இடமே தெரியவில்லை!

அரங்கேற்றத்துக்கு இன்னும் ஒருவாரம் இருக்கிறது. ஏராளமாகச் செலவு செய்திருக்கிறார் அவன் தந்தை. அபசகுனம் போல இப்படி நேர்ந்து விட்டதே என்று என் நெஞ்சு உருகியது.



ஊருக்கு ஊர் சங்கீத சபைகள் பெருகி வரும் இந்நாளில் ஆலந்தூர்வாசிகளால் சும்மா இருக்க முடியுமா? அவ்வூர் சங்கீத அபிமானிகள் சேர்ந்து ஆலந்தூர் ஆர்ட்ஸ் அகாடமி என்ற பெயரில் புது சங்கீத சபையொன்றை அக்டோபர் 26-ம் தேதி விஜயதசமி நன்னாளில் துவக்கியிருக்கிறார்கள். ஸ்ரீமதி இந்திரா ராமதுரை மேற்படி புது சங்கீத சபைக்குத் துவக்க விழாப் பேருரை நிகழ்த்தினார். இவ் விழாவுக்கு மந்திரி கனம் பக்தவத்ஸலம் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். கலையுலகுக்கு இச் சபை புரியும் தொண்டு சிறந்து விளங்குவதாக!

"ஐயோ! இப்படி ஆச்சே என் குழந்தைக்கு! இதெல்லாம் இந்த மூதேவியால் வந்ததுதான்! விழியாலேயே சுட்டு விட்டாளே என் குழந்தையை! அட, பாவி மகளே!" என்று ஒப்பாரியும் வசை மாரியுமாகப் பொழிந்து தள்ளினான் அவன் தாயார்.

"அம்மா! சாருவை ஏன் திட்டறே? பிசகு என்னுடையதுதானே? திண்ணையில் உட்கார்ந்து வேடிக்கைதானே பார்த்துக் கொண்டிருந்தாள் அவள்?" என்று அந்த நிலைமையிலும் எனக்காகப் பரிந்து பேசினான் கமலம். அவன் அன்பை நினைத்து என் இதயம் இளகியது.

நடேச பிள்ளை உக்கிர மூர்த்தியாக மாறினார். தம் மனைவியை நோக்கி, "இந்தா! நீ சும்மா இருக்கமாட்டே, இப்போ? தெய்வச் செயலாக ஏற்பட்டதற்கு அந்தக் குழந்தை என்ன செய்யும்? குழந்தை கிடந்து துடிக்குது; அதுக்கு ஆறுதலாக ஏதாவது செய்யாமல் அந்தக் குழந்தையைத் திட்டினால் சரியாப் போயிடுமா? நான் வைத்தியர் வீட்டுக்குப் போயிட்டு வரேன், குழந்தையை அழைச்சுண்டு. உன் வாயை மூடிக்கிட்டு உள்ளே போ!" என்று ஆத்திரத்துடன் கத்திவிட்டுக் கமலத்தை வண்டியிலேற்றிக் கொண்டு வைத்தியர் வீட்டுக்குக் கிளம்பினார் நடேச பிள்ளை"—

இந்த இடத்தில் சாருமதி சற்று நிறுத்தி ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள். உள்ளத்தில் கரைபுரண்டு பொங்கிய துக்கக் கடல் கண்களின் வழியே பெருகி வழிந்தது.

"உம்....அப்புறம்...? அந்த அரங்கேற்றம் என்னவாயிற்று? நடக்கவேயில்லையா? கமலத்தின் கண்கள் குணமாகி விட்டனவா?"—தாழ்ந்த குரலில் விசாரித்தார், டைரக்டர் வேதமூர்த்தி.

சாருமதி தொடர்ந்து கூறினாள்: "கமலம் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தான். ஒரு மாதத்துக்குள் சொஸ்தமாகி வீடு திரும்பி விடுவான் என்று நம்பிக்கை யூட்டினார் நடேசபிள்ளை. ஆனால் குறிப்பிட்ட தினத்தில் என்னை மாத்திரம் அரங்கேற்றி விடப் போவதாக நடேச பிள்ளை கூறிய போது நான் திடுக்கிட்டேன். அவன் இல்லாமல் நான் ஆடுவதா? அதுவும், அவன் ஆஸ்பத்திரியில் கிடக்கும் நிலைமையிலா? அதை என்னால் கற்பனை கூடச் செய்ய முடியவில்லை.

என் குருவுக்கு என் இதயத்தையே காண்பித்தேன்! "என்னால் முடியவே முடியாது; கமலம் வந்த பிறகு அவனுடன் சேர்ந்துதான் ஆடப்போகிறேன்" என்று தீர்மானமாகக் கூறினேன். அளவு கடந்த அன்பின் காரணமாக அவர் சொல்லைத் தட்டிப் பேசினேன், முதல் தடவையாக.

"பணம் போனால் போகட்டும். அரங்கேற்றமே வேண்டாம்!" என்று அவர் மனைவி என் பக்கம் பரிந்து பேசினாள். முதலில் எனக்கு ஆச்சரியமாயிருந்தாலும், பிறகு அவள் கருத்து எனக்கு விளங்காமலில்லை. திடீரென்று என்னிடம் அவளுக்கு அநுதாபம் பிறந்து விடவில்லை. தன் மகனுக்குச் சேரவேண்டிய புகழை நான் ஒருத்தியே அடைந்து விடப் போகிறேனே என்று பொறாமையால் வெதும்பிய உள்ளத்துடன்தான் அவள் அப்படிப் பேசினாள்.

நடேச பிள்ளை என்னிடம் ரகசியமாகக் கூறினார்: "இதைக் கேளம்மா, சாரு! கமலம் என் சொந்த மகன்தானே? அவனிடம் எனக்கு ஆசையும் அன்புமில்லையா? இந்த நிலையில் உன் மனசும் என்ன பாடு

# வாழ்க்கை லக்ஷியத்தின் முக்கியமான தருணத்தில்...



ஸ்திரீகளின் வாழ்க்கையின் முக்கியமான தருணம் பிரசவ சமயமே. இச்சமயத்தில் அவர்களுக்கு ஒய்வும் ஒழுங்கான போஷாக்கும், மேலும் விஷ நோய்களின் அபாயத்திலிருந்து சரியான பாதுகாப்பும் தேவை. பிரசவ சமயத்தில் சருமத்தின்மேலோ அல்லது கர்பாசய மார்க்கத்திலோ உண்டாகும் மிக சிறிய வெட்டுக்காயம் பிரசவ ஜுரம் மற்றும் இதர கொடிய துன்பங்களை விளைவிக்கக்கூடும் என்பதை எல்லோரையும் விட டாக்டர்களே நன்கு அறிவார்கள். அவர்களுடைய ஆலோசனையைப் பின்பற்றுங்கள். பிரசவ சமயத்தில் மிகவும் பத்திரமானதும் சிறந்த பாதுகாப்பளிக்கக்கூடிய கிருமிநாசினியான 'டெட்டாலை' உபயோகியுங்கள்.

**நோய் வரும் முன்பே பாதுகாத்துக் கொள்ள**

**'DETTOL'**

டாக்டர்கள் உபயோகிக்கும் கிருமிநாசினி

### கையிருப்பாக வீட்டில் 'டெட்டால்' வைத்திருங்கள்:

வீட்டில் 'டெட்டாலை' கையிருப்பாக வைத்திருங்கள். சொந்த சுகாதாரத்திற்கும், வீட்டுத் துணிமணிகளை சுத்தம் செய்வதற்காகவும், 'டெட்டால்' உபயோகியுங்கள். விஷ நோய்களின் அறிகுறியாக துர்நாற்றம் தோன்றும் சமயங்களில் 'டெட்டாலை' தரையிலும் சாக்கடையிலும் தெளியுங்கள்.



ஓடியாடி விளையாடும்பொழுது குழந்தைகளுக்கு வெட்டுக்காயம், சிராய்ப்புகள் ஏற்படுவது இயற்கையே. அவர்களுடைய காயங்களை 'டெட்டாலைக்' கழுவுங்கள். 'டெட்டால்' மிகவும் பத்திரமான இனிமையான வாசனையுள்ள கிருமிநாசினி. உங்கள் குழந்தைகளுக்கு 'டெட்டால்' உபயோகிக்கும் முறையை கற்பியுங்கள். வெகு சீக்கிரத்திலேயே அவர்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றக்கூடிய இந்த நல்ல பழக்கத்தை அடைவார்கள்.

மறுபடியும் வெட்டிக்கொண்டேன்!

## உடனே—
## 'டெட்டாலை' எடு!



க்ஷவரம் செய்து கொள்ளும் தண்ணீரில் 'டெட்டாலை' சிறிதளவு சேர்த்துக் கொள்ளுங்கள். வெட்டுக்காயத்தால் விஷநோய்கள் நேராவண்ணம் அது பாதுகாக்கும்.




## இலவசம்

'மாடர்ன் ஹைஜீன் பார் விமென்' என்ற புத்தகத்தை இலவசமாகப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட், இலாகா FB 4, தபால் பெட்டி நெ 664, கல்கத்தா-1 விலாசத்திற்கு எழுதுங்கள்

DI—4 AEL 193

# பற்களைப் பரிசுத்தமாக்கும்
# மக்ளீன்ஸ்!

இம் மூன்று கோப்பைகளைப் பற்கள் என பாவனை செய்வீர்களானால் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம்.



மக்ளீன்ஸ் பற்களுக்கு இடையிலுள்ள சந்துகளை துப்புரவாக சுத்தம் செய்து

## ஊத்தையை அகற்ற சிறந்த சாதனம்

பற்களின் மேல் படிந்திருக்கும் பாசியில் விப்பாயிட்ஸ் என்று சொல்லப்படும் அசுத்தம் கலந்துள்ளது. விப்பாயிட்டை எளிதில் சுத்தம் செய்யமுடியாது. இவை தவறாமல் சுத்தம் செய்யப்பட வேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச்சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய விப்பாயிட்ஸை அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்யவேண்டும். விப்பாயிட்ஸை கரைக்கக்கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால்,

வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் விப்பாயிட்ஸை லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச்செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பற்பசையை தினந்தோறும் இரு முறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.

க்ளோரோபில் சேர்ந்த
வகையும் கிடைக்கும்




MTY-41 TAM

படுமென்று எனக்குத் தெரியாதா? கமலம் உன்னிடம் ஒரு விஷயம் தெரிவிக்கச் சொன்னான். இதை நீ அவன் அம்மாவிடம் கூடச் சொல்லக் கூடாது, அரங்கேற்றம் முடியும் வரையில். கேள், கமலத்தின் இடது கண் இனித் திறக்க வழியே யில்லையாம்! டாக்டர் சொல்லி விட்டார்!'' — இதைக் கேட்டதும் என் கால்கள் தள்ளாடின. சோர்ந்து அப்படியே தரையிலமர்ந்தேன்.

அவர் மெல்லிய குரலில் சொன்னார்: "தன் கதி இப்படி ஆகிவிட்டதே யென்பதற்காக உன் அரங்கேற்றம் தடைப்பட்டு நிற்கக் கூடாதென்பது கமலத்தின் விருப்பம். 'ஏற்கனவே ஏற்பாடு செய்யப்பட்ட தினத்தில் அவள் ஆடத்தான் வேண்டுமென்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள், அப்பா! ஆனால், அவள் இலேசில் இசையமாட்டாள். இந்தப் பதினைந்து வருஷங்களும் சருடலும் ஒருயிருமாக நாங்கள் ஓட்டிப் பழகினோமே—அந்த நட்பின்மீது ஆணையிட்டுச் சொன்னேன் என்று சொல்லுங்கள். அவள் ஒப்புக் கொள்வாள்!' என்று சொன்னான்.''

கமலத்தின் ஆசையை — அன்புக் கட்டளையை என்னால் புறக்கணிக்க முடியவில்லை. அவன் அரங்கிலேறி ஆடுவது இனி என்றென்றும் நடவாத காரியம் என்று எனக்கு நிதர்சனமாகத் தெரிந்த பின்னும் நான் ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழி? அதுமட்டுமல்ல; அந்த அரங்கேற்றம் என் நடனத்துக்கு மட்டுந்தானா? எட்டு வருடங்கள் அரும்பாடு பட்ட என் குருநாதரின் ஒரே சிஷ்யை நான் தானே? நான் அரங்கேற்றத்துக்கு இசையாவிட்டால் என் குருவின் பெயர் யாருக்குத் தெரியும்? எனக்கு அன்னமிட்டு வளர்த்து, நடனக் கலையைப் போதித்து, எனக்காக அவர் மேற்கொண்ட சிரமங்களுக்குக் கைம்மாறாக நான் இதைக் கூடச் செய்யாவிட்டால் என் மனச்சாட்சி என்னை இடித்துக் கொண்டே யிருக்காதா?

நான் ஆடினேன். மனம் எங்கோ லயித்திருந்தது. கமலத்தின் கண்ணை மறைத்து நின்ற கட்டு — அந்தப் பஞ்சும் துணியும் என் கண்களையே மறைப்பது போலிருந்தது ஒரு கணம். அந்த நிலைமையில் என்னால் எவ்வளவு திறமையைக் காண்பித்திருக்க முடியுமோ, அவ்வளவு திறமையுடன் ஆடினேன். உற்சாகமிழந்து குமம்பிக் கிடந்த என் உள்ளத்தில் என்ன உணர்ச்சி ஏற்பட்டிருக்கும்? முகத்தில்தான் பாவம் நிறைந்து விடுமா? என் குருநாதருக்கு என்னால் களங்கம் ஏற்படாமலிருக்க வேண்டுமே என்ற ஓரே ஏக்கம் என்னை உந்தித் தள்ளியது. ஏதோ சமாளித்து விட்டேன். அடிக்கடி கரகோஷம் எழுந்தது. யார் யாரோ என்னைப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

இதெல்லாம் யாரால் எனக்குக் கிடைத்த பாக்கியம்? இதைச் சரிசமமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டிய என் சகோதரி மட்டும் என் அருகிலிருந்தால்......? டைரக்டர், சார்! அன்று செய்து கொண்ட பிரதிக்ஞை தான்! அதற்குப் பிறகு நாளது வரையில் நான் மேடையேறி நாட்டிய மாடவில்லை; இனியும் ஆடமாட்டேன்! இப்போது என்பேரில் உங்களுக்கு வருத்தமில்லையே?'' என்று கேட்டாள் சாருமதி.

"உன் வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருக்கும் வரையில் நான் வந்த காரியம் கூட எனக்கு மறந்து விட்டது. அதிருக்கட்டும்: அந்த நடேச பிள்ளை, அவர் மனைவி, மகன் — எல்லோரும் பிறகு என்னவானார்கள்?''

"மகனுக்கு நேர்ந்த சீர்குலைவு நடேச பிள்ளையை விரைவில் உருக் குலைத்து விட்டது. அவருக்குப் பின் ஆறு மாதங்களில் அவர் மனைவியும் ஒரு மாதம் படுத்த படுக்கையா யிருந்து விட்டுக் கண்ணை மூடினாள். இறக்குந் தறுவாயில், 'சாரு! இப்போது கமலம் ஒரு அநாதை! எப்படியாவது அவனை நீதான் காப்பாற்ற வேண்டும்!' என்று என்னிடம் கமலத்தை ஒப்படைத்தாள்.

"அவனை வளர்க்க வேண்டியது, என் தலையில் சுமத்தப்பட்ட பளுவாகவே எனக்குத் தோன்றியதில்லை. அதைவிடச் சிறந்த கடமை வேறு என்ன இருக்கிறது எனக்கு?'' என்றாள் சாருமதி.

டைரக்டர் தயக்கத்துடன், "அப்படியானால், கமலம் இப்போது...?'' என்றார். அவர் கேள்வியைப் புரிந்து கொண்ட சாரு, "கமலம் என்னோடுதான் இருக்கிறான்!'' என்று கூறிவிட்டு, உள் பக்கம் திரும்பி, "கமலம்! சற்று இங்கே வந்து விட்டுப் போ!'' என்று அழைத்தாள்.

கறுப்புக் கண்ணாடி கண்களை மறைக்க ஓசையாக நடந்து வந்தான் கமலம்.

"நாட்டிய மாடமாட்டேன் என்று நீ பிடிவாதமாகக் கூறினாயே. அந்தப் பிடிவாதத்துக்குக் காரணமான உன் தியாக உணர்ச்சியை இப்போதுதான் உணர்ந்தேன். சரி! இனிமேல் நம் முதலாளியும் உன்னை இது விஷயமாக வற்புறுத்தாமலிருக்கும்படி நான் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்று உறுதிகூறி விடை பெற்றுக் கொண்டார், டைரக்டர் வேதமூர்த்தி.

சாருமதியின் தியாகத்தின் எல்லை அதுதானா? கண்ணிழந்த கமலத்துக்குக் கல்யாணம் நடப்பது அசாத்தியம் என்பதற்காகத் தானும் மணம் செய்து கொள்ளுவதே யில்லை என்று அவள் உள்ளூறத் தீர்மானித்திருந்தாளே, அந்த விஷயம் யாருக்குத் தெரியப் போகிறது?



# ஐயனார் சாட்சி



இரண்டு மாதங்களுக்கு முன்னால் தங்கப்பன் செல்வநாயகியை முதன் முதலில் சந்தித்தான். வேர்க்கடலைப் பயிரின் பசுமை சூழ்ந்த ஒரு சின்னக் குடிசை வாசலில் போய் நின்று "இங்கே யாரு இருக்கிறது!" என்று கேட்டான். நடுப்பகல். வெய்யில் உச்சி மண்டையில் சூடேற்றிக் கொண்டிருந்தது.

வெளியில் வந்து நின்ற செல்வ நாயகியைக் கண்டதும் அவன் பிரமித்துப் போய்விட்டான்.

"ஏன்! நான்தான் இருக்கேன். என்ன வேணும்!" என்று கேட்டாள்.

"நாங்க நிலம் அளந்துக்கிட்டு வருகிறோம். எங்க எசமான் அதோ மரத்தடியிலே இருக்காரு. அவருக்குத் தாகமா இருக்கு. ஏதாவது மோரு கீரு இருக்குமா!"

"இல்லியே."

"பின்னே என்ன இருக்கு! தண்ணியாவது இருக்குமா!" என்று கேட்டான் தங்கப்பன்.

"இல்லே; தயிருதான் இருக்கு!"—நமட்டுச் சிரிப்புச் சிரித்தாள் அவள்.

"ரொம்ப நல்லாப் பேசறே. சரி; கொஞ்சம் தயிரே கொடு, போதும்."

உள்ளே போய் ஒரு தகரக் குவளை நிறையத் தயிர் கொண்டு வந்து அவனிடம் கொடுத்து விட்டு, "என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்கன்னு சொன்னீங்க!" என்று செல்வநாயகி வியப்புடன் கேட்டாள்.

"நிலங்களை யெல்லாம் அளக்கிறோம். சர்க்காருலே இந்த இடத்திலே விமான நிலையம் கட்டப் போறாங்க. அதுக்காக இந்த முழு மைதானத்தையும் எடுத்துக்கிடப் போறாங்க வலுவிலே. நிலச் சொந்தக்காரங்களுக்குப் பணம் கொடுத்துடப் போறாங்க."

"அடப் பாவிங்களா! உங்களுக்குப் பச்சைத் தண்ணிகூடக் கொடுக்கக் கூடாதே. அநியாயமாகத் தயிரைக் கொட்டிக் கொடுத்திருக்கேனே!" என்று சொன்னாள் செல்வநாயகி.

"தாகத்துக்குக் கொடுக்கிறது புண்ணியம், அம்மா. குழந்தை குட்டி பிறக்கும். கல்யாணம் ஆகாதவங்களுக்குக் கல்யாணம் ஆகும்" என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டே சொல்லி விட்டு நகர்ந்தான் தங்கப்பன். செல்வநாயகியின் முகம் சிவந்தது. வெட்கத்தினால் ஏற்பட்ட சிரிப்பு ஒரு அமைதியான அழகா யிருந்தது.

கல்யாணத்துக்குத்தான் இருந்தாள் அவள். தகப்பனருக்கு அந்தப் பக்கத்தில் நாலுகாணி நிலம் இருந்தது. ஒரே துண்டாய் இருந்தது அந்த நாலு காணியும். எப்போதும் வேர்க்கடலைப் பயிர்தான். ஏதோ போதுமான அளவுக்கு வரும்படி வந்தது. செல்வ நாயகி தகப்பனரின் சார்பில் அடிக்கடி நிலங்களைப் போய்ப் பார்த்துக் கொள்வாள்.

இன்னொரு நாள் எதிர்பாராதவிதமாய் நிலத்துக் குடிசைப் பக்கம் வந்தான் தங்கப்பன்.



"ஏன் அன்றைக்கு எங்கள் நிலத்தைச் சங்கிலி போட்டு அளக்க வரவேயில்லே!" என்று கேட்டாள் செல்வநாயகி.

"என் ஏற்பாடுதான் அது. 'அது ஏதோ சூழ்ல நிலங்களா யிருக்குது. அதை ஒதுக்கிடுவோம்'னு அதிகாரிகிட்டே அபிப்பிராயம் சொன்னேன். 'நீ சொல்றதும் வாஸ்தவம் தான், தங்கப்பா. அப்படி அவசியம்னா இன்னொரு நாள் பார்த்துக்குவோம்'னு போயிட்டாரு. இப்ப அவசரமாக இதொரு விஷயம் சொல்லிவிட்டுப் போக வந்தேன்..." கொஞ்சம் நிதானித்தான் தங்கப்பன். ஆவலினால் அவளை ஒரு நிமிஷம் துடிக்க வைத்து வேடிக்கை பார்க்க வேண்டுமென்பது அவனுக்கு. ஆனால் அவள் பெரிய அழுத்தக் காரியா யிருந்தாள்.

"என்ன! நிலத்தை வாரிச் சுருட்டி வீட்டிலே கொண்டு போய் வைக்கச் சொல்றீங்களா!" என்று கேட்டாள்.

"முடிஞ்சா அப்படியும் செய்துக்க. நான் சொல்ல வந்தது, நிலத்து நடுவிலே அவசரமா தங்கப்பாளைவ ஒரு கேணி எடுத்துடும்படியாச் சொல்லி விடு. சர்க்கார் இந்த நிலத்துக்கிட்டே வரமாட்டாங்க!" என்றான் தங்கப்பன்.

"நல்ல யோசனைங்க. நான் ஏதோ ஒரு மாதிரி பேசி விட்டதற்காக மன்னிச்சுடுங்க. நான் இப்பவே அப்பாகிட்டே போய்ச் சொல்லி விடுகிறேன்."

"சொல்லு. ஆனால் இந்த யோசனையை நான் உன்னிடம் சொன்னதாக மாத்திரம் சொல்லி என் தலையை உருட்டி விடாதே!"

"சேச்சே! சத்தியமாக இல்லே!" என்று சொல்லிக் கொண்டு வீட்டைப் பார்க்க ஓடினாள் செல்வநாயகி.

இரண்டே நாட்களில் அந்த நிலத்தின் நடுவே இரண்டு இடங்களில் கேணிகள் தோண்டியாகி விட்டது. ஆனால் சர்க்காருக்கு இது தெரிந்த போது அதிகாரிகள் ஆச்சரியப் பட்டுப் போனார்கள். நிலத்தை அளந்து கொண்டு வந்த சர்வேயர் தங்கப்பனையும் அவன் அந்த நிலம் பற்றித் தன்னிடம் சொன்ன யோசனையையும் அதிகாரி சம்பந்தப்படுத்திப் பார்த்து விட்டு, மேலதிகாரியிடம் சொல்லி விட்டார். தங்கப்பனுக்கு வேலைபோய்விட்டது.

☆ ☆ ☆

அந்தப் பிராந்தியத்தில் விமான நிலையத்தின் வேலைகள் துவங்கி விட்டன. கலகலப்பேயில்லாத நாலைந்து கிராமங்கள் சூழ்ந்த அந்தப் பிரதேசம் கலகலப்பு பெற்றுக் காட்சியளித்தது.

நிலங்களை யெல்லாம் இழந்த குடிமக்கள் அங்கங்கே பிழைப்புக்காகப் பாறைகளைக் குடைந்து சல்லி உடைப்பதற்குத் தொடங்கி விட்டார்கள்.

தங்கப்பனும் சல்லி உடைக்கிற தொழிலில் ஈடுபட்டான். ஆனால் அவன் ஊருக்கு ஒதுப்புறமாக ஐயனார் கோயில் அருகில் ஏரிக் கரையில் அதற்கு இடம் பிடித்திருந்தான். பக்கத்துக் கிராமத்துக்கு அந்த வழியாகத்தான் ஏரிக் கரை மேல் செல்ல வேண்டும். வேர்க்கடலைக் காலத்தில் கூடைக் கடலையுடன் செல்வநாயகி ஐயனார் கோயில் வழியாகத்தான் போவாள்.

ஒருநாள் எதிர்பாராதவிதமாக அங்கே சல்லி உடைத்துக் கொண்டிருந்த தங்கப்பனைக் கண்டதும் திடுக்கிட்டுப் போனாள் அவள்.

"ஐயோ! நீங்க கூட இந்தத் தொழில்தான் பண்ணுறீங்களா! சர்வே சங்கிலி போடற வேலைன்னு சொன்னதெல்லாம் பொய்யா!" என்று கேட்டாள் அவள்.

"கோபத்தைக் கிளறாதே! உங்க நிலம் தப்பிக்க வழி சொல்லி நான் இந்தக் கதிக்கு ஆளாகி விட்டேன்."

பரிதாபமாகத்தானிருந்தது அவனுக்கு. தவிர அவன் சர்க்காரிலே உத்தியோகம் பார்க்கிறவன் என்ற காரணத்துக்காக அவனுக்குத் தன்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கலாம் என்று தன் தகப்பனார் தாமாகவே சொன்னதை எண்ணிப் பார்த்துக் கொண்டாள். அப்போது அவளுக்குச் சந்தோஷமாய்த்தான் இருந்தது. ஆனால், இப்போது!









...கல் உடைக்கிறவனுக்கா தன்னை அவர் மணம் செய்து கொடுக்க ஒப்புக் கொள்வார்!

அவள் அழகையும் தோற்றத்தையும் கண்டு மயங்கி, வேறு ஒன்றுமே புரியாத நிலையில் இருந்த தங்கப்பன் ஒருநாள் திடீரென்று நினைத்துக் கொண்டு நேரே செல்வநாயகியின் தகப்பனாரிடம் போனான். செல்வநாயகியைத் தனக்குக் கல்யாணம் பண்ணித் தரமுடியுமா என்று அவரிடம் கேட்டான்.

"செல்வநாயகிக்குப் பரிசம் போட உறவிலே தம்புசாமின்னு ஒரு முறைக்காரன் இருக்கான். அவனும் அவளைக் கட்டித் தரக் கேட்டிருக்கான். ஆனால் எனக்கு உன் மேலேயும் விருப்பம் இருக்கு. ஊருக்கும் நாலுபேர் பேச்சுக்குமாகப் பயந்து நான் ஒரு சின்ன விஷயம் சொல்றேன். ஒரு ஆயிரம் ரூபாய் பரிசப் பணம் கொடுத்துட்டு அவளைக் கட்டிக் கொள். எனக்குப் பூர்ண சம்மதம். என் கையிலே பணமிருந்தால் இரண்டாம் பேர் அறியாமல் உன் கையிலே கொடுத்துக் காரியத்தை நடத்திக்கிட்டுப் போவேன்" என்றார் அவர்.

"ஒவ்வொரு சல்லியா எண்ணி உடைச்சு ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கிறதா! என்றைக்குக் கைகூடும் இந்தக் காரியம்!" ஒன்றும் புரியாத தங்கப்பன் ஐயனார் கோயிலைப் பார்க்க வேகமாக நடந்தான்.

* * *

**வி**மான தள வேலைகள் ஆரம்பித்து மூன்று மாசங்கள் ஆகிவிட்டன. இந்தச் சாக்கில் பணம் சம்பாதித்தவர்கள் ஏராளமான பேர். கல்லையும் மண்ணையும் காசாக்கிக் கொண்டிருந்தார்கள். பாறைகள் பொடிகளாகிக் கொண்டிருந்தன, அவர்களது உழைப்பினால். பூமி மண் எடுத்து, மண் எடுத்துப் பள்ளமாகிக் கொண்டிருந்தது.

தங்கப்பனுடைய போட்டியாளான தம்புசாமி 'சப்-கண்டிராக்ட்' எடுத்துச் சம்பாதித்துக் கொண்டிருந்தான். ஏற்கனவே பசை உள்ளவன் அவன். சின்ன மீனைப் போட்டுப் பெரிய மீன் பிடித்துக் கொண்டிருந்தான்.

பணக்காரர்கள் இப்படிப் பணம் சேர்த்துக் கொண்டிருக்கும்போது ஏழைகள் திடீரென்று அந்தப் பிராக்கியத்தில் நஷ்டமடைய ஆரம்பித்தனர். அல்லும் பகலும் அவர்கள் உழைத்து உடைத்த சல்லி திருட்டுப் போக ஆரம்பித்தது. திருட்டு என்றால், அத்தனை சல்லிகளையும் வாரி வண்டியில் போட்டுக் கொண்டு போகிற திருட்டல்ல. ஒரு தாக்கிலிருந்து பக்கத்துத் தாக்கிற்கு இரவுக்கு இரவே சல்லியை எடுத்து ஏறக்கட்டிவிட்டு, பகிரங்கமாகக் கண்டிராக்டருக்கோ சர்க்காருக்கோ அளந்துவிட்டுப் பணத்தைப் பெற்றுக்கொண்டு விடுவதுதான் இந்தத் திருட்டு!

தம்புசாமி பெரிய ஆசாமியாகப் போய் விட்டான். நூற்றுக்கணக்கான ஆட்கள் வைத்துச் சல்லி உடைத்துக்கொண்டிருந்தான். வெளியூர்களிலும் குன்றுகள் இருந்த இடங்களில் 'ஆள்கள் மூலம்' சல்லி உடைத்து லாரிகள் மூலம் 'சப்ளை' பண்ணி வந்தான்.

நாளாவட்டத்தில் இந்தத் திருட்டு அதிகமாகிக் கொண்டு வரவே எல்லாரும் விழித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள். திருட்டைக் கண்டு பிடித்து வழி வகை செய்யாதவரைக்கும் தங்க

னால் கல் உடைக்க இயலாது என்று நூற்றுக் கணக்கான ஆட்கள் வேலை நிறுத்தம் செய்யத் தொடங்கினர். உடனே போலீஸ் உதவி நாடப்பட்டு, அவர்கள் ரகசியமாகத் துப்பறி யத் தொடங்கினர். அந்தப் பக்கத்தில் கொஞ் சம் பிரபலமாயும், 'ஆள்கட்டு' உள்ளவனுயு மிருந்த தம்புசாமியின் உதவியைப் போலீ ஸார் நாடினர்.

தம்புசாமி தங்கப்பன் பேரில் தான் சந்தே கப் படுவதாயும், தான் காதலிக்கிற ஒரு பெண் ணுக்குப் பரிசப் பணம் சம்பாதிக்க வேகமான வழி கண்டு பிடித்து இந்தத் 'திருட்டு' மூலம் அவன் நிறையப் பணம் சம்பாதிக்கலா மென்று தான் நம்புவதாகவும் சொன்னான்.

* * *

ஐயனார் கோவில் பிரதேசத்தில் இருள் மூடிக் கிடந்தது. பரந்த ஏரி நீர்ப்பரப்பின் வெண்மையும் கம்பீரமாய் நின்ற மண் குதிரை யின் வெண்மையும் தவிர அங்கே எல்லாம் கரிமயம்! பந்தங்களைக் கொளுத்திக்கொண்டு நாலைந்து பேர் அந்தப் பக்கமாக மெதுவாய் நடந்து சென்றனர்.

கோவிலையும் அவர்கள் நெருங்கி விட்டார் கள். கோவிலுக்கும் குதிரைக்கும் நேர் மூக் கோண மூலையாய் இருந்த ஒரு பெரிய அரச மரத்தின் வேரில் தலையை வைத்துப் படுத்துக் கொண்டிருந்தான் தங்கப்பன். ஆள் படுத் திருப்பது தெரிந்தது அருகில் வந்தவர்களுக்கு.

தங்கப்பன் தானாகவே எழுந்து நின்றான்.

"யார் அது!" என்று ஒரு குரல் கேட்டது.

"ஏன் கேக்கறீங்க!" என்றான் தங்கப்பன்.

"நாங்கள் போலீஸ்காரங்க. தங்கப்பன் யாரு! நீதானா!"

"ஆமாம்."

"உன் மேலே திருட்டுக் குற்றம் ஏற்பட இருக்கிறது. சந்தேகத்தின் மேல் உன்னைக் கைது செய்ய வந்திருக்கிறோம்."

"சந்தேகம் எதுக்குங்க! திருடனைச் சந்தேக மில்லாமல் கைது பண்ண உங்களுக்கு உரிமை இல்லீங்களா!"

"திருடினதை யெல்லாம் ஒப்புக் கொள் கிறாயா!" என்று கேட்டார்கள்.

"ஓ! தாராளமாக ஒப்புக் கொள்ளுகிறேன்."

"இங்கே என்ன பண்ணிக் கொண்டிருக் கிறாய், நீ இந்த வேளையில்!"

"எனக்கு வேளை, பொழுது ஏது! இந்த இடம் என் இடம். எப்பவும் நான் இங்கே தான் இருப்பேன்."

"இங்கே யார் இருக்கிறது உனக்கு!"

"அப்பா, அம்மா எல்லாரும் இருக்காங்க. அவுங்களையும் நீங்க பார்க்கணும்னு அது முடி யாது. அவுங்களோடே எரிகாடு இது. நான் மாத்திரம் பார்க்க முடியும்!"

"என்னடா உளறுகிறே!"

"நான் என்ன உளறினா என்ன உங்களுக்கு! வந்த வேலையைப் பாருங்க. இந்தாங்க, கைது செய்யணும்னீங்களே" என்று தங்கப்பன் தனது இரண்டு கைகளையும் நீட்டினான்.

பந்தத்தின் வெளிச்சத்தில் ஒரு போலீஸ் காரர் அவன் கைகளில் விலங்கை மாட்டினார். பிறகு 'நட' என்று ஒரு குரல் கேட்டது.

"ஒரு நிமிஷம் இருங்க; இதோ இந்தக் குதிரை இருக்கே, இதுதான் எனக்கு இந்த

உலகத்திலே நான் கண்ணுலே பார்க்கிற சொர்க்கம். இது கிட்டே சொல்லிக்கிட்டு வந்துடறேன்'' என்று திரும்பினான். பைத்தியமோ என்று எண்ணிக் கொண்டே அவர்கள் அவனை அனுமதித்தார்கள்! தங்கப்பன் கண்ணீர் வடிய இரு கைகளாலும் அந்த ஐயனாரின் மண் குதிரையை—கம்பீரமாய் நின்ற அந்தக் குதிரையை அளவு கடந்த அன்பு உணர்ச்சியுடன் தடவிக் கொடுத்தான்.

பிறகு, "இங்கே ஒருத்தர் வாங்க, நான் சல்லி நிருடி வித்த பணத்தை நீங்க கைப்பற்ற வேணுமா!'' என்று அருகில் கூப்பிட்டான் போலீஸ்காரரை.

ஒருவர் அவன் அருகில் போனார். குதிரையின் விலாப் புறத்தில் பானமாய் வெடித்துத் தெரிந்த ஒரு இடத்தைக் காண்பித்து, "இதைத் திறந்து பாருங்க'' என்றான் தங்கப்பன்.

போலீஸ்காரர் அந்தப் பானத்தைப் பெயர்த்தெடுத்தார். குகை போல் குதிரையின் உள்புறம் தெரிந்தது. கைவிட்டு அங்கே இருந்ததை எடுக்கத் தொடங்கினார். எடுக்க எடுக்கக் கற்றை ரூபாய் நோட்டுக்கள் வெளியில் வந்தன. அவற்றின் நடுவே சிக்கிக் கசங்கிய ஒரு காகிதமும் இருந்தது. பந்தத்தின் ஒளியில் அதை ஒருவர் பிரித்துப் படித்தார்.

"அடுத்த அமாவாசையன்று பக்கத்தில் பக்கமிருக்கிற அனக்காத நாக்கு இருபதினிருந்தும் முடிந்தவரையில் வாரி நம்ம நாக்கில் போட்டுத் நாக்கைக் கட்டி விடவும். சர்க்காரில் 3-ந் தேதி அளக்கிறார்கள். நமக்கு அநாமதாயச் சேர்ந்திருக்கிற தொண்ணூறு நாக்கு கமிஷன் தொள்ளாயிரம் ரூபாயும் 4-ந் தேதி தருகிறேன். இப்போ பழியைத் தங்கப்பன் பேரிலே போட்டிருக்கிறேன். —தம்புசாமி''

தங்கப்பனை வியப்புடன் நிமிர்ந்து பார்த்தார் போலீஸ்காரர்.

"எங்கேயும் திருட்டெல்லாம் இப்படித்தான் நடக்குதுங்க. திருடன் தவறிப் போய் இந்தக் கடிதாசை இங்கே விட்டு விட்டான். இல்லாத போனால் அவன் எமகாதகத் திருடன்தான்'' என்றான் தங்கப்பன்.

உடனே அவன் விலங்கு கழற்றப்பட்டது. அப்போதே நேரே செல்வநாயகியைப் பார்க்கவும் அவன் தகப்பனாரைப் பார்க்கவும் விரும்பினான் தங்கப்பன். போலீஸார் அவனுடைய முன்னிலையிலேயே 'அசல் திருட'னைப் பிடிக்க எண்ணியதால் அவனைத் தம்முடன் வரும்படி கேட்டுக் கொண்டனர்.

தங்கப்பன் சம்மதித்தான். எல்லாரும் ஐயனார் கோயிலை விட்டுக் கிளம்பினர். தங்கப்பன் தன்னைச் சமயத்தில் காப்பாற்றிய தன் மண் குதிரையைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டு கிளம்பினான். இதற்கெல்லாம் சாட்சிபோல் விளங்கிய ஐயனார் அச்சமயம் புன்னகை புரிந்தார்!

## டி.கே.சி.யின் கடிதங்கள்

முகாம்: சென்னை
29—12—50

அருமை...............

இங்கே முக்கியமான நிகழ்ச்சி தேவாரப் பண் ஆராய்ச்சி மகாநாடுதான்.

சுமார் பதினைந்து ஓதுவாமூர்த்திகள் வந்திருந்தார்கள். ஒரு பண்ணை எடுத்துக் கொண்டு அதில் பல பதிகப் பாடல்களைத் தனித் தனியாக நாலைந்து பேர் ஒருவர் பின் ஒருவராய்ப் பாடினார்கள். ப்ரொபஸர் சாம்பமூர்த்தி தலைவர். தகுதியான முறையில் சங்கத்தை நடத்தினார்.

'பழம் பஞ்சரம்' என்ற பண்ணை இந்த விதமாக ஐந்து பேர் பாடினார்கள். எல்லாம் சங்கராபரணமாய் சுத்தமாய் இருந்தன. ஆகவே முடிவுகள்.

1. பழம் பஞ்சரம்—சங்கராபரணம்
2. சாதாரி—பந்துவராளி
3. புறநீர்மை—பௌளி (பூபாளம்)
4. மேகராகக்குறிஞ்சி—நீலாம்பரி
5. தக்க ராகம்—காம்போதி
6. பழந் தக்கராகம்—ஆரபி
7. காந்தாரம்—நவரோஜ்
8. அந்தாளிக் குறிஞ்சி—சாமா.

இவ்வளவும் ஒப்ப முடிந்த காரியமாய் நிறைவேற்றப்பட்டது.

ஆலமரத்தை. ஆயிரம் இரண்டாயிரம் வருஷமாக வளர்ந்து வானத்தை அளாவி நிற்கும் ஆலமரத்தை. "இது Banyan Tree தானே? ஆம். ஆங்கிலேயர்கள் நூறு இருநூறு வருஷங்களுக்கு முன்தான் கொண்டு வந்து நட்டிருக்க வேண்டும்'' என்று சொல்லலாம் அல்லவா. அப்படிச் சொல்லுவதைப் பார்த்து, "ஐயா, கிறிஸ்து பிறப்பதற்கு முன்னமேயே மரம் நின்றது'' என்றுதானே சொல்ல வேண்டும். இரண்டாயிரம் மூவாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்தே வந்த ராகங்களை இப்பால் இருநூறு முந்நூறு ஐந்நூறு வருஷங்களுக்கு முன் வந்த பெயர்கள் மறைக்கின்றன என்றால் விசித்திரந்தானே. ஒரு அறு பெயரைக் கொண்டு ஆலமரத்தில் ஒட்டி மரத்தையே மறைத்த கணக்குத்தான். மாஜிக்கையும் தர்க்கத்தையும் படித்து விட்டுத்தானே இப்படிப் பேசுகிறார்கள்? யூனிவேர்ஸிடி என்று ஒன்று இருக்கும்வரை இதுவும் பேசுவார்கள்; இதற்கு மேலும் பேசுவார்கள்.

ததாஸ்து!

[illegible]
டி.கே. சிதம்பரநாதன்



தெம்பூட்டுகிறது, மணமூட்டுகிறது!
மலரின் பனித்துளிகள் போல புதுமையையும், ரம்மிய மணத்தையும் உங்கள் மேனியில் பெய்கிறது எக்லா டால்க். குளித்தபின், உடையணியுமுன் உடம்பில் எக்லா டால்கம் பவுடரைப் பூசுங்கள்.
வெப்ப நாளிலும் குளுமை, இதம் அளிப்பது எக்லா. அது வியர்வையை உறிஞ்சும். மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட.
ECLAT
TALC POWDER
COLGATE
கால்கேட்
எக்லா
டால்க்பவுடர்
இந்தியா விரும்பும் நறுமண டால்க்
EC/G/I

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு: செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனம் 9 — கமாஸ் ராகம் — ஆதி தாளம் (1 களை)

### பல்லவி

இடது பாதம் தூக்கி ஆடும் நட
ராஜனடி பணிவையே நெஞ்சே (இடது)

### அனுபல்லவி

படவரவாட புலியத ளாட
பக்தர்கள் ஜயஜய எனவே
புலிப்பதஞ்சலி இரு கண்குளிர தில்லையிலே (இடது)

### சரணம்

திருவடிச் சிலம்புகள் கலீர் கலீரென
திருமுடி இள மதியொளி பளீர் பளீரென
திமிதக தரிகிடதோம் எனத் திருமால் மத்தளமதிர
சிவகாமி மணாளன் திருச்சிற்றம் பலந்தனிலே புன்னகையோ (இடதுபாதம்)

கமாஸ் ராகம் 28 மேளமான ஹரிகாம்போஜியில் பிறந்தது.

ஆரோஹணம்: ஸ ம க ம ப த நி ஸ்
அவரோஹணம்: ஸ் நி த ப ம க ரி ஸ

சதுச்ருதிரிஷபம், அந்தர காந்தாரம், சுத்தமத்யமம், சதுச்ருதிதைவதம், கைசிகி நிஷாதம்.

பாஷாங்கராகம் அன்யஸ்வரம் காகலிநிஷாதம். * இந்த அடையாளம் காகலி நிஷாதத்தைக் குறிக்கும்.

### பல்லவி—

1 ; ம நீ த நீ ப தா ப ம க மா | ப ம நீ தா ; | ; ; பா த நி ||

இ ட து பா தம் - தூ - - க்கி | ஆ - - டும் | ந ட -

ஸ்ா ; நீ தா பா ப ம பா தநிதா | பமமா ; ; ; | ; தாநிஸ்ரீ,த பாதநி ||

ரா ஜ ன டி ப - ணி வை - - | யே - - | நெ - - - ஞ் சே - -

2 தா,ப ம நீ த நீ ப நி த பம கா மா | பா த ஸ் நீ தா ; | ; ; நி ப தா ||

- - இ ட து பா த ம் - - தூ - - க்கி | ஆ - - - டும் | ந - ட

நி ஸ்ா , நீ தா பா ப ம பா தநிதா | ப ம மா ; ; ; | ரி ரி ஸ் ஸ் நி நி த த ||

ரா - ஜ ன டி ப - ணி வை - - | யே - - | நெ ஞ் - - - சே - - -

3 ப ம ம நீ த நீ ப நி த பம கா மா | கமபதநி*ஸ்ாஸ்ரீநித ; | ; ; த ப த நி ||

- - இ ட து பா த ம் - - தூ - . க்கி | ஆ - - - - - - - டும் | ந - ட -

ஸ் நி ரி ஸ் நீ தா பா ப ம பா தநிதா | பமமா ; ; ; | த ப மா பா ; ||

ரா - - - ஜ ன டி ப - ணி வை - - | யே - - - - - | - - - -

### அனுபல்லவி

1 ; ம நீ த நீ ஸ்ா ; ; ஸ்ா | ; ஸ் ஸ்ா ஸ் ஸ்ா | ஸ் த தஸ்ரீ நி த தா ||

ப ட வ ர வா ட | பு லி ய த - | ளா - - - - ட - -

2 ; ம நீ த நீ ஸ்ா , நி* ரி ஸ்ா | ; ஸ் ஸ்ா ஸ் ஸ்ா | ஸ்த ரிஸ்ஸ்ரீ நி த தா ||

ப ட வ ர வா - - ட | பு லி ய த | ளா - - - - - - ட - -

3 ; ம நீ த நீ ஸ்ா , நி* ரி ஸ்ா | ; நி* ஸ்ா நி* ஸ் ப | ப த நீரிஸ் ஸ்நி நித ||

ப ட வ ர வா - - ட | பு லி ய த - | ளா - - - - - - - ட -

4 தா ம நீ த நீ ஸ்ா , நி* ரி ஸ்ா | ; ஸ் ஸ் ம் க் கா | க்ரிப்ம்ம்கரி ஸ்ஸ்ா, ; ||

- ப ட வ ர வா - - ட | பு லி - ய த | ளா - - - - - - ட -

5 ; ஸ்நீ*ரிஸ்ா நிதாநீ, ஸ்ா , நி* ரி ஸ்ா | ஸ் ஸ் ம் க் கா,ம் | க்ரிப்ம்க்ாரி ஸ்ஸ்ா, ; ||

ப - ட - வ - ர வா - - ட | பு லி - ய த - | ளா - - - - - - - ட -


மூலிகைகளாலான இருமல் மருந்து
லிக்குப்ரூட்டா
ஜலதோஷம், இருமல் இவைகளை
சீக்கிரம் குணப்படுத்துகிறது
மூலிகைகளிலிருந்து பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட லிக்குப்ரூட்டா, இருமல், ஜலதோஷம், மார்சளி, கக்குவாய் இருமல், ஆஸ்த்மா, முதலிய வியாதிகளுக்கு ஏற்ற இயற்கை மருந்து. அதன் ஆறுதலளிக்கும் ஆவி சீக்கிரம் தொண்டையிலும், சுவாசக் கோசத்திலும் புகுந்து வீங்கி இருக்கும் சுவாசக் குழாய்களுக்கு உடனே குணமளிக்கிறது.
Liqufruta
Liqufruta
இலவசம்! நோயுற்றிருக்கும் தருவாயில் உபயோகமாயிருக்கும் இப்புத்தகத்தைப் பெறுங்கள்.
கூப்பனைப் பூர்த்திசெய்து அனுப்பவும் :-
டி. டி. கிருஷ்ணமாசாரி அண்டு கோ.,
தபால் பெட்டி நெ. 200, 331-333, தம்பு செட்டி தெரு, மதராஸ்
பெயர்...
விலாசம்...

# உதவிக்கு வந்தவன்




ராஜலக்ஷ்மி ராகவன்

அன்று காரியாலயத்திலிருந்து வீடு திரும்பும்போது ஜயராமனின் மனம் கவலையில் ஆழ்ந்திருந்தது. அவன் காஷியராக இருந்த பாங்கியில் அன்று கணக்கில் ஐந்நூறு ரூபாய் குறைந்து விட்டது.

தீபாவளி சமயம் ஆதலால் பணம் வாங்குவோரின் கூட்டம் அன்று அதிகம். யாருக்கோ அவசரத்தில் அதிகப் பணம் கொடுத்து விட்டான் அவன். அன்று மாலையே இந்தத் தவறை மானேஜிங் டைரக்டர் மூர்த்தி கண்டு பிடித்து விட்டார். அவர் உடனே ஜயராமனைக் கூப்பிட்டனுப்பி, "மிஸ்டர் ஜயராம், இது முதல் தடவையாதலால் இந்தத் தவறை மன்னிக்கிறேன். காதும் காதும் வைத்தாற்போல் ஒருவருக்கும் தெரியாமல் ஐந்நூறு ரூபாயைக் கொண்டு வந்து கணக்கில் சேர்த்து விடுங்கள். விஷயத்தை இதோடு அமுக்கி விடுவோம்!" என்றார்.

ஜயராமன் இரண்டு நாள் தவணை கேட்டு வாங்கிக் கொண்டான். இருந்தாலும் தவணைக்குள் ஐந்நூறு ரூபாய் எப்படிப் புரட்டிக் கொண்டு வந்து கட்டுவது என்று அவன் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது.

அவன் தெருக்கோடி திரும்பினதும் தன் வீட்டிலிருந்து தன் மைத்துனன் ராஜு இறங்கிப் போவதைக் கண்டான். அவனது நொந்த உள்ளத்தில் ஆத்திரம் விகவரூப மெடுத்து ஒரு வடிகாலைத் தேடியது. வேகமாக வீட்டினுள் நுழைந்தான். "லக்ஷ்மி, லக்ஷ்மி" என்று இரைந்து கூவினான். அவன் மனைவி லக்ஷ்மி பயந்து கொண்டே மெள்ள அவன் எதிரில் வந்து நின்றாள்.

ஜயராமன், "அந்த அற்பன் இங்கு எதற்கு வந்தான்? நான்தான் அவனை வர வேண்டா மென்று சொல்லியிருந்தேனே?" என்றான் கோபத்துடன்.

"அம்மா அவனிடம் கொஞ்சம் பொரிவிளங்காய் கொடுத்தனுப்பி யிருந்தாள்!" என்றாள் லக்ஷ்மி.

"அந்தத் தரித்திரம் பிடித்த பக்ஷணங்களை யெல்லாம் இந்த வீட்டுக்குள் கொண்டு வரக் கூடாது என்று சொல்லி யிருக்கிறேனே, இல்லையா? இங்கே கொண்டுவா, அதை!" என்று சீறி மேஜையின்மேல் ஒரு தூக்குப் பாத்திரத்தில் வைத்திருந்த பொரிவிளங்காய் உருண்டைகளை ஜன்னல் வழியே வெளியே வீசினான். அவை சாக்கடையில் உருண்டோடி விழுந்தன. லக்ஷ்மிக்குத் தன் இதயத்தையே பிடுங்கிச் சாக்கடையில் கொட்டுவது போலிருந்தது. பொரிவிளங்காய் உருண்டை ஏழைகளின் பக்ஷணம்தான். ஆயினும் அத்துடன் கலந்திருக்கும் தாயின் அன்பையும், சகோதரனின் வாஞ்சையையும் பற்றி ஜயராமனுக்கு என்ன தெரியும்? அவன் மனம்தான் வறட்டுக் கௌரவத்துக்கும் வீண் அந்தஸ்துக்கும் அடிமைப்பட்டுக் கிடந்ததே!

ஜயராமனின் மனைவி லக்ஷ்மி, அவன் தந்தைக்கு மூத்த பெண். அவளது விவாகத்துக்குப் பிறகு அவளுடைய தகப்பனாருக்குக் கை நொடித்து விட்டது. அவளுக்குப் பிறகு இருந்த மூன்று பெண்களையும் எப்படியோ கஷ்டப்பட்டுக் கலியாணம் செய்து கொடுத்தார். எனவே ஐந்தாவதாகப் பிறந்த ராஜுவை அவரால் அதிகம் படிக்கவைக்க முடியவில்லை. அவன் எட்டாவது வகுப்பில் படிக்கும்போது அவரது ஆயுளும் முடிந்துவிட்டது. அதனால் ராஜு அத்துடன் தன் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு ஒரு கடையில் கணக்கு எழுதும் வேலையை ஒப்புக் கொண்டான்.

ஜயராமனைச் சேர்ந்தவர்களெல்லோரும் பெரிய அந்தஸ்தில் இருந்தார்கள். அவன் அண்ணா அந்த ஊரிலேயே புகழ் பெற்ற டாக்டராக இருந்தான். அவனது தமக்கையும் அந்த ஊரிலேயே போலீஸ் அதிகாரி ஒருவருக்கு வாழ்க்கைப் பட்டிருந்தாள். எனவே ஒரு கடையில் கணக்கு எழுதும்



ராஜுவைத் தன் மைத்துனன் என்று கூறிக் கொள்ள ஜயராமனுக்கு அவமானமாக இருந்தது. அவனது மனோபாவத்தை அறிந்த ராஜுவும் கூடுமானவரையில் அவன் கண்களில் படாமலே இருப்பதற்கு முயன்றான்.

நல்ல செல்வாக்கிலிருக்கும் தமையனாவது, தமக்கையாவது தன்னுடைய இந்தக் கஷ்ட நிலையில் நிச்சயம் உதவுவார்கள் என்ற நம்பிக்கையுடன் ஜயராமன் முதலில் அண்ணாவின் வீட்டுக்குச் சென்றான். சிறிது நேரம் லோகாபிராமமாகப் பேசிக் கொண்டிருந்த பிறகு, தான் வந்த காரியத்தை மெள்ள வெளியிட்டான். அதற்கு அவன் அண்ணா, "அடடா! என் கையில் ஒரு பைசாக் கூட இல்லையே! நேற்றுத்தான் ஐந்நூறு ரூபாய்க்கு உன் மன்னி ஒரு புது மாதிரியான நெக்லேஸ் வேண்டுமென்று வாங்கிக் கொண்டாள். காஷியர் வேலையேற்று இன்னும் மூன்று மாதம் கூட ஆகவில்லை. அதற்குள் இவ்வளவு பெரிய தவறு? இனிமேலாவது ஜாக்கிரதையாக இரு. எனக்கு அவசரமாக ஒரு நோயாளியைப் பார்க்கப் போக வேண்டும்" என்று கூறிக் கொண்டே எழுந்து விட்டான்.

"இந்தப் புத்திமதி இங்கு யாருக்கு வேண்டும்?" என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டு தமக்கையின் வீட்டை நோக்கி நடந்தான் ஜயராமன்.

"வாடாப்பா, ஜயராமா! ஏது அபூர்வமாக இருக்கிறதே! லக்ஷ்மிக்கு ரொம்ப மசக்கை செய்கிறதோ? அவளைப் பார்க்க வேண்டுமென்றுதான் நேற்று ஜிலேபி செய்து வைத்தேன். தமக்கு மேலதிகாரி வந்திருக்கிறார் என்று உன் அத்திம்பேர் அத்தனையையும் எடுத்துக் கொண்டு போய் விட்டார்!" என்று அவன் தமக்கை தேனொழுகப் பேசி அவனை வரவேற்றாள்.

ஜயராமன் பூர்வபீடிகை ஏதுமின்றி, தான் வந்த காரியத்தை வெளியிட்டான்.

"நினைத்தவுடனே எங்கிருந்தடா பணம் வரும்? இருக்கிற பணத்தை யெல்லாம் போட்டுத் தீபாவளிக்கு ஜவுளி யெடுத்தாகி விட்டது. மன்னி வாங்கியிருக்கிறமாதிரி ஒரு நெக்லேஸ் வாங்க வேண்டுமென்று எனக்கு ஆசை. அதற்கே யாரிடமாவது தான் பணம் வாங்க வேண்டும் என்று உன் அத்திம்பேர் கூறி விட்டார். அதனால் நீ வேறு எங்கேயாவது புரட்டிக் கொள்!" என்று கூறினாள்.

ஜயராமன் மிகுந்த ஏமாற்றமடைந்தான். அண்ணா, அக்கா இருவரும் கூறியது பொய் என்பதை அவன் நன்கு அறிவான். அப்படி அவர்களிடம் பணம் இல்லாவிட்டாலும் அவர்கள் மனம் வைத்தால் வெகு சுலபமாக எங்கிருந்தாவது அவர்களால் ஐந்நூறு ரூபாய் வாங்கிக் கொடுக்க முடியும். அவர்களுக்கு இஷ்டமில்லாதபொழுது அவன் என்ன செய்ய முடியும்? இன்னும் இரண்டு நாட்களுக்குள் எப்படிப் பணம் சேகரிப்பது என்று அவன் மனம் தவியாகத் தவித்தது. மூன்று மாதங்களுக்கு முன் காஷியர் பதவி கிட்டியபொழுது செக்யூரிட்டி கட்டுவதற்காக லக்ஷ்மியின் கழுத்திலிருந்த ஒரே சங்கிலியையும் விற்று விட்டான்.

நிமிஷப் பொழுதில் இரண்டு நாட்களும் மறைந்து விட்டன. மூன்றாவது நாள் அவன் பாங்குக்குப் போனதும் மானேஜிங் டைரக்டர் அவனைக் கூப்பிட்டு அனுப்பினார். ஜயராமனுக்கு உடம்பெல்லாம் குப்பென்று வியர்த்தது. பலிக்களத்துக்குச் செல்லும் ஆட்டைப் போல் நடுங்கிக் கொண்டே மானேஜிங் டைரக்டரின் அறைக்குள் நுழைந்தான்.

மானேஜிங் டைரக்டர் அவனைக் கண்டதும், "இந்தாருங்கள், மிஸ்டர் ஜெயராமன்! உங்கள் மைத்துனன் ராஜு சற்று முன்பு தான் வந்து ஐந்நூறு ரூபாயையும் கொடுத்து விட்டுச் சென்றான். இதைக் கணக்கில் சேர்த்துச் சரி செய்து விடுங்கள். இனி இவ்விதம் நேராமல் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று கூறி ஐந்நூறு ரூபாய் நோட்டுகளை அவனிடம் கொடுத்தார்.

ஜயராமன் திகைப்பினால் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் பணத்தைப் பெற்றுக் கொண்டு தன்னிடத்துக்குச் சென்றான். பணக்காரர்கள் என்ற வீண் அந்தஸ்துக்கு மதிப்புக் கொடுத்துத் தான் போற்றிவந்த தன் தமையனும் தமக்கையும் கைவிட்ட இந்தத் தருணத்தில் ஏழை என்று தன்னால் அவமதிக்கப்பட்ட தன் மைத்துனன்



அக்டோபர் மாதம் 26-ந் தேதி 'பாரத் பைன் ஆர்ட்ஸ்' அதாவது "பாரத கலைக் கழகம்" என்ற பெயருடன் புதிய சங்கீத சபை ஒன்றை ஆரம்பித்திருக்கின்றனர். கலையையும் கலைஞரையும் ஆதரிக்கும் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த ராமநாதபுரம் ராஜா மராமத்திலாகா மந்திரி திரு ராஜா ஷண்முக ராஜேசுவர சேதுபதி அவர்கள் இந்தப் புதிய சங்கீத சபையை ஆரம்பித்து வைத்தார். சங்கத்தலைவர் திருப்புகழ் மணி திரு டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் எல்லோரையும் வரவேற்றார். சென்னை சட்டசபையின் சபாநாயகர் திரு கோபால மேனன் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். சிறந்த சங்கீத ரஸிகர்களையும், பிரமுகர்களையும், பத்திரிகையாளரையும் கொண்ட குழுவினரால் சரஸ்வதி பூஜை அன்று ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கழகம் மேலும் மேலும் ஓங்கி வளருவதற்கு ரஸிகப் பெருமக்கள் துணைபுரிவார்கள். 'வீடுதோறும் கலையின் விளக்கம்' என்ற கவியரசர் பாரதியின் கனவை நனவாக்கும் வகையில் பாரத கலைக் கழகம் சிறந்த முறையில் தொண்டாற்றும் என்று எதிர்பார்க்கிறோம்.

தானாகவே வலிய வந்து உதவியிருக்கும் பெருந் தன்மையை எண்ணிப் பார்க்கும் போது, அவன் மனம் அவமானத்தால் குன்றியது. ஏழையும் படிப்பற்றவனுமான ராஜுவின் விசால இதயம், டாக்டர் தொழில் நடத்திப் பணத்தை வாரிக் குவிக்கும் தன் அண்ணனுக்கு இல்லையே என்பதை நினைத்தபோது, ராஜு எத்தகைய உத்தமன் என்பது புலனாகியது.

அன்று மாலை அவன் வீட்டினுள் நுழைந்ததும் லக்ஷ்மியுடன் பேசிக் கொண்டிருந்த ராஜு அவனைக் கண்டதும் அவசரமாக வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தான். ஜயராமன் ஒரே எட்டில் அவன் வழியை மறித்துக் கொண்டு அவனைப் போகவிடாமல் தடுத்தான்.

ராஜுவுக்கு ஒரே வியப்பாக இருந்தது. தன்னைக் கண்டாலே கரித்துக் கொட்டும் ஜயராமனின் திடீர் மாறுதலுக்குக் காரணம் விளங்கவில்லை.

ஜயராமன் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு உணர்ச்சிப் பெருக்கினால் தழுதழுத்த குரலில், "ராஜு! என்னை மன்னித்துவிடு. இத்தனை காலமாகப் போலிக் கௌரவத்தினால் கண்ணிழந்து கானல் நீருக்கும், தூய நீரோடைக்கும் வித்தியாசம் தெரியாமல் இருந்து விட்டேன். இன்று உன்னுடைய பெருந்தன்மையான செய்கையே என் கண்களைத் திறந்தது. எனக்குப் பணம் தேவையாக இருக்கிறது என்பதை நீ எப்படி அறிந்தாய்?" என்று கேட்டான்.

"அத்திம்பேரே! இது என்ன பிரமாதம்? உங்களுடைய கஷ்ட நஷ்டங்கள் எங்கள் லக்ஷ்மியின் கஷ்ட நஷ்டங்களல்லவா? உங்கள் பாங்கியிலுள்ள வெங்கடராமன் எனக்கு அடுத்த வீட்டில் இருக்கிறான். அவன் மூலம் எனக்கு விஷயம் தெரிந்தது!" என்றான்.

"அது சரி, உனக்குத் திடீரென்று ஐந்நூறு ரூபாய் எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டான் ஜயராமன்.

ராஜு அமைதியாக, "என்னிடத்தில் ஏது அவ்வளவு ரொக்கப் பணம்? நான் கடையில் வேலைக்கு அமரும்போது செக்யூரிடியாக ஐந்நூறு ரூபாய் கட்டியிருந்தேன். நேற்று அந்த வேலையை ராஜிநாமா செய்து விட்டேன். அப்பொழுது திரும்பப் பெற்ற செக்யூரிடி பணம்தான் அது!" என்றான்.

ஜயராமன், லக்ஷ்மி இருவரும் ஏக காலத்தில் "ஆ. வேலையை ராஜிநாமா செய்து விட்டாயா?" என்று கேட்டனர். வியப்பில் அவர்கள் இருவரது விழிகளும் விரிந்தன.

ராஜு நிதானமாக, "அதனால் என்ன, அத்திம்பேரே! எனக்கு இந்தக் கடை இல்லாவிட்டால் இன்னொரு கடையில் வேலை கிடைத்துவிடப் போகிறது! ஆனால் உங்களுக்கு வேலை போய்விட்டால் உங்கள் அந்தஸ்துக்குத் தகுந்தபடி வேறு பெரிய வேலை கிடைப்பது கஷ்டமல்லவா? அதனால் தான்..." என்றான்.

ஜயராமனுக்கு ராஜுவை எப்படிப் பாராட்டுவது என்றே புரியவில்லை. அவனைப் பார்த்தவாறே வாய் அடைத்துப் போய்ப் பேசத் தோன்றாமல் நின்றான்.




## 18. துப்பறியும் சிங்கம்!

மதுர நாயகத்தின் அத்தான் வேதநாயகம் திருச்சியிலே ஒரு பெரிய மருந்துக் கடை வைத்திருக்கிறார். காவேரிக் கரையிலே அவருக்குக் கொஞ்சம் நில புலன்களும் இருக்கின்றன. அவரும், அவர் மனைவி கல்யாணி அம்மாளும், மகன் ஆனந்தனும் வசதியாக வாழ்ந்து வருகிறார்கள்.

அன்று வேதநாயகம் வீட்டுக்கு வந்ததும், "இதோ உங்களுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. கனமாக இருக்கிறதே!" என்று கூறி அவர் மனைவி கொடுத்தாள்.

"கடிதமா! வீட்டு விலாசத்துக்கு யார் எழுதுகிறார்கள்?" என்று கேட்டுக் கொண்டே அவர் கடிதத்தைக் கையிலே வாங்கினார். அவருக்கு வரும் எல்லாக் கடிதங்களுமே மருந்துக் கடை விலாசத்துக்குத்தான் வரும். வீட்டு விலாசத்துக்கு மிகவும் அபூர்வமாகவே யாரும் எழுதுவார்கள். மருந்துக் கடையில் வேதநாயகம் மிகவும் மும்முரமாக வியாபாரம் செய்து கொண்டிருப்பார். தினசரி கடிதங்களும் ஏராளமாக வரும். அதனால், கடிதம் முழுவதையும் பொறுமையாகப் படிப்பாரோ, படிக்க மாட்டாரோ என்ற சந்தேகத்தில்தான் வீட்டு விலாசத்துக்கே மதுர நாயகம் எழுதினார். அத்துடன், வீட்டு விலாசத்துக்குக் கடிதம் எழுதினால், அக்காளுக்கும் ஒரு மாதிரி விஷயம் தெரியும்; அவளுடைய தூண்டுதலும் இருக்குமல்லவா?

வேதநாயகம் உறைக்குள் இருந்த எட்டுப் பக்கங்களையும் மிகவும் பொறுமையுடன் படித்தார். படித்து முடித்ததும், "இந்த மதுர நாயகத்துக்கு வேறு வேலை இல்லை" என்று அலட்சியமாகக் கூறிக் கொண்டே கடிதத்தைத் தொப்பென்று கீழே போட்டார்.

அப்போது, அங்கேயிருந்த கல்யாணி அம்மாள், "என்ன சொல்லுகிறீர்கள்? என் தம்பி அந்தக் கடிதத்தில் என்னதான் எழுதியிருக்கிறான்?" என்று அவரிடம் கேட்டாள்.

"எவனோ ஓர் அனாதைப் பையனாம். அவன் நாடக சபாவிலே வேலை பார்த்துக் கொண்டிருந்தானாம். அவனைத் திருடன் என்று நினைத்து வேலையிலிருந்து விலக்கிவிட்டார்களாம். ஆனால், அவன் திருடன் இல்லை என்பது இப்போது நிச்சயமாகி விட்டதாம். அவன் மிகவும் நல்லவனாம். அவன் இப்போது இந்த ஊரில்தான் இருக்கிறானாம். இங்கிருந்து உன் தம்பிக்குக் கடிதம் போட்டிருக்கிறானாம். ஆனால், கடிதத்திலே விலாசம் இல்லையாம். எங்கேனும் வேலையில் சேர்ந்திருப்பதாகவும் தெரியவில்லையாம். கடைத்தெரு, மலைக்கோட்டை, ரயில்வே ஜங்ஷன், ஸ்ரீரங்கம், திருவானைக்கா, சந்து பொந்து எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்து, அவனை நான் கண்டு பிடிக்க வேண்டுமாம். இந்த வேலைக்கு ஆகும் செலவைத் தருவதாக நாடகசபா முதலாளி சொல்லியிருக்கிறாராம். உன் தம்பிக்கும், அவன் முதலாளிக்கும்தான் வேறு வேலை இல்லை. எனக்குமா வேலை இல்லை? அந்த அனாதையைத் தேடிக் கண்டு பிடிக்க நான்தான் அவனுக்கு அகப்பட்டேனாக்கும்!" என்று அலுப்புடன் கூறினார் வேதநாயகம்.

"ஏன் உங்களுக்கு இவ்வளவு கோபம்? இந்த ஊரில்தானே நாம் இருக்கிறோம்

என்று நினைத்து அவன் தங்களுக்கு எழுதியிருக்கிறான்'' என்றாள் கல்யாணி.

''இந்த ஊரில் இருக்கிறதனாலே, அவன் சொல்லுகிறபடி யெல்லாம் கேட்க வேண்டுமா? நாளைக்கு, 'என் சிநேகிதன் வீட்டு எருமைக் கன்றுக் குட்டி காணாமல் போய்விட்டது, உடனே தேடிக் கண்டு பிடியுங்கள்' என்று எழுதுவான். உடனே நான் கயிறும் தடியுமாகப் புறப்பட்டு இந்த ஊரை யெல்லாம் சுற்றிப் பார்க்க வேண்டும். அப்படித்தானே!''

''ஏன் இப்படித் தவறாக எடுத்துக் கொள்ளுகிறீர்கள்? மதுரநாயகத்துக்கு ரொம்ப இளகிய மனசு. ஒரு நல்ல பையனுக்கு உதவி செய்த புண்ணியமாவது நமக்குக் கிடைக்குமே!'' என்றாள் கல்யாணி அம்மாள்.

அப்போது அங்கே நடந்ததை யெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த ஆனந்தன், ''அப்பா, நீங்கள் ஒன்றும் சிரமப் பட வேண்டாம். அந்தக் கடிதத்தை என்னிடம் கொடுங்கள். இன்னும் ஒரு வாரத்திலே அந்தப் பையன் எங்கிருந்தாலும் கண்டுபிடித்து விடுகிறேன். இது என் பொறுப்பு. ......அப்பா! மாமா ரொம்ப நல்லவர், அப்பா. அவர் நல்ல சமயத்திலே வந்திருக்காத போனால், இந்நேரம் நான் இங்கேயா இருப்பேன்? பட்டணத்து ஜெயிலிலே பத்திரமாக வல்லவா இருப்பேன்! அவர் செய்த உதவிக்கு, நான் இதுகூடச் செய்யாமல் இருக்கலாமா?'' என்று கூறி அந்தக் கடிதத்தை எடுத்து ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகப் படித்துப் பார்த்தான். பிறகு சட்டைப் பையில் இருந்த ஒரு சிறு நோட்டுப் புத்தகத்தை எடுத்து அதில் சில அடையாளங்களைக் குறித்துக் கொண்டான். பிறகு, ''அம்மா, கவலைப்படாதே! அப்பா, சிரமப்பட வேண்டாம். அந்த ரமணி எங்கேயிருந்தாலும் நான் விடப் போவதில்லை. அவனைத் தேடிக் கண்டு பிடித்து விடுவேன்'' என்று தன்னுடைய நெஞ்சிலே அடித்துக் கூறினான்.

''அடேயப்பா! இவர் பெரிய துப்பறியும் சிங்கம்......! படிப்பைத் தவிர வேறே எது சொன்னாலும், தயார்! இப்படிப்பட்ட பிள்ளையாண்டான் இருக்கும்போது நமக்கு என்ன கவலை!'' என்று கேலியாகக் கூறினார் வேதநாயகம்.

* * *

''டிக்கி, டிக்கி!''

''என்ன டிக்கி?''

''பள்ளிக்கூடம் கள வடிக்கி!''

— இப்படி ஆனந்தன் ஆரம்ப வகுப்புக்களில் படிக்கும்போதே குழந்தைகளெல்லாம் அவனைக் கேலி செய்வார்கள். அப்போதுதான் பள்ளிக் கூடத்துக்குக் களவடித்தான் என்றால், இப்போதாவது ஒழுங்காகப் போகிறானா! அதுதான்

# சிவப்பு

புத்தனேரி ரா. சுப்பிரமணியன்

காலையும் மாலையும் வான்வெளியில்—என்னைக்
கண்டு மயங்கிடு வான் கவிஞன்;
சோலைக் கிளியதன் மூக்கினிலே—நன்கு
தோய்ந்திருப்பேன், எழில் வாய்ந்திருப்பேன்.

கோவைப் பழத்திலென் வண்ணத்தினைக்—கண்டு
கொத்தி மகிழ்ந்திடும் தத்தைகளும்;
பூவையின் மெல்லிதழ் என்னழகைக்—கொண்டு
போதை வழங்கிடும் காதலர்க்கே!

எல்லை கடந்துநீ ராடிடினும்—பல
இரவுகள் நித்திரை ஓடிடினும்
தொல்லை தரும்கோபம் பொங்கிடினும்—கண்ணில்
தோன்றுவேன், செவ்வரி போன்றிருப்பேன்!

வெற்றிலை, பாக்குடன் சுண்ணாம்பும்—சேர
விந்தையாய் நான்முந்தி வந்திடுவேன்;
நெற்றியில் குங்குமப் பொட்டழகில்—நின்று
நேர்த்தியாய் மங்களம் சேர்த்திடுவேன்!

தொட்டு முகர்ந்திடும் ரோஜாவும்—என்னைச்
சூடி மகிழ்ந்திடக் காணீரோ?
தொட்டதும் சுட்டிடும் தீக்கொழுந்தும்—என்னால்
ஜோதிநிறம் என்ற கியாதி பெறும்!

ஆசையும் பாசமும் ரத்தத்திலே—பொங்கும்
அற்புதம் என்நிறத் திட்பமன்றோ?
ஈசன் படைப்பினில் எல்லோரும்—சமம்
என்று கலப்பதும் ரத்தமன்றோ?

கவிப்புலன் கொண்டென்னைக் கண்டுணர்ந்த—
கம்பனுங்கூட மகிழ்வானே! [அந்தச்
சிவப்பு நிறம்என்ப தென்பெயரே!—வாழ்வில்
செம்மை அளிப்பதே என்குணமே!

இல்லை. ஒரு நாள் விட்டு ஒரு நாள் 'மட்டம்' போட்டுக் கொண்டே தான் இருக்கிறான்.

ஆனந்தன், அவனுடைய அப்பா அம்மாவுக்கு ஒரே பிள்ளை. ஆகையால், அவனை எப்படியாவது நன்றாகப் படிக்க வைத்து ஒரு டாக்டராக்கி விடவேண்டும் என்று அவன் அப்பா ஆசைப்பட்டார். ஆனால், ஆனந்தனுக்கு அந்த ஆசையெல்லாம் இல்லை. வேளா வேளைக்கு வீட்டிலே சாப்பிட வேண்டியது; ஒரு சினிமா தவறாமல் பார்க்க வேண்டியது; நண்பர்களுடன் ஊர் சுற்ற வேண்டியது; ஓய்ந்த நேரத்தில் பள்ளிக்கூடத்துக்கும் போய் வர வேண்டியது! இப்படிப்பட்ட அழகான பிள்ளைக்கு எப்படிப் படிப்பு வரும்?

ஆனந்தனைப் பள்ளிக் கூடத்தில் சேர்த்து விட்டவுடனே அவனுக்கு வீட்டுப் பாடம் சொல்லிக் கொடுக்க ஒரு வாத்தியாரை அவன் அப்பா ஏற்பாடு செய்து விட்டார்! ஆனால், அந்த வாத்தியார் எப்படிச் சொல்லிக் கொடுத்தாலும் எத்தனை தடவை சொல்லிக் கொடுத்தாலும் அவன் மூளையில் ஏறுவதே இல்லை! அவனுக்குப் படிப்பில் கவனம் இருந்தால்தானே? அலமாரியில் இருக்கும் பட்சணத்தையும் பழத்தையும் நினைத்துக் கொண்டேயிருப்பான்.

சிறு பையனாக இருந்தபோது அவன் பாடம் படித்த அழகே ஒரு தனி அழகு தான். "ஆனந்தா, கிழமைகள் எத்தனை? வரிசையாகச் சொல்!" என்பார் வீட்டு வாத்தியார்.

ஆனந்தன் வாயைத் திறக்கமாட்டான். ஆனால், கண்களை மட்டும் அகலத் திறந்து விழித்துப் பார்ப்பான்! "என்ன ஆனந்தா, இது தெரியாதா! ஞாயிறு, திங்கள்..." என்று அடி எடுத்துக் கொடுப்பார் வாத்தியார். அப்போது தான் ஆனந்தனுக்குக் கிழமைகள் என்றால் என்ன என்பது புரியும். உடனே, "ஓ! அதுவா சார். இதோ சொல்லுகிறேன்" என்று கூறிவிட்டு, "ஞாயிறு, திங்கள், செவ்வாய்" என்பான். உடனே செவ்வாயிலிருந்து ஒரே தாவாக வெள்ளிக்குத் தாவி விடுவான்! "வெள்ளி, சனி" என்று கூறி அத்துடன் நிறுத்த மாட்டான். "ஆக ஒரு வாரத்துக்குக் கிழமைகள் ஏழு" என்று அழுத்தந் திருத்தமாகக் கூறியே முடிப்பான். அவன் சொன்ன கிழமைகளோ ஐந்துதான். ஆனாலும், "ஆக ஒரு வாரத்துக்குக் கிழமைகள் ஏழு" என்பதை மறக்காமல் கூறியே முடிப்பான்!

ஆனந்தன் இரண்டாவது வகுப்பில் படிக்கும்போது "எட்டும் நான்கும் எத்தனை?" என்று கேட்டால், "ஒன்பது, பத்து..." என்று ஆரம்பித்து இருபது வரை கூடப் போய் விடுவான். சில சமயம் முப்பதையும் தாண்டி விடுவான்!

வீட்டு வாத்தியார் எப்படி எப்படியெல்லாமோ கூட்டல் கணக்கைச் சொல்லிக் கொடுத்துப் பார்த்தார். ஆனந்தன் மூளையில் ஏறினால்தானே! ஆனாலும், பையன் மண்டு என்பதை அவன் அப்பா ஒப்புக் கொள்வாரா? வாத்தியாருக்குச் சொல்லிக் கொடுக்கத் தெரியவில்லை என்றுதானே சொல்லுவார்? ஆகையால், அந்த வாத்தியார் ஒரு தந்திரம் செய்தார். அதற்கு ஏற்றபடி அவனைப் பழக்கியும் வைத்திருந்தார். அது என்ன தந்திரம்?

(தொடரும்)

## நடன அரங்கேற்றம்



ராகமும் தாளமும் பாவமும் நன்கு இயைந்து வெளிப்படுவதே பரதநாட்டியம். அத்தகைய உயர்தர அம்சங்களுடன் குமாரி விஜயலக்ஷ்மியின் நடன அரங்கேற்றம், மயிலாப்பூர், சுந்தரேசுவரர் ஹாலில் செப்டம்பர் மாத இறுதியில் சிறப்பாக நடந்தேறியது. நடனக் கலைக்கு ஏற்ற வயது, தோற்றம், திறமை யாவும் ஒருங்கே அமையப் பெற்ற குமாரி விஜயலக்ஷ்மி அன்று அடவு ஜதிகள், ஜதிஸ்வரம், கல்யாணி வர்ணம், சங்கராபரண ராகத்தில் தில்லானா முதலியவைகளை யெல்லாம் கலையழகு குன்றாமல் தம் நடனத்தில் காட்டினார். அவரது அபிநயங்களும் ஒளி பெற்றுத் திகழ்ந்தன. சிறப்பான முறையில் வழுவூர் ராமையாப் பிள்ளை அவர்களிடம் பயின்றுள்ள இந்த இளம் கலைஞருக்குக் கலையன்பர்கள் வாழ்த்துக் கூறினார்கள். * * *






## 31. மாப்பிள்ளை அழைப்பு

அப்புலிங்கம் பகேரான் வீட்டுக்குச் சென்றபோது அங்கே நாகரத்தினம் உட்கார்ந்திருந்ததைப் பார்த்துத் திகைத்துப் போனான் அல்லவா? அந்தத் திகைப்பு அதிகமாகும் வகையில் இருந்தது பகேரானுடைய முகக் குறிப்பு.

'ஏதோ விஷமம் நடந்திருக்கிறது' என்று தீர்மானித்தான் அப்புலிங்கம்.

"பகேரான், உன்னோடு நான் தனியாகச் சில விஷயங்கள் பேச வேண்டும்" என்று ஒரே போடாகப் போட்டான் அப்பு.

நாகரத்தினம் 'டக்' என்று நாற்காலியிலிருந்து எழுந்தான்.

"மிஸ்டர் அப்புலிங்கம்! நான் இங்கே இருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்று நேராக ஒரே வாக்கியத்தில் சொல்லி விடுங்களேன்! ஏன் இப்படிச் சுற்றி வளைக்கிறீர்கள் — நானும் வந்த காரியம் முடிந்து புறப்படுவதற்குத் தயாராகி விட்டேன்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே அப்புலிங்கத்தின் பதிலுக்குக் காத்திராமல், "பகேரான்! நான் புறப்படுகிறேன். உன்னை மறுபடியும் இரண்டு நாட்களில் வந்து பார்க்கிறேன்!" என்று சொல்லி விட்டுக் கிளம்பினான் நாகரத்தினம்.

அப்புலிங்கத்தின் மனத்தில் கோபமும் வேதனையும் கூத்தாடின. மனத்தைச் சிதற விடாமல் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டான்.

கொஞ்ச நேரம் மௌனம் நிலவியது. பிறகு பகேரானே பேச ஆரம்பித்தான்:

"அப்பு! நீங்கள் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளக் கூடாது. நான் எக்கச் சக்கமாக ஒரு விபரீதத்தில் மாட்டிக் கொண்டு விட்டேன்!"

"என்ன சமாசாரம்?" என்று ஆவலோடு கேட்டான் அப்பு.

"கொஞ்ச நேரத்துக்கு முன்பு நாகரத்தினம் ஒரே கலவரமாக இங்கே வந்தான். வந்து என்னிடம் ஒரு ஆணை வாங்கிக்

கொண்டு விட்டான்!" என்றான் பகோரான். இப்படிச் சொல்லும்போது தன்னைப் பற்றியே தான் வெட்கப்படுவதாக அவனுடைய முகக் குறிப்பில் தெரிந்தது.

"அப்படி என்ன ஆணை வாங்கிக்கொண்டு விட்டான் அந்த சத்தியசீலன்?" என்று கேட்டான் அப்பு.

பகோரான் சொன்ன விவரம் ஆச்சரியமாக இருந்தது. அது வருமாறு:

அன்று மாலையில் நாகரத்தினம் ஒரே கலவரத்தோடு பகோரான் வீட்டுக்கு வந்தான். அவனுடைய முகத்தின் கலவரத்தைப் பார்த்துவிட்டுத் திகைத்துப் போனவனாகப் பகோரான் கேட்டான்: "என்ன, நாகு! என்ன விஷயம்?"

"இப்படியெல்லாம் சொன்னால் போதாது. நிச்சயம் உதவி செய்கிறேன் என்று சொல்லு!" என்றான் நாகு.

"நிச்சயம் உதவுகிறேன். என் குருநாதர் பேரில் ஆணையாகச் சொல்கிறேன் —" என்றான் பகோரான்.

"அப்படிச் சொன்னாலும் போதாது. அல்லாஹ் பேரில் ஆணையாகச் சொல்லு" என்று கேட்டான் நாகரத்தினம்.

அப்படியே ஆணையிட்டுச் சொன்னான் பகோரான்.

இந்த ஆணையை வாங்கிக் கொண்ட பிறகு, நாகரத்தினம் விஷயங்களைச் சொன்னான். பகோரானுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"நாகு! இப்படிச் சொல்லுகிறேன் என்று வருத்தப்படாதே. நீ ஒரு சிநேகிதனை இந்த மாதிரி ஏமாற்றக் கூடாது" என்றான் பகோரான்.

"நான் என்ன ஏமாற்றினேன் உன்னை?" என்றான் நாகு.



"ஒரு பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டு விட்டேன். இனி இதிலிருந்து மீள வேண்டுமானால் நீதான் உதவி செய்ய வேண்டும்!"

"சரி! கவலைப்படாதே. விஷயத்தைச் சொல்லு!" என்றான் பகோரான்.

"என்னுடைய குருவுக்கே விரோதமாக நிற்கும்படி சொல்லுகிறாயே!" என்று கேட்டான் பகோரான்.

"குரு தவறான மனிதர்களுக்கு உதவி செய்ய நிற்கிறார். அதனால்தான் உன்னை—"

"தம்பீ நாகு! உனக்கு எல்லாமே தவறாக வாகத்தான் படும். அந்த முறையில்—"

"அப்படியில்லை பகேரான். நீ இந்த மாதிரிச் சாக்குப் போக்குச் சொல்லக் கூடாது என்றுதான் முதலிலேயே உன்னிடம் ஆணையிட்டுக் கேட்டேன்—"

"நாகு! ஆணையின்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் அந்த அல்லாஹ்கூட குருவுக்கு விரோதமாக ஒரு ஆணையை நிறைவேற்ற வேண்டும் என்று எதிர்பார்க்க மாட்டான்! தெரிந்ததா?" என்றான் பகேரான்.

நாகரத்தினத்துக்குக் கண் சிவந்தது. ஆனாலும் பகேரானிடம் கோபப்பட்டுப்



பயன் இல்லை என்றும் அவனுக்கு நன்றாகத் தெரியும். கேட்டான்:

"பகேரான்! இப்படியெல்லாம் சுற்றி வளைக்காதே! ஒரே பேச்சில் சொல்லி விடு. நீ எனக்கு உதவி செய்யத் தயாரா இல்லையா? ஆணையோ ஆணையில்லையோ அதைப் பற்றி உனக்கே நம்பிக்கை இல்லாதிருக்கும்போது நான் ஏன் அந்த ஆணைக்கு முக்கியம் கொடுக்க வேண்டும்—"

"நாகு! அல்லாஹ் ஆணையை மீறுவது என்பது இந்த ஜன்மத்தில் இல்லை. ஆனால் அல்லாஹ் தன்னையும்விட ஒரு சீடன் குருவை மதிக்கிறான் என்று கண்டால், அந்தச் சீடனை ஆசிர்வதிப்பானே தவிர, தண்டிக்க மாட்டான். அதுதான் எங்கள் வேதம். தெரியுமா உனக்கு?"

இப்படிச் சொல்லும் போது பகேரானுக்கு உடம்பு துடித்தது. நாகரத்தினம் என்ன பேசுவது என்று திகைத்தான்.

"நாகு! உன்னிடம் போய் குருக் ஆணையும் வேதத்தையும் பேசுவதில் அர்த்தம் இல்லை. எப்படியோ எக்கச் சக்கமாக அகப்பட்டுக் கொண்டு விட்டேன், உன்னுடைய வார்த்தையில். அதனால் ஒரு உதவி உனக்கு நான் செய்ய முடியும். என்னுடைய ஆணையை நிறைவேற்றியதாகவும் இருக்கும். குருவுக்குத் துரோகம் செய்யாததாகவும் இருக்கும்!" என்றான் பகேரான்.

"அது என்ன? அதையாவது சொல்லேன்!" என்றான் நாகரத்தினம்.

"இனிமேல் இந்த ரவீந்திரன்-சந்திரிகா விஷயமாக நான் எந்தக் கட்சியிலும் தலையிடாமல் இருந்து விடுகிறேன். அதுவே உனக்கு நான் செய்கிற பெரிய உதவியாக இருக்கும்!" என்றான் பகேரான்.

"அப்படியென்றால்?"

"இது சம்பந்தமாக நான் தலையிடுவதற்கில்லை என்று உஸ்தாதிடமும் சொல்லி விடுகிறேன். வேறு யார் வந்து உனக்கு எதிராக என்னைச் சண்டையிடும்படி சொன்னாலும் நான் உதவி செய்யாமல் இருந்து விடுகிறேன். ஆனால் ஒன்று: காரணத்தை யாராவது விவரமாகக் கேட்டால் உண்மையைச் சொல்லி விடுவேன்!" என்றான் பகேரான்.

நாகரத்தினம் பதில்பேசவில்லை. மனத்துக்குள் யோசித்துப் பார்த்தான். திருச்சிராப் பள்ளியில் உஸ்தாதுக்கு அடுத்தபடி பகேரான்தான் பெரிய சண்டியன். இவன் யாருடைய கட்சியிலும் சேராமல் விலகி இருந்து விட்டால், அதுவே 'பெரிய உதவி என்று அவனுக்குப் பட்டது. உஸ்தாதின் வலது கையை ஒடித்தது போல மனத்துக்குள்ளே ஒரு திருப்தி. இடது கை என்றுசொல்லக் கூடியவன் மஜீத் ஒருவன்தான். இனி அவனைப் போய்ச் சரிக்கட்டி விட்டால் போதும். இப்படி நினைத்துக் கொண்டவனாக நாகரத்தினம் சொன்னான்:

"பகேரான்! அப்படியானால் இது ஒன்றுவது உறுதிதானா?"

"நாகு! மீண்டும் என்னைச் சங்கடப் படுத்தாதே. அவசரப்பட்டு உன்னிடம் ஏமாந்து போய்விட்டேன். அதற்கு இந்த ஒரு தண்டனையை நான் அனுபவித்துத் தான் ஆகவேண்டும். ஆனால் ஒன்று. உன்னுடைய மனத்தின் அந்தரங்கத்தில்




உங்கள் சரக்குகளை

## சிங்கப்பூர், ஜாகர்தா, மணில்லா, ஸிட்னி

### முதலிய ஊர்களுக்கு விமானத்தில் அனுப்புங்கள்

நேரம் மிச்சமாகிறது
பணம் மிச்சமாகிறது



உங்கள் சரக்குகளை பல மார்க்கெட்டுகளுக்கு கொண்டுபோக அவைகளை விமானத்தின் மூலம் அனுப்புவதே வேகமானதும், மலிவானதும், சுலபமான முறை.

- நீங்கள் பணம் மீதமாக்குகிறீர்கள்
- நீங்கள் நேரத்தை மீதப் படுத்துகிறீர்கள்
- நீங்கள் வியாபாரத்தை பெருக்குகிறீர்கள்
- நீங்கள் எல்லா மார்க்கெட்டுகளிலும் ஒரே சமயத்தில் சேவை செய்ய முடிகின்றது.

## ஏயர்-இந்தியா இன்டர்நேஷனல்

கனி மான்ஷன்ஸ், 85 மவுண்ட் ரோடு, மதராஸ். டெலிபோன்: 86194



வி. எஸ். வெங்கடேசலு B. Sc., கோவை பாப்ப நாய்க்கன் பாளையம் ஸ்ரீ வி. சீனுவாசலு நாயுடு அவர்களின் குமாரர். இவர் சென்னை சர்வகலா சாலையில் B. Sc., பட்டம் பெற்றபின் 1953-ம் ஆண்டில் இங்கிலாந்து சென்று அங்குள்ள பிளாக் பர்ன் முனிசிபல் தொழில் கல்லூரியில் பயின்று முதல்தரமாகப் பரீக்ஷையில் தேறிய பின்னர் ஜெர்மனி முதலான மேலை நாடுகளிலுள்ள ஜவுளி ஆலைகளையும் தொழில் ஸ்தாபனங்களையும் பார்வை யிட்டு அநுபவ ஆராய்ச்சியின் முதிர்ச்சியோடு தாய்நாடு திரும்புகிறார்.

இதுவே ஒரு பெரிய உதவி என்பது உனக்கும் நன்றாகத் தெரியும். இனி மஜீதைப் போய்ப் பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். அந்த இடத்திலேதான் உனக்குப் படுதோல்வி கிடைக்கப் போகிறது! உஸ்தாதின் வலது கையை ஒடித்தாயிற்று. இடது கை இருக்கிறது என்று நினைக்கிறாய். அந்த இடது கை இருக்கிறானே மஜீத், அவன் இனிமேல் உஸ்தாதின் இடது கை, வலது கை, இரண்டோடு மட்டும் இல்லை. உஸ்தாதின் உயிரே அவன்தான்!''

இப்படிப் பகோரான் சொல்லிக் கொண்டிருந்தபோதுதான் அப்பு அங்கே வந்து சேர்ந்தான். நாகரத்தினம் அந்த இடத்தை விட்டுக் கிளம்பியதும், பகோரான் இந்த விவரங்கள் அனைத்தையும் அப்புவிடம் சொன்னான். நாகரத்தினம் புறப்படுவதற்கு எழுந்தபோதே அவனுடைய மனம் உள்ளுக்குள்ளே யோசிக்க ஆரம்பித்தது; விஷம வலை விரிக்க ஆரம்பித்தது. இரண்டு தினங்களில் மீண்டும் வந்து சந்திப்பதாகச் சொன்னபோது, பகோரானை மறுபடியும் ஏதோ சூழ்ச்சிக்குள் வளைத்துவிடப் போவதாகத் தீர்மானித்து விட்டான் நாகு. உண்மையில் பின்னால் நடந்த சம்பவங்கள் இதை நன்கு நிரூபித்தன.

பகோரானுடைய உதவியை இனி எதிர்பார்ப்பதற்கு இடமில்லை என்று தெரிந்ததும் அப்புலிங்கத்துக்கு ஏமாற்றமாக இருந்தது. ஆனாலும் உறுதியை விடாதவனாக ஒன்று கேட்டான்.

"அது சரி, மஜீத் மனம் மாறமாட்டான் என்று எப்படிச் சொல்ல முடியும்?''

"அதுதான் தீர்ந்து போன விஷயமாயிற்றே! ஆமினாவின் நிக்காஹுக்கு அவன் காத்துக் கொண்டிருக்கிறான். உஸ்தாத் சரி என்று சொன்னால் போதும். உடனே முடித்து விடலாம்! நான் நேற்று அவனைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன்!'' என்றான் பகோரான்.

அப்புலிங்கத்துக்கு ஆனந்தம் உண்டாயிற்று. 'இந்த பகோரான் எத்தனை நல்லவனாக இருக்கிறான்! இவனைக் கூட உஸ்தாத் கொஞ்சம் சந்தேகப் பட்டாரே!' என்று எண்ணிக் கொண்டான். சொன்னான்:

"அப்படியானால் அந்த நிக்காஹைக் கூடிய சீக்கிரம் முடித்து விட்டால் நல்லது, பகோரான்!''

"நான் பேசியாயிற்று. இனிமேல் நீங்களே கூட மஜீதைக் கண்டு பேசி உஸ்தாதிடம் அழைத்துச் செல்லலாம். எந்த விஷயமும் மிராகதார் முன்னிலையில் தானே அவர் ஒப்புக்கொள்வது வழக்கம்!''

இதன் பிறகு சம்பவங்கள் துரிதமாக நடக்க ஆரம்பித்தன. அப்புலிங்கம் மஜீத் வீட்டுக்குப் போனான். அவனையும் அவனுடைய 'சாச்சா'வையும் சந்தித்துப் பேசினான். பிறகு இருவரையும் அழைத்துக் கொண்டு உஸ்தாத் வீட்டுக்கு வந்தான். உஸ்தாதோடு முதலில் தனியாகப் பேசினான். பிறகு அவர்களையும் உஸ்தாதையும் நேருக்கு நேராகப் பேசச் செய்து தான் எல்லா முடிவுகளையும் துரிதப்படுத்திக் கொண்டு வந்தான். உடனே மசூதிக்குச் சென்று டௌன் காஸியை அழைத்து வந்தான்.



அவருடைய சந்நிதியிலே மீண்டும் உஸ்தாதும், மஜீதும், அவனுடைய சகாக்களுமாகப் பேசினார்கள். 'நிக்காஹ்' நிச்சயம் ஆயிற்று.

அப்புலிங்கம் அன்று பாலக்கரையில் ஐந்தாறு தடவை தன்னுடைய காரை அப்படியும் இப்படியுமாக ஓட்டிக் கொண்டு சுற்றினான். ஒவ்வொரு தடவையும் எங்காவது ஒரு மூலையில் நாகரத்தினம் கண்ணில் பட்டுக் கொண்டேயிருந்தான். அதிலிருந்து அவன் மஜீதைத் தேடித் தேடித் திணறுகிறான் என்று தெரிந்தது. இப்படித் தெரிந்ததன் விளைவாக நிக்காஹைத் தள்ளிப் போடாமல் அவசரமாகவே முடித்து விடுவதுதான் புத்திசாலித்தனம் ஆகும் என்று அவனுக்குப் பட்டது.

இந்த எண்ணத்தை அப்பு டாக்டரிடம் சொன்னபோது டாக்டர் அதை முழு மனத்தோடு ஆமோதித்தார். "மனித மனம் ஒரு நிலையில் இல்லாத விஷயம். எனவே

தாமதம் இல்லாமல் இந்த நிக்காஹை முடித்துவிட வேண்டும். நீங்கள் மலைக் காட்டுக்கு வரவேண்டிய அவசியங்கூட இல்லை. நான் ரவீந்திரனை அழைத்துச் செல்கிறேன். நீங்கள் இங்கேயே இருந்து ஆமினா—மஜீத் கல்யாணத்தை முடித்து வையுங்கள். நான் திரும்பி வரும்போது உஸ்தாத் தம்முடைய மருமகனை எனக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டும்! தெரிந்ததா!'' என்றார் டாக்டர் சுரேஷ்.

டாக்டரின் யோசனைப்படியே ஏற்பாடுகள் நடைபெற்றன. கல்யாணியை வால்குடிக்கு அழைத்துக் கொண்டு சென்றார் கனகசுந்தரம். டாக்டர் சுரேஷ் ரவீந்திரனை அழைத்துக் கொண்டு, இரண்டு வேலைக்காரர்களின் துணையோடு மலைக்காட்டுக்குப்



புறப்பட்டார்—ஒரு வாரத்தில் திரும்பி விடுவதாகச் சொல்லிக் கொண்டு.

* * *

உஸ்தாத் மீரான் தம்முடைய மகளின் நிக்காஹ் விஷயமாக அதிக சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. அப்புலிங்கத்தின் தகப்பனருக்கு எத்தனையோ சந்தர்ப்பங்களில் பக்கபலமாக நின் றுதவியவர் உஸ்தாத். அப்புவுக்கோ உஸ்தாநிடம் தனியான ஒரு மரியாதை. இதெல்லாம் காரணமாக ஆமினாவின் நிக்காஹ் ஏற்பாடுகள் ஒரே தடபுடலாக நடைபெற்றன.

'தூலா' கோலத்தில் மலரினால் முகமூடி தரித்து, வெள்ளைக் குதிரையிலே ஏறினான் மஜீத். திருச்சிராப்பள்ளியிலுள்ள ஹாஜிகள், பக்கீர்கள், மௌல்விகள், சமாம்கள்—எல்லாரும் புனிதமான முறையில் "பைத்" சொன்னார்கள். பாலக்கரையில் உள்ள பணக்காரர், முதலாளிகள் எல்லாம் ஊர்வலத்திலே கலந்து கொண்டார்கள். உஸ்தாதின் செல்வாக்கு எத்தனை என்பது அந்த ஊர்வலத்தைப் பார்த்தால் தெரிந்தது. பாண்டு வாத்தியமும், 'ஜே ஜே' என்ற கூட்டமும், காஸ் லைட்டுகளுமாக அந்தப் பட்டணப் பிரவேசம் ஒரே திருவிழாப் போல இருந்தது. பொய்க்கால் குதிரை ஆட்டம் ஒரே அமர்க்களமாக முன்னால் நடந்து சென்று கொண்டிருந்தது. பிராகதார் முருகானந்தத்தின் வற்புறுத்தலின் பேரில், கிராமத் திருவிழாப் போல ஒரு கும்பக் குடமும், பம்பையும், சின்ன மேளமுமாக—இப்படி ஒரு கோஷ்டி வேறு இன்னொரு பக்கம் சென்று கொண்டிருந்தது! உஸ்தாதுக்கு இந்த அன்பையெல்லாம் கண்டு மனம் உருகி ஆனந்தத்தினால் கண்ணீர் வந்து விட்டது!

நிக்காஹ் சடங்குகள் பிரமாதமாக நடந்தன. 'மஜ்லி'ஸில் வைத்து 'முஹர்' கொடுக்கும் சடங்கிலே, மஜீதின் சார்பாக ஒரு பெரிய பணமுடிப்பை எடுத்து வைத்தான் அப்புலிங்கம். அந்த அன்பை காஸியார் ஒரே வியப்போடு பாராட்டினார். உண்மையில் அந்தச் சடங்கெல்லாம் நடந்த பிறகு, நிக்காஹுக்கு வந்திருந்த அனைவருக்கும் அப்புலிங்கம் தனது கையாலேயே பன்னீர் தெளிக்க ஆரம்பித்ததும் டௌன் காஸிக்கு உணர்ச்சியை அடக்க முடியவில்லை. அப்படியே ஓடி வந்து அப்புலிங்கத்தைத் தழுவி அணைத்துக் கொண்டு ஆசீர்வாதம் செய்தார்.

இங்கே திருச்சியில் இத்தனை சம்பவங்களும் மின்னல் வேகத்திலே ஓடிக் கொண்டிருந்த போதுதான் மாதுங்காவில் மாதர் கலைச் சங்கக் காரியதரிசி சாவித்திரி அம்மாளும் சந்திரிகாவும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"உங்கள் வீட்டிலேதானே இரவு இருடன் குதித்தான்?'' என்று சங்கத்தின் காரியாலயத்திலேயிருந்த சாவித்திரி அம்மாள் சந்திரிகாவிடம் கேட்டாள் அல்லவா? அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் சந்திரிகா திக்குமுக்காடினாள் அல்லவா? இதைக் கவனித்த சாவித்திரி அம்மாள் சொல்லுவாள்:

“ஏனம்மா, கேள்வி மேல் கேள்வியாகப் போட்டு உன்னைத் திணற அடிக்கிறேன் போலிருக்கிறது. வா, வீட்டுக்குப் புறப்படுவோம். நீ ரயிலிலிருந்து ஒரே களைப்போடு வந்திருக்கிறாய். முதலில் குளித்துக் காப்பி சாப்பிடு. அதன் பிறகு சாவகாசமாகப் பேசிக் கொள்ளுவோம்!” என்று சொல்லியவண்ணம் நாற்காலியை விட்டு எழுந்தாள் சாவித்திரி. சந்திரிகாவும் இருந்த இடத்தை விட்டு எழுந்து கொண்டே கேட்டாள்:

“வீட்டுக்குப் போவோம். ஆனால்—”

“ஆனால் இந்தத் திகைப்பு உன்னைப் பயப்படுத்துகிறது, நம்முடைய வீட்டில் திருடன் குதித்தது இவளுக்கு எப்படித் தெரிந்தது என்று. அப்படித்தானே?” என்று கேட்டாள் சாவித்திரி.

“அதுவுந்தான்!”

“அதெல்லாம் சாவகாசமாகச் சொல்கிறேன். சந்திரிகா என்பது நீதான் என்று தெரிந்த பிறகு, உன்னை இங்கே இப்படித் தாமதிக்க வைப்பது பிசகு! வா, உடனே வீட்டுக்குப் போவோம். எதிர்காலத்தில் ஒரு பெரிய நட்சத்திர நங்கையாக விளங்கப் போகிறவளை, சாதாரண உபசாரம் கூடச் செய்யாமல் ஆபீஸில் உட்கார வைத்துப் பேசினேன் என்று என் தம்பி ஆவலாதி சொல்லுவான். யார் ஆவலாதியையும் சகித்துக் கொள்ளலாம். ராமநாதன் ஆவலாதி சொல்ல ஆரம்பித்தால் அதைத் தாங்க முடியாது. பதில் பேசவும் முடியாது. என்ன பதில் சொன்னாலும் அதற்கும் மேல் ஒரு கேள்வி போட்டு நம்மைத் திணற அடித்து விடுவான். அந்தக் காலத்தில் நார்ட்டன் என்று சொல்லுவார்களே. அப்படிப் பேசுவான் ராமநாதன்!” என்று சொல்லிக் கொண்டே சந்திரிகாவை அழைத்துக் கொண்டு தானே காரை ஓட்டிக் கொண்டு வீடு நோக்கி விரைந்தாள் சாவித்திரி அம்மாள்.

இதற்கு முன்பு பெண்கள் கார் ஓட்டுவதைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாள் சந்திரிகா. ஆனால் பார்த்ததில்லை. இங்கே இந்த அம்மாள், இத்தனை வாகவத்தோடு, எதிரே காரும் வண்டியும் மனிதர்களும் கும்பலாக வருகிற வீதிகளிலெல்லாம் சற்றும் பயமில்லாமல் வேகமாகக் காரை ஓட்டிக் கொண்டு செல்வதை ஒரே ஆச்சரியத்தோடு கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்தாள் சந்திரிகா.

“எனக்கு ராமநாதன் தான் ‘ட்ரைவிங்’ சொல்லிக் கொடுத்தான். ஒரு வாரத்தில் வந்து விட்டது. என்னுடைய கெட்டிக்காரத்தனம் இல்லை அது. ராமநாதன் அத்தனை சாமர்த்தியமாக நான்கூட ஒரு வாரத்தில் கார் ஓட்டும்படி சொல்லிக் கொடுத்து விட்டான்.”

இந்த விதமாக ராமநாதனைப் பற்றியே வழி நெடுகப் பேசிக் கொண்டு சென்றாள் சாவித்திரி. அந்தப் பேச்சைக் கொண்டு ராமநாதனைப் பற்றி உருவகம் செய்தால், அவன் ஏதோ சாதாரண மனிதப் பிறவி இல்லை என்றே தோன்றும்! அப்படியிருந்தது அவளுடைய பாசப் பேச்சு.

சாவித்திரி அம்மாளின் வீடு மாதுங்காவில் விசாலமான இன்பப் பூங்காவுக்கு அருகிலே இருந்தது. வீடு விசாலமான வீடு. அந்த வீட்டுக்கு எதிரே ஒரு சிறு தோட்டம். அந்தத் தோட்டத்தில் அங்கங்கே ஸிமென்ட் பெஞ்சுகள் நின்றன. உள்ளே நுழைந்தால் பங்களாவின் முகப்பு மனசை வசீகரிக்கக்கூடிய விதத்தில் ஒரே சித்திர வேலைப்பாடுகளுடன் விளங்கியது. மானும், மயிலும், மரமும், செடியும், பூவும் கொடியுமாகக் கொத்து வேலையில் பல அலங்காரங்கள் செய்து முகப்பில் ஓட விட்டிருந்தார்கள். சந்திரிகா அந்த வேலைப்பாடுகளைக் கண்டு அதிசயித்துக் கொண்டே வீட்டினுள் நுழைந்தாள், “உங்கள் வீடு எத்தனை அழகாக இருக்கிறது!” என்று சொல்லிக் கொண்டே.

அந்த அழகான வீட்டில் ஒரு வாரம் கழிந்தது. இந்த ஒரு வாரத்திலும் சாவித்திரி அம்மாள், வீட்டில் இருந்த நேரம் மிக மிகக் குறைவு. கலை விழா சம்பந்தமாக அலைந்து கொண்டே இருந்தாள். அதோடு இல்லை. தான் போன இடங்களுக்கெல்லாம் சந்திரிகாவையும் உடன் கூப்பிட்டாள். சந்திரிகாவுக்கு எப்படியோ இருந்தது. இது வரை அவள் பழகிய முறையும், சூழ்நிலையும் வேறு. இப்பொழுது அந்தப் புதிய சூழ்நிலை அவளுக்குத் திகைப்பாக இருந்தது. ஆனால் சாவித்திரி அம்மாள் காட்டிய பிரியமும், செய்த உபசாரமும் சந்திரிகாவின் மனத்தைக் கொள்ளை கொண்டன. இது வரை ஒரு பெண்மணி தன்னிடம் இத்தனை பிரியமாக இருந்து, அந்தப் பிரியத்தை அனுபவித்து அறியாள் சந்திரிகா. எனவே, சாவித்திரி அம்மாளின் பிரியமும் பாசமும் அவளுக்குப் புதுமையாக இருந்ததோடு, ஆனந்தக் கண்ணீரே வரும்படியாகவும் இருந்தது, பல சந்தர்ப்பங்களில்.

ஒரு வாரமும் ஓட்ட சாட்டங்களிலும் அன்பு வெள்ளத்திலுமாகக் கழிந்தது. ஆனாலும் இரவு நேரங்களில்தான் அமைதி இல்லை. கட்டிலில் படுத்திருக்கும் போது, சந்திரிகாவுக்கு முன்னால் ரவீந்திரன் உருவம் வந்து நிற்கும். தான் ஓடி வந்து விட்டதை நினைத்துப் பார்க்கவே அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. ‘சாவித்திரி அம்மாளிடம் இன்னும் முழு விவரங்களையும் சொல்லவில்லையே’ என்று நினைப்பாள். ‘அவள் கலை விழா மும்முரத்திலேயே

இருக்கிறான். இப்பொழுது அவளுடைய மனதைக் குழப்பக் கூடாது!' என்று ஒரு நினைப்பு எழும். உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளுவாள். அந்த அறையிலே எத்தனை மின்சார விளக்குகள் இருந்த போதிலும் கண்ணுக்கும் உள்ளத்துக்கும் குளுமை தரக்கூடிய ஒரு மெழுகுவத்தி விளக்கும் சாவித்திரி அம்மாள் ஒரு மேஜை மேல் கலை அழகு ஒளி வீசும்படி வைத்திருந்தாள். சந்திரிகாவுக்கு அந்த மெழுகு வத்தி விளக்கை அணைக்கவே மனம் வராது. அந்த மங்கலான குளுமையான வெளிச்சத்தில் ரவீந்திரனே தன்னுடைய கண்ணுக்கு முன்னால் வந்து நிற்பதாக ஒரு பிரமை தோன்றும். அந்த விளக்கின் நிழல், அசைந்து அசைந்து ஆடும்போதெல்லாம் ரவீந்திரனே எழுந்து நின்று தனக்கு நடனம் கற்பிப்பது போல எல்லாம் தோன்றும் சந்திரிகாவுக்கு.

காலை விடியும் வரை படுக்கையில் அப்படியும் இப்படியும் புரண்டு கொண்டே கழிப்பாள் சந்திரிகா. வழக்கம் போல ஆறு மணிக்கெல்லாம் கையில் ஒரு டம்ளர் காப்பியுடன் சாவித்திரி அம்மாள் கட்டிலுக்கு அருகிலே வந்து நிற்பாள்.

"என்ன சந்திரிகா, இரவு நன்றாக உறங்கவில்லை போலிருக்கிறதே. புது இடம் அப்படித்தான் இருக்கும். சரியாக உறக்கம் வராது. ஒரு வாரம் கழித்தால் சரியாகி விடும்!" என்று அன்பு ததும்பும் புன்சிரிப்போடு கூறிவிட்டுக் காப்பியைக் கையிலே கொண்டு கொடுத்துச் செல்லுவாள்.

அந்த அன்பைப் பார்த்ததும் சந்திரிகாவுக்குப் பளிச்சென்று கல்யாணி அம்மாளின் ஞாபகம் வரும்.

"கல்யாணி அம்மாளும் இப்படித்தானே இருந்தாள் ஆரம்பத்தில். பிறகு தானே அவளுடைய மனம் விகல்பம் ஆயிற்று. அது அவளுடைய குற்றமா? இல்லை. அது விதியின் குற்றம்!" என்று நினைத்துக் கொள்ளுவாள் சந்திரிகா.

மறு கணம் சாவித்திரி அம்மாள் சிரித்த முகத்தோடு "என்ன சந்திரிகா, எழுந்து ஸ்நானம் பண்ணு. நேரம் ஆகிறதே!" என்று சொல்லிக் கொண்டே வரும்போது, அந்த அன்பிலே சஞ்சலம் எல்லாம் பறந்தோடிவிடும். சந்திரிகா படுக்கையை விட்டு எழுந்து செல்வாள்.

இப்படியாகக் கலை விழா தினம் வரை கழிந்தது. அதுவரை சாவித்திரி அம்மாள் சந்திரிகாவிடம் ஒரு விஷயத்தைச் சொல்லவே இல்லை. கலை விழா தினத்தன்று சந்திரிகா குளித்து நெற்றிக்குப் பொட்டு இட்டுக் கொண்டிருக்கும் போதுதான் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள் சாவித்திரி, கையில் கலைவிழா அழைப்பிதழை வைத்துக் கொண்டு.

"சந்திரிகா, இன்று கலை விழாவில், ஒரு நட்சத்திர நங்கை நடனம் ஆடுகிறாள் தெரியுமோ?" என்று கேட்டாள் சாவித்திரி. சந்திரிகாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

சாவித்திரி அம்மாள் பக்குவமாகப் பேச ஆரம்பித்தாள். அவளுடைய பிரியத்தையும், அவள் பேசிய மாதிரியையும் பார்த்துச் சந்திரிகாவுக்குப் பதில் பேச முடியவில்லை.

சாவித்திரி சொன்னாள்: "உன்னுடைய சந்திரிகா என்ற பெயரை வேண்டுமென்றால் நான் அறிவிக்கவில்லை. நிகழ்ச்சியில் நட்சத்திர நங்கை என்று ஒரு திடுக்கிடும் தலைப்பு கொடுத்திருக்கிறேன் அல்லவா? அதையே சபையிலும் சொல்லுகிறேன்!"

சந்திரிகாவுக்கும் மறுக்க முடியவில்லை. எப்படியோ மனத்தையெல்லாம் ஒருமுகப் படுத்திக் கொண்டு சரி சொன்னாள்.

இதன் பிறகுதான் கலை விழாவில் நட்சத்திர நங்கையாகத் தோன்றினாள் சந்திரிகா. சாவித்திரி அம்மாளுக்கு ஒரே மகிழ்ச்சி. பாவம், அந்த மகிழ்ச்சியில் இப்படி ஒரு மயங்கி விழுகிற சம்பவம் நடக்கும் என்று அவள் எதிர்பார்த்தாளா? இல்லை.

**" —அவன்கை**
**இட்ட இடத்திலெல்லாம்**
**தண்ணென் றிருந்ததடி "**

என்ற பாட்டு வந்ததும் சந்திரிகா அப்படி மயங்கி விழுவானேன்?

மயங்கி விழுந்த சந்திரிகாவுக்குத் திரைக்குப் பின்னால் முதல் உதவி சிகிச்சை நடந்தது. கலை விழா அத்துடன் முடிந்தது என்ற செய்தியை மேடையின்மேல் ஒரு குரல் அறிவித்தது. போலீஸ் ஜவான்கள் குழப்பமான கூட்டத்தை வகைப் படுத்தி அனுப்புவதில் முனைந்தார்கள். அநேகம் பேர் மேடைக்கே வந்து நட்சத்திர நங்கையின் உடல் நிலையைத் தெரிந்து கொள்ள எண்ணினார்கள்.

சந்திரிகா கண்ணைத் திறந்து பார்த்தாள். இழைந்த மூச்சு மெதுவாக இயங்க ஆரம்பித்தது. இதற்குள் "கார் தயாராக இருக்கிறது!" என்று ஒரு சிறுமி வந்து சாவித்திரியிடம் சொன்னாள். உடனே நாலைந்து பெண்மணிகளாகச் சேர்ந்து சந்திரிகாவைக் கைத் தாங்கலாக எடுத்துக் கொண்டு மேடைமேல் இருந்த உள் வாசல் வழியாகக் காருக்கு அழைத்து வந்தார்கள். சாவித்திரி அம்மாளோடு இன்னொரு பெண்மணியும் காரில் ஏறிக் கொண்டாள். கூட்டம் வந்து காரை மொய்ப்பதற்குள், சாவித்திரி அம்மாள் காரை வேகமாக ஓட்டினாள். ஆனால் ஆஸ்பத்திரியை நோக்கிக் காரை ஓட்டிக் கொண்டிருந்தவள் திடீரென்று ஏதோ நினைத்தவளாகக் காரைச் சட்டென்று வீட்டை நோக்கித் திருப்பினாள்.

(தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon